உ

ஸ்ரீ ராமசந்த்ர பரப்ரஹ்மணே நம:

ஸ்ரீமத்

# வால்மீகி ராமாயணம்

## ஆரண்ய காண்டம்

தமிழ் வசனம்

—:o:—

கீர்த்தனாசார்ய
வி. ஆர். ஸ்ரீநிவாஸய்யங்கார், பி. ஏ.
அவர்களால் எழுதப்பெற்றது.

மூன்றும் பதிப்பு

(பாகம் 5)

சென்னை
ஹக்ஸ்லி பிரெஸ்
1955

காபி ரைட்]

# ஆரண்ய காண்டம்

## விஷய அட்டவணை

—:o:—

—:o:—

## ஸர்க்கம் 14.

## ஜடாயு வம்சம்

பருத்த சரீரத்துடன் பார்க்கப் பயங்கரமாக ஒரு கழுகு, போகும் வழியில் ஆலமரத்தில் உட்கார்ந்திருப்பதைப் பார்த்து ராக்ஷஸனென்றெண்ணி ராம லக்ஷ்மணர்கள் "நீயார்"ரென்றூர்கள். அது மிகுந்த ப்ரியத்துடன் மதுரமாகக் "குழந்தாய்! நான் உங்கள் பிதாவிற்கு மித்ர"னென்றது. ராமன் அதை வணங்கி மர்யாதை செய்து அதன் குலத்தையும் பெயரையும் கேட்டார். அந்தப் பக்ஷி ஸகல பூதங்களின் உத்பத்தியையும் தன் குலக்ரமத்தையும் சொல்லவாரம்பித்தது. "முன்காலத்தில் கர்த்தமர் விக்ரீதர் சேஷர் ஸம்ச்ரயர் ஸ்தாணு மரீசி அத்ரி க்ரது புலிஸ்த்யர் அங்கிரஸ் ப்ரசேதஸ் புலஹர் தக்ஷர் விவஸ்வான் காச்யபரென்ற ப்ரஜாபதிகளிருந்தார்கள். தக்ஷருக்கு அறுபது பெண்கள். அவர்களில் அதிதி திதி தனு காளிகை தாம்ரை க்ரோதவசை மனு அனிலையென்ற எட்டுப் பெண்களைக் காச்யபர் மணம்புரிந்து 'மூன்று லோகங்களுக்கும் பாலகர்களான புத்ரர்களைப் பெறுங்க'ளென்று உத்தரவு செய்தார். அவர்களில் அதிதி திதி மனு காளிகை அதற்கு ஸம்மதித்தார்கள். மற்றவர்கள் ஸம்மதிக்கவில்லை. பன்னிரண்டு ஆதித்யர்களும் எட்டு வஸுக்களும் பதினொரு ருத்ரர்களும் இரண்டு அச்வினி தேவர்களும் அதிதிக்குப் பிறந்தார்கள். திதிக்குத் தைத்யர்கள் பிறந்தார்கள். அந்தக் கீர்த்திசாலிகள் ஆதிகாலத்தில் இந்தப் பூமியை ஆண்டார்கள். தனுவிற்கு அச்வக்ரீவனென்ற தானவன் பிறந்தான். நரகனும் காலகனும் காளிக்கைக்குப் பிறந்தார்கள். க்ரௌஞ்சீ பாஸி ச்யேனி திருதராஷ்ட்ரீ சுகியென்ற ஐந்து பெண்கள் தாம்ரைக்குப் பிறந்தார்கள். க்ரௌஞ்சீயிடத்தில் கோட்டான்களும், பாஸியிடத்தில் கோழிகளும், ச்யேனியிடத்தில் கழுகுகளும், பருந்துகளும், திருதராஷ்ட்ரியிடத்தில் ஹம்ஸங்களும், கலஹம்ஸங்களும் சக்ரவாகங்களும், சுகியிடத்தில் நதையும் அவளுக்கு வினதையும் பிறந்தார்கள். மிருகி மிருகமந்தா ஹரி பத்ரமாதா மாதங்கி சார்தூலி ச்வேதா ஸுரபி ஸுரஸா கத்ருகாவென்ற பெண்கள் க்ரோதவசைக்குப் பிறந்தார்கள். மிருகியிடத்தில் மான்களும், மிருகமந்தவிடத்தில் கரடிகளும், சவுரிமான்களும், சாமரமிருகங்களும், ஹரி

யிடத்தில் ஸிம்ஹங்களும் வானரங்களும், பத்ரையிடத்தில் இராவதியும், பிறந்தார்கள். அவளுடைய புத்ரன் லோகப்ரஸித்தனான ஐராவதமென்னும் மஹாகஜம். மாதங்கியிடத்தில் யானைகளும், சார்தூலியிடத்தில் புலிகளும் நீண்ட வாலுள்ள குரங்குகளும், ச்வேதையிடத்தில் திக்கஜங்களும், ஸுரபியிடத்தில் ரோஹிணீயும் கந்தர்வியும், ரோஹிணீயிடத்தில் பசுக்களும், கந்தர்வியிடத்தில் குதிரைகளும், ஸுரஸையிடத்தில் அநேக படங்களுள்ள ஸர்ப்பங்களும், சத்ருவிடத்தில் ஸாதாரண ஸர்ப்பங்களும், மனுவிடத்தில் ப்ராஹ்மண க்ஷத்ரிய வைச்ய சூத்ரர்களான மனுஷ்யர்களும் அனலையிடத்தில் ருசியுள்ள பழங்களையுடைய மரங்களும், சத்ருவிடத்தில் ஆயிரம் தலைகளுடன் பூமியைத் தரிக்கும் ஆதிசேஷனும், வினதையிடத்தில் கருடனும் அருணனும் பிறந்தார்கள். அருணனுக்கு ச்யேனியிடத்தில் ஸம்பாதியும் ஜடாயுஸென்ற நானும் பிறந்தோம். (மேற்சொன்ன ச்யேனி இவளல்ல). இந்த வனத்தில் துஷ்டமிருகங்களும் ராக்ஷஸர்களும் அதிகம். ஆகையால் நீங்கள் வேட்டையாடப் போனால் நான் ஸீதைக்குத் துணையாக இருப்பே”னென்றது.

அதைக் கேட்டு ராமன் ஜடாயுவை வெகு ப்ரியத்துடன் ஆலிங்கனஞ் செய்து, தங்கள் பிதாவின் மித்ரனானதால் அதற்கு விசேஷ மர்யாதை செய்தார். பிறகு அந்த பலவானான பக்ஷியிடத்தில் ஸீதையை ஒப்புவித்து, விளக்குவெட்டுப்பூச்சிக்களை நெருப்பு எரிப்பதுபோல், ராமலக்ஷ்மணர்கள் சத்ருக்களை நாசஞ்செய்ய விரும்பிப் பஞ்சவடியை நோக்கிப் போனார்கள்.

——:o:——

ஸர்க்கம் 15.

## பர்ணசாலை கட்டினது

பஞ்சவடிக்கு வந்த பிறகு, ராமன் தனக்குக் கைங்கர்யம் செய்யவே ஸுமித்திரையால் கொடுக்கப்பட்டு அதற்குத் தகுந்த பக்தியும் சக்தியும் நிறைந்து அதற்கேற்ற காலமும் தேசமும் நேர்ந்ததைப்பற்றி ஸந்தோஷித்த மஹாவீரனான லக்ஷ்மணனைப் பார்த்து “மஹர்ஷி குறிப்பிட்ட தேசம் இதே. புஷ்பங்கள் நிறைந்த மரங்கள் எங்குமுள்ள பஞ்சவடி இதே. வனங்களில்

அதிகமாக ஸஞ்சரித்தவனானதால் எந்த விடத்தில் ஆச்ரமத்தை ஏற்படுத்தலா’மென்று நான்கு புறங்களிலும் பார். ஸீதைக்குப் புஷ்பங்களிடத்தில் மிகுந்த ப்ரீதி; ஆகையால் அவ்விதமான மரங்கள் நிறைந்திருக்கவேண்டும். ஸுகமாகப் படுக்கக்கூடிய இடம் எனக்கு வேண்டும். ஆகையால் மேடுபள்ளமில்லாமலும் மிருதுவான மணல் பாய்ந்ததுமான ஸ்தலமாக இருக்கவேண்டும். ஸமித் புஷ்பங்கள் தர்ப்பை ஜலம் முதலியவை ஸமீபத்திலிருக்க வேண்டும். எல்லா சுச்ருஷையையும் நீயல்லவா செய்யவேண்டும்? ஆகையால் நம்மெல்லோருக்கும் அனுகூலமான ஓரிடத்தைப்பா” ரென்றார்.

இப்படித் தன் ஸௌக்யத்தையும் ஆலோசித்துச் சொன்ன வார்த்தையைப் பொறுக்காமல், லக்ஷ்மணன் ஸீதையைப் புருஷா காரமாகக்கொண்டு (சிபார்சாக) “ஸ்வாமி! தாங்கள் ப்ரபு. நானே தங்களுடைய தாஸன். தங்களுடைய ஸ்வரூபம் வேறு. அடிமை வேலை செய்வதே என் ஸ்வரூபம். இது தாங்கள் வைகுண்டத் தில் எழுந்தருளியிருக்கும்போது மாத்ரமல்ல; அவதார காலத்தி லும் எப்பொழுதுமுண்டு. தங்களுக்கும ஸீதைக்கும் ஸுகமான விடத்தைப் பாரென்று தாங்கள் கட்டளையிடுவது எனக்கு அழகேயொழிய என் ஸௌக்யத்தையும் ஆலோசிப்பது தகாது. ஆகையால் தாங்களே தங்களுக்கு அனுகூலமானவிடத்தைத் தேடி எனக்கு உத்திரவு செய்யவேண்டு”மென்று ப்ரார்தித் தார். ராமன் அதைக் கேட்டு மிகுந்த ஸந்தோஷமடைந்து நன்றாக யோசித்து ஓரிடத்தைக் குறிப்பிட்டு, மிகுந்த ப்ரீதியால் லக்ஷ்மணனுடைய கையைப் பிடித்துக்கொண்டு “குழந்தாய்! இவ்விடம் மேடுபள்ளமில்லாமல், பார்ப்பதற்கு அழகாகப் புஷ்ப முள்ள மரங்களால் நிறைந்திருக்கிறது. ஆச்ரமத்தை இங்கே ஏற்படுத்து. நல்ல வாஸனையுள்ள மலர்ந்த தாமரைகள் விளங்கும் ஓடைகள் ஸமீபத்திலிருக்கின்றன. மஹாஞானியான அகஸ்த்யர் சொன்னபடி கோதாவரியின் ஸமீபத்திலிருக்கிறது. கரைகளில் புஷ்பவிருக்ஷங்கள் நிறைந்திருக்கின்றன. ஹம்ஸம் நீர்க்கோழி சக்ரவாகம் முதலிய பக்ஷிகளால் அலங்கரிக்கப்பட்டிருக்கிறது. மலைகள் அதிக தூரத்திலுமில்லை. அதிக ஸமீபத்திலுமில்லை; மான் கள் கூட்டங் கூட்டமாக நடமாடுகின்றன. மயில்கள் இனிமை

யாகக் கூவுகின்றன. பக்கங்களில் அழகிய குஹைகளிருக்கின்றன. புஷ்ப விருக்ஷங்களால் மறைந்திருக்கின்றன. அங்கங்கே வெள்ளி தங்கம் தாம்ரம் முதலிய தாதுக்களால் நிறைந்து ஜன்னல்களைப்போன்ற பலவர்ணங்களால் அலங்கரிக்கப்பட்ட யானைகளை ஒத்திருக்கின்றன. ஆச்சா பனை பச்சிலை பேரீச்சை பலா மா நீர்க்கடம்பு தினிசி புன்னாகம் தேன்மா அசோகம் மஞ்சாடி சம்பகம் தாழை சந்தனம் ஸ்பந்தம் நிலக்கடம்பு கருப்புக்கஞ்சாங்கோரை எலுமிச்சை தவம் கருங்காலி பலாசம் பருத்தி வன்னி முதலிய மரங்கள் செழித்து வளர்கின்றன. இது புண்யஸ்தலம். இது பரிசுத்தமானவிடம். மிருகங்களாலும் பக்ஷிகளாலும் நிறைந்திருக்கிறது. இங்கே ஜடாயுஸுடன் ஸௌக்கியமாக வஸிப்போ" மென்றார்.

பிறகு லக்ஷ்மணன் அதிவிரைவாக ஒரு விஸ்தாரமான ஆச்ரமத்தைக் காட்டினார். மண்ணால் சுவர்வைத்து மூங்கில்களால் தூண்களை நாட்டி மேலே விட்டங்களைப் போட்டு, வன்னிமரக்கிளைகளை அவைகளின்மேல் அடர்த்தியாகப் பரப்பி, மரவுரிகளால் செய்த கயிறுகளைப் போட்டு இறுக்கிக்கட்டினார். அதற்கு மேல் நாணல் தர்ப்பை கோரை இலைகள் முதலியவைகளைப் பரப்பி, தரையை மேடு பள்ளமில்லாமல் ஒழுங்குபடுத்தினார். பிறகு கோதாவரியில் நீராடிப் புஷ்பங்களையும் பழங்களையும் கொண்டு வந்து வாஸ்துபூஜை முதலிய கிருஹசாந்திகளை விதிப்படி செய்து ராமனை அழைத்து வந்து காட்டினார். அவரும் ஸீதையும் அதைப் பார்த்து மிகுந்த ஸந்தோஷமடைந்தார்கள். ராமன் "குழந்தாய்! இந்தப் பர்ணசாலை வெகு அழகாகவும் ஆச்சர்யப்படக்கூடியதாகவும் கட்டப்பட்டிருக்கிறது. உன்னிடத்தில் எனக்குள்ள ஸந்தோஷத்திற்கு எல்லையில்லை. அதற்குத் தகுந்தபடி வெகுமதி செய்ய இப்பொழுது ஸௌகர்யமில்லை. ஆகையால் அதற்குப் பதிலாக உன்னை மஹா ப்ரேமையுடன் அணைத்துக்கொள்ளுகிறேன். ஸீதையுடன் தனியாகவிருக்க ஓரிடம்வேண்டுமென்று நான் நினைத்தேனேயொழிய உன்னிடத்தில் சொன்னதில்லை. என் அபிப்ராயத்தை எப்படியோ அறிந்து என்னிஷ்டப்படி செய்தாய். தசரதருக்கு வெகுகாலம் வரையில் புத்ரனில்லாமல் பிறகு நாம் பிறந்தோம். ஆகையால் நாம் க்ஷேமமாக வஸிக்கவேண்டு

மென்று சந்த்ரபலம் நக்ஷத்ரபலம் முதலியவைகளை யோசித்து இந்த ஆச்ரமத்தைக் கட்டினாய். நீ ராஜகுமாரனாயிருந்தும் உன் ஸௌகர்யத்தைக் கொஞ்சங்கூட யோசிக்காமல் என் ஸௌகர்யத்தையே கவனித்து இந்தப் பர்ணசாலையைக் கட்டினாய். என் ஸந்தோஷத்தையே உனக்கு மேலான ப்ரயோஜனமாகக்கொண்டாய். புத்தென்ற நரகத்திலிருந்து பிதாவைக் கரையேற்றுகிறவனே புத்ரன். என்னிஷ்டத்தைப் பூர்த்தி செய்யாமலிருப்பதே நமது பிதாவிற்கு நரகத்தைப் போன்றது. நீ என்னிஷ்டப்படி நடப்பதால் அந்த நரகத்திலிருந்து அவரைக் கரையேற்றினாய். தான் உள்ளவரையிலும் அவர் என்னிஷ்டங்களைப் பூர்த்திசெய்தார். தான் இறக்கும்போதும் அதே கார்யத்தில் உன்னை நியமித்திருக்கிறார். ஆகையால் என் பிதா மரணமடையவில்லை. நீயே எனக்குப் பிதா. உன் ரூபமாக என் ஸகல மனோரதங்களையும் அவர் பூர்த்தி செய்துகொண்டிருக்கிறா"ரென்று சொன்னார். அவ்விடத்தில் அவர்கள் சிலகாலம் ஸுகமாக வஸித்துக்கொண்டிருந்தார்கள். ஸீதையாலும் லக்ஷ்மணனாலும் ஸகல பணிவிடைகளையும் செய்யப் பெற்று ராகவன், தேவலோகத்தில் இந்த்ரன் விளங்குவதுபோல் அங்கே காலங் கழித்தார்.

—:o:—

## ஸர்க்கம் 16.

## ஹேமந்த ருது

அவர்கள் அங்கே தங்கியிருக்கையில் சரத் ருது கழிந்து ஹேமந்த ருது ஆரம்பித்தது. அது தபஸ்விகளுக்கு வெகு அனுகூலமான காலம். கர தூஷணர்களுடைய வதத்திற்கு மூலமான சூர்ப்பநகையின் வரவிற்குக் காரணமானதால் ராமனுடைய உத்தேசத்திற்கும் அனுகூலமான காலம். இடைவிடாமல் அணைந்து கொள்ளக்கூடிய காலமாகையால் ப்ரியமுள்ள ஸ்த்ரீபுருஷர்களுக்கும் மிகவும் அனுகூலமான காலம்.

ஒருநாட் காலையில் அவர்கள் மூவரும் கோதாவரியில் நீராடப்போனார்கள். அப்பொழுது லக்ஷ்மணன் 'அண்ணா! தங்களுக்கு ப்ரியமான ஹேமந்த ருது ஆரம்பித்துவிட்டது. இதனால் ஸம்வத்ஸரம் சுபமாகவும் அலங்காரத்தோடும் விளங்குகிறது.

இந்தக் காலத்தில் ஜனங்களுடைய தேஹம் பனியால் மிருது வாகவிராது. பூமியில் பயிர்கள் செழித்து வளர்கின்றன. ஜலத் தைத் தொடமுடியாது. நெருப்பு மிகவும் ப்ரியமாகவிருக்கும். கிருஹஸ்தர்கள் ஒவ்வொரு வர்ஷத்திலும் புதிய தான்யத்தை வீட் டில் கொண்டுவந்தவுடன் ஆக்ரயணமென்ற பாகயக்ஞத்தைச் செய்து பிதிருதேவதைகளை மகிழ்வித்துப் பாபங்களிலிருந்து விடு படுகிறார்கள். வெளிதேசங்களில் வஸிப்பவர்களுக்கு ஆசை அதிக மாக வளரும். பால் தயிர் முதலியவை வேண்டியவரையில் கிடைக் கும். அரசர்கள் சத்ருக்களை ஜயிக்கப் படையெடுத்துச் செல்வார் கள். ஸூர்யன் தென்திசையில் அதிகமாக விருப்பதால் வடதிசை, நெற்றியில் திலகமில்லாத பெண்ணைப்போல் ப்ரகாசிக்கவில்லை. இயற்கையாகவே பனிக்கட்டிகளால் நிறைந்த ஹிமயமலை இப் பொழுது பனியால் அதிகமாக மூடப்பட்டு, ஹிமாலய (பனிக்கு இருப்பிட) மென்ற பெயரை உண்மையாகச் செய்கிறது. ஸூர் யன் நடுப்பகலில் ஸுகமான உஷ்ணத்தைக் கொடுக்கிறான். இந்தக் காலத்தில் அவனை ஸுலபமாகப் பார்க்கலாம். நிழலும் ஜலமும் வெறுப்பையுண்டாக்குகின்றன. ஸூர்யன் கடுமையாக எரிக்கிறதில்லை. குளிர் வெகு அதிகம். மரங்களில் இலைகளில் லாததால் வனத்தில் நடமாடும் ப்ராணிகள் குளிரால் வருந்தி வெளியில் போகமுடியாமல் மறைந்திருக்கின்றன. ஜனங்கள் குளி ருக்குப் பயந்து தேஹத்தை மூடக்கிக்கொண்டிருக்கிறார்கள். ராத்ரிகளில் ஜனங்கள் திறந்தவிடங்களில் படுக்கமாட்டார்கள். புஷ்ய மாஸம் நெருங்கிவிட்டது. பனி விழுந்து எங்கும் சிவப் பாகச் தோன்றுகிறது. ராத்ரிகளில் குளிர்காற்று அதிகம். பகல் கொஞ்சம், ராத்ரி காலம் அதிகம். சந்த்ரன் தன் அழகையும் அதிகாரத்தையும் ஸூர்யனுக்குக் கொடுத்துவிட்டுப் பனியால் மறைக்கப்பட்டு, மூச்சுக்காற்றால் மங்கின கண்ணாடியைப்போல ப்ரகாசிக்கவில்லை. பௌர்ணிமா தினத்தில் பனியால் ராத்ரி, ப்ர காசம் குறைந்து, வெயிலால் கறுத்து வாடின ஸீதையைப்போல் தோன்றுகிறது. ஆனால் ஸீதையின் காந்தி அதற்கில்லை. மேற் குக்காற்று ஸ்வபாவமாகவே குளிர்ச்சியுள்ளது. இப்பொழுது பனியும் சேர்ந்து அது அதிகமாயிற்று. காடுகளில் யவை கோதுமை முதலிய தான்யக்கதிர்கள் ஸூர்யோதய காலத்தில் நீர்த்துளிகளால் நிறைந்து, க்ரௌஞ்சம் வண்டாழ்வான்குருவி

முதலிய பக்ஷிகள் அவைகளின் நடுவிலிருந்து கூவும்பொழுது, வனங்கள் கண்ணீர்விட்டுக் கதறுவதுபோல் தோன்றுகின்றன. தங்க நிறமுள்ள சம்பாப்பயிர்கள் கதிர் முதிர்ந்து தலைவணங்கிப் பேரீச்சம் புஷ்பங்களைப்போன்ற நுனிகளுடன் விளங்குகின்றன. ஸூர்யன் ஆகாசத்தில் வெகுதூரம் போனாலும் பனியால் மறைக்கப்பட்ட கிரணங்களுடன் சந்த்ரனைப்போல் தோன்றுகிறான். முன்பகலில் ஸூர்யனுடைய உஷ்ணம் கொஞ்சம் தெரிகிறது; நடுப்பகலில் ஸுகமாக இருக்கிறது; சிவப்பு நிறமுள்ள வெயிலும் கொஞ்சம் வெளுத்துப் பூமியில் அடிக்கிறது. எப்பொழுதும் பனி விழுவதால் இளம்புல்லுகள் நனைந்து, காட்டுப்பூமிகள் இளம் வெயிலில் ப்ரகாசிக்கின்றன. காட்டுயானைகள் மிகவும் தாஹமெடுத்து ஜலங்குடிக்கத் துதிக்கையை நீட்டி, மிகுந்த குளிர்ச்சியாயிருப்பதால் குடிக்காமல் திரும்பி வருகின்றன. யுத்தப்பயிர்ச்சியில்லாதவர்கள் சண்டையில் போக அஞ்சுவதைப் போல், நீர்ப் பறவைகள் ஜலத்தில் இறங்காமல் உட்கார்ந்திருக்கின்றன. காட்டுவழிகள் பனியால் மறைக்கப்பட்டு புஷ்பங்களின்றித் தூங்குவதுபோல் காணப்படுகின்றன. ஆறுகளிலும் ஜலம் பனியால் மூடப்பட்டிருக்கிறது. வண்டாழ்வான் குருவிகளிருக்குமிடத்தை அவைகளின் குரலாலேயே கண்டுபிடிக்கவேண்டியிருக்கிறது. கரையிலுள்ள மணல் பனியால் நனைந்திருக்கிறது. மலையின் உச்சியிலுள்ள ஜலமும் பனி விழுவதாலும் ஸூர்யகிரணம் மந்தமாயிருப்பதாலும் ருசியாகவிருக்கிறது. தாமரைகள் பனியால் கருகி இதழ்கள் உதிர்ந்து தண்டுகள் மாத்ரம் முதிர்ந்த தாமரையோடைகள் விளங்கவில்லை.

இந்தக் காலத்தில் புருஷோத்தமனான பரதன் தங்களிடத்திலுள்ள பக்தியால் தர்மத்தை நாடி நந்திக்ராமத்தில் அதிக துக்கத்துடன் தபஸ்செய்கிறார். ராஜ்யத்தையும் போகங்களையும் அதிகாரத்தையும் விட்டு ஆஹாரநியமத்துடன் வெறுந்தரையில் படுத்திருக்கிறார். இந்த வேளையில் அவர் ராஜ்ய உத்யோகஸ்தர்களால் சூழப்பட்டு ஸரயூநதியில் நீராடப்போவார். வெகு ஸுகமாக வளர்க்கப்பட்டவர். ஸுகத்தையே அனுபவிக்கத்தகுந்தவர். மிருதுவான சரீரத்தையுடையவர். விடியுமுன் அந்தக் குளிர்ந்த ஜலத்தில் எப்படி ஸ்நானஞ் செய்வார்? தர்மங்களை அறிந்தவர், ஸத்யவான், இந்த்ரியங்களை ஜயித்தவர், கெட்ட கார்யங்களை செய்யாமல்

வெட்கத்தால் தடுக்கப்படுகிறவர், மஹாவீரன்; தாமரை இதழ்களைப் போன்ற நேத்ரங்களுடையவர்; நீலமேகவர்ணர், படிந்த வயிற்றை யுடையவர், முழங்கால்வரையில் நீண்ட கைகளையுடையவர், எல்லோரிடத்திலும் ப்ரியமாகப்பேசுகிறவர்; மஹா பாக்யசாலி. இப்படியிருந்தும் பலவிதமான போகங்களை விட்டு எல்லோரும் பூஜிக்கத்தகுந்த தங்களையே எவ்விதத்திலும் அண்டியிருக்கிறார். தாங்கள் வனத்திலிருந்தாலும் தாங்கள் அனுஷ்டிக்கும் தபஸ்வி தர்மத்தையே அந்த மஹாத்மா அனுஷ்டிக்கிறார். ஆகையால் அவருக்கு உத்தம லோகங்கள் நிச்சயமாகக் கிடைக்கும். 'மனிதர்கள் தங்களுடைய தகப்பனைப்போலிருப்பதில்லை; தாயின் ஸ்வபாவத்தையே அடைகிறார்க'ளென்ற லோகவசனம் அவரால் பொய்யாக்கப்பட்டது. தசரதரைக் கணவனாகவும் ஸாதுவான பரதனைப் பிள்ளையாகவுமுடைய கைகேயீயிக்கு இந்த க்ரூரஸ்வபாவம் எங்கிருந்து வந்த"தென்று மிகவும் தர்மவானான லக்ஷ்மணன் பரதனிடத்திலுள்ள ஸ்நேஹத்தால் கைகேயீயை நிந்தித்தார்.

ராமன் அதைப் பொறுக்காமல் "உன் தாயான கைகேயீயை ஒருநாளும் நிந்திக்கக்கூடாது. புருஷச்ரேஷ்டனான பரதனுடைய குணங்களைப்பற்றியே சொல். வனவாஸம் செய்வதில் என் மனஸ் உறுதியாக இருந்தாலும், பரதனிடத்திலுள்ள ஸ்நேஹத்தால் அவனை இப்பொழுதே பார்க்கவேண்டுமென்று ஆசையுண்டாகிறது. ப்ரியமாகவும் மதுரமாகவும் ஹிதமாகவும் அமிருதத்தைப் போலவும் மனதிற்கு ஆனந்தத்தைக் கொடுப்பதாகவுமிருக்கும் பரதனுடைய வார்த்தைகள் எனக்கு அடிக்கடி ஞாபகத்திற்கு வருகின்றன. நானும் நீயும் பரதனும் சத்ருக்னனும் சேர்ந்து எப்பொழுது ஸுகப்படுவோமோ"வென்று ப்ரலாபித்துக்கொண்டு, அவர்கள் நதியில் நீராடிப் பிதிருக்களுக்கும் தேவதைகளுக்கும் ஜலதர்ப்பணஞ் செய்து, ஸூர்யனையும் தேவதைகளையும் ஸ்தோத்ரஞ்செய்தார்கள். ராமன் ஸ்நானஞ் செய்து ஸீதையுடனும் லக்ஷ்மணனுடனும் திரும்பி வரும்பொழுது, ருத்ரன் ஸ்நானஞ் செய்து பார்வதியோடும் நந்தியோடும் திரும்பிவருவதுபோல் விளங்கினர்.

——:o:——

## ஸர்க்கம் 17.

## சூர்ப்பநகை

பிறகு ஆச்ரமத்திற்கு வந்து முன்பகலில் செய்யவேண்டிய நித்யகர்மங்களைச் செய்து, பர்ணசாலையில் போய் மஹர்ஷிகளால் பூஜிக்கப்பட்டு பலவிஷயங்களைப்பற்றிப் பேசிக்கொண்டிருந்தார். இப்படி சித்ரா நக்ஷத்ரத்துடன் கூடின சந்த்ரனைப்போல் ஸீதை யுடன் விளங்கும் ராமனிருக்குமிடத்திற்கு ஒரு ராக்ஷஸி தானாக வந்தாள். அவள் ராவணனுடைய தங்கை, சூர்ப்பநகையென்ற பெயருடையவள். ஸிம்ஹத்தின் மார்பையும் முழங்கால்வரை யில் நீண்ட கைகளையும் மதயானையின் நடையையும் தாமரைமலர் போன்ற கண்களையும் கருநெய்தல்களைப்போன்ற தேஹகாந்தியையு முடையவராக ஜடாமண்டலத்தைத் தரித்துக்கொண்டு ராஜலக்ஷ ணங்கள் விளங்க உட்கார்ந்திருக்கும் ராமமூர்த்தியைப் பார்த்து, மன்மதனைப் பழிக்கும் அவருடைய அழகிற்கும் கோடிஸூர்யர் களைப் பழிக்கும் தேஜஸிற்கும் சந்த்ரனைப் பழிக்கும் முககாந்திக்கும் இந்த்ரனும் நினைக்கமுடியாத பராக்ரமத்திற்கும் அடிமையாகி ஆசைக்குத் தன் மனதை இழந்தாள்.

ஸகல உத்தம லக்ஷணங்களும் பொருந்தின முகத்தையுடைய வர் ராமன்; பார்க்க பயங்கரமான முகத்தையுடையவள் சூர்ப்ப நகை. ஸிம்ஹத்தைப்போன்ற சிறுத்த இடையுயைடையவர் ராக வன், பேரியைப்போல் பருத்த வயிறையுடைவள் அந்தராக்ஷஸி. தாமரையிதழ்களைப்போல் விசாலமாக செவ்வரிபரந்த நேத்ரங்களை யுடையவர் ரகுவீரன், பார்க்கப் பயங்கரமான நேத்ரங்களை யுடையவள் சூர்ப்பநகை. கறுத்து அடர்ந்து சுருண்ட மயிரை யுடையவர் ராமன், நெருப்புக்கொழுந்தைப்போல் சிவந்து விரித்த குறுகிய தலைமயிரையுடையவள் சூர்ப்பநகை. ராமனுடைய ரூபத் தைப் பார்ப்பவர்களுக்கு அவரிடத்தில் எல்லையற்ற ப்ரீதியுண்டா கும்; சூர்ப்பநகையைப் பார்ப்பவர்களுக்குச் சொல்ல முடியாத வெறுப்பு அவளிடத்திலுண்டாகும். ராமன் பேசும்பொழுது இனிய வாத்யத்தின் நாதத்தைப் போலிருக்கும்; சூர்ப்பநகையின் குரல் கேட்பவர்களை மூர்ச்சையடையச் செய்யும். ராமன் அழகிய யௌவன புருஷன்; சூர்ப்பநகை மிகவும் வயஸ் சென்றவள். ராமன் மிருதுவாகவும் சாதுர்யமாகவும் பேசுகிறவர்; சூர்ப்பநகை

கபடமாகப் பேசுகிறவள். ராமன் ந்யாயமாக நடப்பவர்; சூர்ப் பநகை கெட்டநடத்தையுள்ளவள். ரூபம் வாய்ந்தவர்களுக்குள் ராமன் முதலானவர்; சூர்ப்பநகை க்ரூபிகளுக்குள் முதலானவள்.

ஆகையால் அவள் கண்தெரியாமல் மயங்கி, "ஜடை முதலிய தபஸ்வி வேஷத்தைத் தரித்துப் பார்யையுடன் வில்லுங் கையுமாக நீ இங்கே வரவேண்டிய காரணமென்ன? இது ராக்ஷஸர்கள் வஸிக்கும் தேசமென்று அறியாயா"வென்ருள்.

ராமர் மஹா பராக்ரமசாலி; தர்மபுத்தியையுடையவர், பொய் சொல்வது ஒருநாளும் அவருக்கு இஷ்டமில்லை. மேலும் தபஸ்வி தர்மத்தை அனுஷ்டிக்கும்பொழுது அதற்கு ஒப்புவாரா? மேலும் ஸ்த்ரீயிடத்தில் பொய்சொல்ல விரும்புவாரா? ஆகையால் சூர்ப்ப நகையைப் பார்த்துத், "தேவேந்த்ரனைப்போன்ற பராக்ரமத்தை யுடையவராகத் தசரதரென்று ஓர் சக்ரவர்த்தியிருந்தார். அவரு டைய மூத்த புத்ரனான ராமன் நான். இவன் என் தம்பி லக்ஷ் மணன். இந்த வனத்திற்கு என்னுடன் வந்திருக்கிருன். இவள் என் பார்யை ஸீதை, விதேஹராஜனுடைய புத்ரி. எங்கள் பெற் ருேர்களின் கட்டளையால் பிதிருவாக்ய பரிபாலனஞ்செய்து கொண்டு தர்மத்தை ஸம்பாதிக்க விரும்பி வனத்தில் வஸிக்கிருேம். நீ யார்? யாரைச் சேர்ந்தவள்? உன் விகாரமான ரூபத்தைப் பார்த்தால் ராக்ஷஸியென்று தோன்றுகிறது. நீ இங்கே வந்த காரணமென்ன? நிஜத்தைச் சொல்"லென்ருர். சூர்ப்பநகை ஆசை மீறி "நான் சூர்ப்பநகையென்ற ராக்ஷஸி; நினைத்த ரூபங் களை எடுப்பேன்; இந்த வனத்தில் ஒண்டியாய்த் திரிகிறேன். ஸகல ப்ராணிகளும் என்னைக் கண்டால் நடுங்கும். என் எண் ணத்தைத் தடுக்கும் இடையூறுகளை அழிக்க எனக்குத் திறமை யுண்டு. ராக்ஷஸாதிபதியான ராவணேச்சுவரனென்ற பலவான் என் அண்ணன். அவன் விச்ரவஸின் புத்ரனான மஹாவீரனென்று நீ கேட்டதில்லையா? வெகுகாலம் தூங்கும் மஹாபலமுள்ள கும்ப கர்ணனும், ராக்ஷஸ குலத்தில் பிறந்தும் ராக்ஷஸ ஆசாரத்தை அனுஷ்டிக்காத தர்மாத்மாவான விபீஷணனும் என்னுடன் பிறந்த வர்கள். யுத்தத்தில் மிகவும் பெயர்பெற்ற கரதூஷணர்களும் அப்படியே. ஆனல் நான் அவர்களுடைய வார்த்தைக்குக் கட்டுப் பட்டவளல்ல. என் இஷ்டப்படி நடக்கிறவள். உன்னைக் கண்

டதுமுதல் உன்னையே கணவனாக அடையவேண்டுமென்றெண்ணி வந்திருக்கிறேன். நான் அபூர்வமான சக்தியுள்ளவள். என்னை ஒருவரும் தடுக்கமுடியாது. நான் உன்னைக் கணவனாகப் பெற்று வெகுகாலம் ஸுகமாயிருப்பேன். இந்த ஸீதையால் உனக்கென்ன ப்ரயோஜனம்? விகாரமான சரீரத்துடன் பலபராக்ரமமில்லாத இந்த அல்ப ஜந்துவை வைத்துக்கொண்டு என்ன செய்வாய்? நானே உனக்குத் தகுந்த பார்யை. இவளுடைய அல்ப சரீரத்தையும் மேருமலையைப்போன்ற என் தேஹத்தையும் பார். ஸகல ப்ராணிகளையும் கண்டு இவள் நடுங்குகிறாள். ஸகல ப்ராணிகளும் என்னைக் கண்டு நடுங்குகின்றன. ஒட்டின வயிறுள்ள இவள், பேரீயைப்போன்ற இடையுள்ள எனக்கு அழகில் ஈடா? என்னை நன்றாக உற்றுப்பார். நான் உனக்குத் தகுந்தவளா, அல்லது ஸீதை தகுந்தவளா? நமக்கு இடையூறாகவிருக்கும் இவளையும் உன் தம்பியான அந்தப் பையனையும் இப்பொழுதே தின்றுவிடுகிறேன். பிறகு மலைச்சிகரங்களையும் பல வனங்களையும் வேடிக்கையாகப் பார்த்துக்கொண்டு வெகு ஸந்தோஷமாக ஸஞ்சரிப்போ"மென்றாள்.

—:o:—

## ஸர்க்கம் 18.

## சூர்ப்பநகையின் கர்வபங்கம்

மதிராவென்ற சாராயத்தைப்போல் சிவந்த கண்களுடைய சூர்ப்பநகை ஆசையென்ற கயிற்றால் கட்டப்பட்டு இப்படிச் சொல்ல, ராமன் புன்சிரிப்புடன் மிருதுவாகவும் தெளிவாகவும் சாதுர்யமாகவும் பதில் சொன்னார். "எனக்கோ விவாஹமாயிற்று. என் பார்யையிடத்தில் எனக்கு மிகுந்த ப்ரியம். அவளைத் தள்ளமுடியாது. உன்னையும் வைத்துக்கொள்ளமுடியாது. உன்னைப்போன்ற ஸ்த்ரீகள் சக்களத்திகளின் உபத்ரவத்தைப் பொறுக்கமாட்டார்கள். இதோவிருக்கும் என் தம்பியோ நன்னடத்தையுள்ளவன்; வெகு அழகானவன். அவன் பார்யையைத் தன்னுடன் அழைத்து வரவில்லை, மஹாவீரன்; வெகு காலமாகப் பார்யையயின் ஸுகத்தை அறியாதவன்; பார்யை அவனுக்கு அவச்யம். யௌவன புருஷன், உன் ரூபத்திற்குத் தகுந்த நாயகன்.

இவனைப் புருஷனாக அடைந்தால் மேருமலையில் சூர்யப்ரகாசத்தைப் போல் போட்டியில்லாமல் வாழலா"மென்றார். இப்படித் தன்னிடத்தில் ஆசைகொண்டு வந்தவளைத் திடீரென்று மறுத்தால் வருத்தப்படுவாளென்று இரங்கி பரிஹாஸவார்த்தைகளைச் சொல்லி விலக்கினார். ஆனால் ஆசைப்பிசாசு பிடித்த அந்த ராக்ஷஸி அந்த வேடிக்கையை அறியாமல் உண்மையென்று நம்பி லக்ஷ்மணனிடத்தில் போய், "உன் ரூபத்திற்கும் அழகிற்கும் தகுந்த பார்யை நானே. நாம் ஸுகமாக இந்தத் தண்டகாரண்யத்தில் எல்லாவிடங்களிலும் ஸஞ்சரிப்போ"மென்றாள். லக்ஷ்மணன் பேசுந்திறமையில் ஸாமான்யரா? புன்சிரிப்புடன் அந்தச் சூர்ப்பநகையைப் பார்த்துச் 'சற்று ஆலோசித்துப்பார். நான் என் அண்ணனுக்கு அடிமை; உன்னத பதவியிலிருக்கும் நீ அடிமைக்கு அடிமையாகவிருக்கத் தகுந்தவளா? நான் அவருக்கு ஊழியஞ் செய்வதுபோல் நீயும் ஸீதைக்கல்லவா ஊழியம் செய்யவேண்டி யிருக்கும்? ஸகல பாக்யங்களாலும் நிறைந்த ராமனுக்கு நீ பார்யையானால் உன் எண்ணங்களெல்லாம் நிறைவேறும். ஆகையால் அவருக்கு இளைய மனைவியாகி ஸுகமாய் வாழ். ஸீதையிருக்கும்பொழுது என்னை எப்படி அங்கீகரிப்பாரென்றால், இந்த உத்தமமான ரூபத்தைப் பார்த்த பிறகு கேவலம் ஒரு மனுஷ்யஸ்த்ரீயைக் கண்ணெடுத்துப் பார்க்க எந்தப் புத்திமானுக்காவது தோன்றுமா? ஸீதையோ, குரூபி, துஷ்டை, வயிறு ஒட்டினவள்; அவளுடைய பெயர் யாருக்காவது தெரியுமா? அவளைத் துரத்திவிட்டு உன்னைத் தவிர மற்றொருத்தியைப் பார்க்க மாட்டா"ரென்றார்.

இதைப் பரிஹாஸமென்றறியாமல் அவள், ஸீதையுடன் பர்ணசாலையில் உட்கார்ந்திருக்கும் மஹாவீரனிடத்தில் போய் "இவள் குரூபி, ப்ரஸித்தியற்றவள், துஷ்டை, கிழவி, வயிறொட்டினவள், இந்தப்பீடையைத் தலைத்து முழுகாமல் இன்னும் கட்டிக்கொண்டு அழுகிறாய். என்னைத் திரும்பிப் பார்க்காததற்கு அதே காரணம். இந்தத் தடையுள்ளவரையில் இந்த எண்ணம் நிறைவேறாது. உன்னெதிரில் இவளைத் தின்றுவிட்டுச் சக்களத்தியின் தொந்திரவில்லாமல் உன்னுடன் ஸுகமாக வஸிப்பே"னென்று கொள்ளிக் கட்டையைப்போன்ற கண்களுடன், ரோஹிணியை நோக்கித்

தூமகேது ஓடிவருவதுபோல், மிரண்ட மான்குட்டியைப்போன்ற கண்களையுடைய ஸீதையை நோக்கிக் கோபத்துடன் பாய்ந்து ஓடிவந்தாள். இப்படிக் காலபாசத்தைப்போல் ஓடிவரும் அந்த ராக்ஷஸியைப் பார்த்து மஹாபலவானன ராமன் அவளை 'ஹூம்' மென்று அதட்டிக் கோபத்துடன் "லக்ஷ்மண! க்ரூரமான அல்ப மனுஷ்யர்களுடன் பரிஹாஸஞ்செய்வது பிசகு. சூர்ப்பநகையின் கொடிய ஸ்வபாவத்தைக் கண்டு ஸீதை பயத்தால் உயிரை விடுவா ளென்று தோன்றுகிறது. இந்த விகார ரூபமுள்ள துஷ்ட ராக்ஷ ஸியை அங்கஹீனஞ்செய்" யென்று கட்டளையிட்டார். உடனே லக்ஷ்மணனுக்குக் கோபமுண்டாயிற்று. 'இதுவரையில் இவள் யாதொரு அபராதமும் செய்யவில்லையென்று ராமன் பரிஹாஸ மாகப் பேசிக்கொண்டிருந்தார். இப்பொழுது ஸீதையைக்கொல்ல வந்ததால் தண்டிக்கும்படி உத்தரவிடுகிறு'ரென்று நினைத்துக் கத் தியை உருவிச் சூர்ப்பகையின் மூக்கையும் காதுகளையும் அறுத் தார். அவள் கோரமாகக் கத்திக்கொண்டு வந்த வழியாகவே காட்டில் ஓடினுள். இயற்கையாகவே விகார ரூபமுடையவள்; பார்க்கப் பயங்கரமானவள். ரக்தம் பெருகி ஓட, மழை காலத் தில் மேகங்கள் கர்ஜிப்பதுபோல் கோரமாக அலறினுள். ஜனஸ் தானத்திற்கு ஓடிப்போய், ராக்ஷஸர்களால் சூழப்பட்டு உட் கார்ந்திருக்கும் கொடியவனுன தன் அண்ணன் கரனிடத்திற்கு வந்து, இடிவிழுந்ததுபோல் அவனுக்கெதிரில் பூமியில் விழுந்தாள். பயத்தாலும் மயக்கத்தாலும் மூர்ச்சையடைந்து ரக்தம் தாரை தாரையாகப் பெருக, ராமலக்ஷ்மணர்கள் ஸீதையுடன் வனத்திற்கு வந்திருப்பதையும் தன்னை அங்கஹீனஞ்செய்ததையும் அவனிடத் தில் சொன்னுள்.

———:o:———

ஸர்க்கம் 19.

## சூர்ப்பநகை கரனைத் தூண்டுகிருள்

இப்படித் தன் தமக்கை காதும் மூக்கும் அறுபட்டு ரக்தம் பெருகப்பூமியில் கிடப்பதைக்கண்டு கரன் அடங்காத கோபங் கொண்டு "எழுந்திரு; புத்தியை ஸ்வாதீனப்படுத்திக்கொள். உன்னை இப்படி அலங்கோலம் செய்தவன் யார்? தெளிவாகச் சொல். கொடிய விஷமுள்ள கருநாகம் எவரையும் தொந்திரவு செய்யாமல் எதிரில் படுத்துக்கொண்டிருக்கும்பொழுது, அதன் சக்தியை அறியாமல் அதைச்சுண்டுவிரல் நுனியால் குத்திக்கிளப் பின புத்திமான் யார்? யமபாசத்தைக் கழுத்தில் மாட்டிக்கொண்டு அடுத்த நிமிஷத்தில் மரணம் நேருவதை அறியாத மடையன் யார்? காளகூட விஷத்தை அமிருதமென்று குடித்தவனைப்போல், உன்னை இப்படி ஹிம்ஸித்த நிர்பாக்யன் யார்? உன் பலபராக்ரமம் ஸாமான்யமா? நினைத்தவிடத்திற்குப் போகக்கூடியவள்; யமனைப் போன்றவள்; நினைத்த ரூபமெடுக்கக்கூடியவள், உன்னை இப்படிச் செய்தவன் யார்? தேவர்கள் கந்தர்வர்கள் மஹாத்மாக்களான ரிஷிகளுக்குள் எந்த மஹாவீரன் உன்னை இப்படி அங்கஹீனஞ் செய்தான்? ஆயிரம் கண்களுடைய இந்த்ரன் ஒருவனைத்தவிர ஸகல லோகங்களிலும் எனக்கு இஷ்டமில்லாத கார்யத்தைச் செய்யத் துணிகிறவன் ஒருவனுமில்லை. நீருடன் கலந்த பாலை ஹம்ஸம் குடிப்பதுபோல், இப்பொழுதே என் கொடிய பாணங்களால் அவனுடைய உயிரை வாங்குகிறேன். யுத்தத்தில் என் அம்புகளால் அவனுடைய மர்மஸ்தானங்களைப் பிளந்து அவன் ப்ராணனைக் கொள்ளைக்கொண்டு, அவன் ரக்தத்தை நுரையுடன் பூமி குடிக்கும் படி செய்கிறேன். என்னுல் சண்டையில் மடிந்த யாருடைய மாம்ஸத்தைப் பக்ஷிகள் பிடுங்கித் தின்கப்போகின்றனவோ? தேவர்கள் கந்தர்வர்கள் பிசாசர்கள் யக்ஷகர்கள், யாராயிருந்தாலும் ஸரி, என்னுடன் யுத்தத்திற்கு வந்த நிர்பாக்யனைத் தப்புவிக்க முடியாது? உன்னை என் வனத்தில் இப்படி உபத்ரவித்து அவமானஞ்செய்த துஷ்டன் யார்? புத்தியை ஸ்வாதீனஞ் செய்து கொண்டு சொல்"லென்று மஹா கோபத்துடன் கரன் கர்ஜித்ததைக் கேட்டுச் சூர்ப்பநகை கண்ணீர்ப்பெருகப் பின்வருமாறு சொல்லவாரம்பித்தாள்.

"நல்ல யௌவன புருஷர்கள்; வயஸில் ஸமமானாலும் ரூபத்தில் பேதமுண்டோ வென்றால், இல்லை. மஹாஸௌந்தர புருஷர்கள்; யௌவனமிருந்தாலும் அழகிராது; இவர்கள் அப்படியல்ல. மன்மதன் முதலியவர்களும் இவர்களிடத்தில் பிக்ஷைவாங்கவேண்டும். இவர்களுடைய அழகு என்றும் அழியாது. வயஸும் ரூபமுமிருந்தும் சரீரம் கடினமோவென்றால், ஐயோ கற்பாறையைப் போன்ற உங்களுடைய சரீரத்தைப்போலா? மலர்ந்த புஷ்பத்தைப் போல் வெகு மிருதுவான சரீரமுடையவர்கள். லக்ஷ்மணன் என் காதையும் மூக்கையும் அறுக்கும்பொழுது அவனுடைய கை என் மேல் பட்டதாலுண்டான ஸுகத்தை நினைத்து நினைத்து என்மனம் உருகுகிறது. என் தேஹத்தைத் துண்டுதுண்டாக அறுத்தாலும் அவனுடைய கை இன்னுமொருதரம் என்மேல் பட்டால் போதுமே. இதனால் அவர்கள் பலஹீனர்களோ? ஸ்த்ரீகளைத் திருப்திசெய்ய முடியாதவர்களோ? மஹாபலவான்கள். பொதுவாக அழகுமிருந்திருக்கலாம், அவயவங்கள் லக்ஷணப்படி யிருக்குமோவென்றால் அவர்கள் கண்ணழகைமாத்ரம் கொஞ்சம் சொல்லுகிறேன், கேள். ரக்தத்தையும் நெருப்பையும்போன்ற உங்களுடைய கண்களெங்கே? தமோ குணத்தைக் காட்டும் தூக்கக்கலக்கமும் ரஜோகுணத்தைக் காட்டும் சிவப்புநிறமுமற்று, கேவலம் ஸத்குணத்தின் அதிசயத்தைக் காட்டும் வெண்தாமரை யிதழ்களைப்போன்ற விசாலமான அவர்களுடைய நேத்ரங்களெங்கே? அவர்களுடைய அழகிருக்கட்டும். அவர்கள் அணிந்த மரவுரியும் மான்தோலுமல்லவா அவர்களுடைய தேஹத்தில் பட்டதால் விளங்குகின்றன? கந்தமூலபலங்களைப் புஜித்து கொண்டு இந்த்ரியங்களை ஜயித்துத் தபஸ்வி வேஷத்துடன் தர்மத்தை அனுஷ்டிக்கிறார்கள். தசரதராஜனுடைய புத்ரர்களான ராமலக்ஷ்மணர்களென்றார்கள். ஆனால் அவர்களுடைய பராக்ரமத்தைக் கவனித்தால் கந்தர்வராஜர்களைப்போலிருக்கிறார்கள். ஆனால் ராஜலக்ஷணங்கள் பூர்ணமாக விளங்குகின்றன. ஆகையால் அவர்கள் மனுஷ்யர்களா தேவர்களாவென்று எனக்குத் தெரியவில்லை. அவர்களுக்கு நடுவில் ஒரு யௌவன ஸ்த்ரீ ஸகல ஆபரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டு வர்ணிக்கமுடியாத அழகுடன் விளங்குகிறாள். அவளுக்காகவே இருவரும் சேர்ந்து என்னை அநாதையாகவும் துஷ்டையாகவுமெண்ணி இந்தக் கோலஞ்செய்

தார்கள். யுத்தத்தில் அவர்களைக் கொன்று அவர்களுடைய ரக்தத்தை நுரையுடன் குடிக்க ஆசைகொண்டிருக்கிறேன். முதலில் நீ இதைப் பூர்த்தி செய்யவேண்டு”மென்றாள். (மேற்சொன்ன வாக்யங்களுக்கு சாதுர்யமாக வேறு அர்த்தங்களும் உரையாசிரியர்களால் சொல்லப்படுகின்றன. ராமலக்ஷ்மணர்கள் கரனுடன் யுத்தஞ்செய்ய முடியாதவர்களென்றும் அல்லது கரனுக்கு ஏறக்குறைய ஸரியான ஜோடியாயிருப்பார்களென்றும் அர்த்தஞ் செய்கிறார்கள். ஆனால் அது அவ்வளவு பொருந்தவில்லை.)

கரன் அதைக் கேட்டுக் கோபங்கொண்டு, யமன்களைப் போன்ற தன் பதினாலாயிர ராக்ஷஸர்களின் தலைவர்களைப் பார்த்து “இரண்டு மனிதர்கள் மான்தோல் மரவுரிகளை அணிந்துகொண்டு ஆயுதபாணிகளாக ஒரு ஸ்த்ரீயுடன் நமது கோரமான தண்டகாரண்யத்தில் வந்திருக்கிறார்களாம். அவர்களைக்கொன்று அவர்களுடைய தேஹங்களையும் அந்தப் பெண்ணையும் இங்கே கொண்டுவாருங்கள். என் உடன்பிறந்தாள் அவர்களுடைய ரக்தத்தை குடிக்க ஆசைபடுகிறாள். சீக்ரமாகக் கார்யத்தை முடித்து வாருங்க”ளென்று கட்டளையிட்டான். உடனே அந்தப் பதினான்கு ஸேனாபதிகளும் சூர்ப்பநகையுடன் சண்டமாருதத்தைப்போல் அங்கே வந்தார்கள். அவர்களைக் கண்டு ராமன் எதிர்த்து வந்தார். ஆனால் யானைகள் காட்டுத் தீயை எப்படி நெருங்கமுடியாதோ, அப்படி மஹா தேஜஸ்வியான ரகுவீரனை அந்த ராக்ஷஸவீரர்கள் நெருங்கமுடியவில்லை.

——:o:——

ஸர்க்கம் 20.

## ஸேனாதிபதிகளின் வதம்

சூர்ப்பநகை ராமனுடைய ஆச்ரமத்திற்குவந்து, தன்னுடனிருந்த ராக்ஷஸர்களுக்கு ராமலக்ஷ்மணர்களைக் காட்ட, மஹா பலவானான ராமன் லக்ஷ்மணனுடனும் ஸீதையுடனும் பர்ணசாலையில் உட்கார்ந்திருக்கக் கண்டார்கள். ரகுவீரன் அந்த ராக்ஷஸர்களையும் சூர்ப்பநகையையும் பார்த்துக் கோபத்தால் நெருப்புக் கொழுந்தைப்போல் ஜ்வலிக்கும் லக்ஷ்மணனை அழைத்துக், “கொஞ்ச நேரம்வரையில் ஸீதையை ஜாக்ரதையாகப் பார்த்துக்

கொள். இந்த ராக்ஷஸியின் பின்னே வந்தவர்களை யமலோகத்திற்கு அனுப்புகிறே"னென்றார். ராமானுஜன் அப்படியே செய்கிறேன் என, ரகுநாதன் தங்கக்கட்டுகளால் அலங்கரிக்கப்பட்ட தன் பெரிய வில்லில் நாண் பூட்டித், தர்மயுத்தஞ் செய்கிறவராகையால் அந்த ராக்ஷஸர்களைப் பார்த்து, "நாங்கள் தசரத ராஜ புத்ரர்களான ராமலக்ஷ்மணர்கள். இதோவிருக்கும் ஸீதையுடன் இந்தக் காட்டில் வஸிக்க வந்திருக்கிறோம். கந்தமூலபலங்களைப் புஜித்துக்கொண்டு தபஸ்விகளாகத் தர்மத்தை அனுஷ்டிக்கும் எங்களை ஏன் தொந்தரவு செய்கிறீர்கள்? மஹாதுஷ்டர்களான உங்களைக் கொல்லவேண்டுமென்று இங்குள்ள ரிஷிகள் கட்டளையிட்டதால் ஆயுதங்களுடன் இங்கே வந்திருக்கிறேன். இப்பொழுதே ஸமயம் நேர்ந்தது. ஸந்தோஷமாக அங்கேயே நில்லுங்கள், ஓடக்கூடாது. ஆனால் பிழைக்க ஆசையிருந்தால் ஓடிப் போங்க"ளென்றார்.

ப்ராஹ்மணர்களைக் கொல்லும் அந்தப் பாபிகள் அதைக் கேட்டு சூலங்களைத் தூக்கிக்கொண்டு கோபத்துடன், 'எங்கள் மஹாராஜாவான கரனுடைய கோபத்திற்குப் பாத்ரமாகி இன்னும் பிழைத்திருக்கவா? இதோ ஒரு நிமிஷத்தில் உன்னைக் கொல்லுகிறோம். அல்ப மனுஷ்யனை நீ எங்களைப்போன்ற மஹாவீரர்களை யுத்தத்தில் எதிர்க்க முடியுமா? யுத்தஞ்செய்வதிருக்கட்டும், வா. எங்களுடைய கத்திகளுக்கும் கதாயுதங்களுக்கும் இரையாகி உன் வில்லும் தைர்யமும் உயிரும் ஒரே காலத்தில் அழியு"மென்று ரகுவீரன்மேல் சூலங்களை எறிந்தார்கள். ராமன் அவைகளை ஒவ்வொரு பாணத்தால் துண்டித்தார். மலைகளையும் துளைக்கும் கூர்மையுடன் ஸூர்யனைப்போல் ஜ்வலிக்கும் பதினன்கு நாராசபாணங்களை உடனே எடுத்து வில்லில் பூட்டி இந்த்ரன் வஜ்ராயுதத்தை ப்ரயோகிப்பதுபோல் அந்த ராக்ஷஸர்களின்மேல் விட்டார். அவை அந்தப் பாபிகளின் மார்பைப் பிளந்து ஊடுருவி ரக்தத்தால் பூசப்பட்டு இடிவிழுந்ததுபோல் பூமியில் விழுந்தன. அந்தத் துஷ்டர்கள் ஹ்ருதயம் பிளந்து உயிரிழந்து ரக்தம் பெருக வேரற்ற மரம்போல் பூமியில் சாய்ந்தார்கள். சூர்ப்பநகை அதைக் கண்டு பயந்து கோரமாகக் கர்ஜித்தாள். பிறகு அங்கிருந்து கரனிடத்திற்கு ஓடிப்போய்க், கண்ணீர் பெருகக் கோவென்று

பெருங்குரலிட்டழுது, வெட்டின பனைமரத்திலிருந்து ரஸம் பெருகுவதுபோல், தன் காயங்களிலிருந்து பெருகும் ரக்தம் கொஞ்சம் உலர அவனுக்கெதிரில் விழுந்தாள்.

இப்படித் தன்னுடன் வந்த ஸகல ராக்ஷஸர்களும் மடிந்ததைக் கண்டு சூர்ப்பநகை கரனிடத்திற்குப் போய் நடந்த வரலாற்றைச் சொன்னாள்.

—:o:—

ஸர்க்கம் **21**

## கரனைத் தூண்டிவிட்டது

ராக்ஷஸகுலத்தை நாசஞ்செய்ய வந்த சூர்ப்பநகை, வாடின முகத்துடன் தரையில் கிடந்து புரளுவதைக் கண்டு கரன் கோபங்கொண்டு, "யமனைப்போன்ற மஹாவீரர்களை நீ கேட்டபடி அனுப்பினேனல்லவா? மறுபடியும் ஏன் அழுகிறாய்? அவர்கள் என்னிடத்தில் பக்திவைத்தவர்கள், மிகுந்த ப்ரீதியுள்ளவர்கள், என் ஹிதத்தையே தேடுகிறவர்கள். என் கட்டளையை மீறுவார்களா? பிறரைக் கொல்வார்களேயொழிய கொல்லப்படமாட்டார்கள். இப்படியிருக்க ஹா! நாதாவென்று கதறிக்கொண்டு பூமியில் கிடந்து அடிபட்ட ஸர்பத்தைப்போல் புரளக் காரணமென்ன? உன்னைக் காப்பாற்ற நானிருக்கத் திக்கற்றவளைப் போல் நீ கதறலாமா? எழுந்திரு; பயப்படாதே. கவலையை விடு" என்று ஸமாதானஞ் செய்தான்.

பிறகு ஒருவாறு தைர்யமடைந்து அவள் கண்ணீரை துடைத்துக்கொண்டு "என் மூக்கும் காதும் அறுபட்டு ரக்தம் பெருக இங்கே ஓடிவந்தேன். நீ என்னைத் தேற்றி ஸந்தோஷப்படுத்துவதற்கு ராமலக்ஷ்மணர்களைக் கொன்று வரும்படி மஹாசூரர்களான பதினன்கு ராக்ஷஸர்களை அனுப்பினாய். ராமனோ தன் கூர்மையான பாணங்களால் அவர்களின் மர்ம ஸ்தானங்களைப் பிளந்து யமலோகத்திற்கு அனுப்பினான். அவர்கள் பிணமாகக் கீழே விழுவதையும் ராமனுடைய அத்புதமான வீர்யத்தையும் பார்த்து நடுங்கினேன். எனக்கு பயமும் துக்கமும் தாங்க முடியவில்லை. எங்கே திரும்பினாலும் ராமனாகவே தோன்றுகிறது. ஆகை

யால் உன்னையே சரணமடைந்தேன். துக்கமென்ற முதலைகளால் நிறைந்து பயமென்ற அலைகள் மோதும் சோக ஸமுத்ரத்தில் மூழ்கித் தத்தளிக்கும் என்னை ஏன் காப்பாற்ருமலிருக்கிருய்? நீ அனுப்பின மஹாவீரர்களை ராமன் பாணங்களுக்கு இரை கொடுத்தான். அவர்களிடத்திலும் என்னிடத்திலும் உனக்கு இரக்கமிருந்தால், உனக்குத் தேஜஸிருந்தால், ராமனுடன் யுத்தஞ் செய்ய உனக்குத் திறமையிருந்தால், இந்தத் தண்டகாரண்யத்திற்கு வந்து ராக்ஷஸகுலத்தை அழிக்கக் கங்கணங்கட்டிக்கொண்டிருக்கும் ராமனை ஜயி. இல்லாவிட்டால் உனக்கெதிரில் ப்ராணனை விடுவேன், வெட்கப்படமாட்டேன். இவ்வளவு சொல்லியும் உனக்கு ரோஷமில்லாததைப் பார்த்தால் நீயும் உன் ஸைன்யங்களும் யுத்தத்தில் ராமனுக் கெதிரில் நிற்கமாட்டீர்களென்று எனக்கு நன்ருகத் தோன்றுகிறது. மஹாசூரனென்று நீ உன்னை எண்ணிக்கொண்டிருப்பதைத் தவிர, நீயும் ஒரு சூரனு? எப்படியோ சூரனென்ற பெயரை ஸம்பாதித்துவிட்டாய். அது முழுப்பொய். இரண்டு மனுஷ்யப் பூச்சிகளைத் தேய்க்க சக்தியில்லாத நீயல்லவா வீரன்! ராக்ஷஸக் குலத்தைக் கெடுக்கவந்த நீசா! உனக்கு ரோஷமிருந்தரல், உன் தேஹத்தில் நல்ல ரக்தமிருந்தால், ராமனை எதிர்க்க உனக்குத் திறமையிருந்தால், உன் ராஜ்யத்தில் வந்து அட்டஹாஸஞ் செய்யும் சத்ருவை ஜயி. இல்லாவிட்டால் நீயும் உன் பந்துக்களும் இந்த ஜனஸ்தானத்தை விட்டு எங்கேயாவது ஓடிப்போங்கள். கையாலாகாத பரதைகளுக்குச் சுத்த வீரர்களிருக்குமிடத்தில் என்ன வேலை? விளக்குவெட்டுப்பூச்சியைப் போல் ராமனுடைய தேஜஸில் விழுந்து சாம்பலாகப் போகிருய். அந்தத் தசரத புத்ரனுன ராமனல்லவா தேஜஸ்வி, மஹாவீரன்? என்னை அலங்கோலஞ்செய்த லக்ஷ்மணனைப் போன்ற சூரனுமுண்டோ'' வென்று புலம்பி வயிற்றில் அடித்துக் கொண்டு துக்கத்தால் வாய்விட்டலறினுள்.

—:o:—

## ஸர்க்கம் 22.

## கரன் யுத்தஞ் செய்யப் புறப்பட்டது

இப்படி ராக்ஷஸர்களுக்கு எதிரே தன்னை அவமானஞ் செய்வதைக் கரன் பொறுக்காமல் கடுங்கோபத்துடன் "உன்னை அவமானஞ் செய்ததால் எனக்குண்டான கோபத்திற்கு எல்லையில்லை. பர்வகாலத்தில் பொங்கும் ஸமுத்ரத்தின் அலைகளைப்போல் அடக்க முடியவில்லை. ஒரு க்ஷணத்தில் இறக்கப்போகிற ராமனை வீரனென்றும் நினைப்பேனோ? அவன் செய்த துடுக்குக்காக இன்று என்னால் மாளப்போகின்றான். கண்ணீரை நிறுத்து, பரபரப்பை அடக்கு. இன்னும் சற்று நேரத்திற்குள் ராமலக்ஷ்மணர்களை யமலோகத்தில் காணலாம். அந்த அல்ப ஜந்துவை என் கோடாலியால் துண்டித்து, அவனுடைய உஷ்ணமான ரக்தத்தை நீ குடிக்கும்படி செய்கின்றேன்"னென்றான். சூர்ப்பநகைக்கு வெகு ஸந்தோஷமுண்டாயிற்று. கரனை முன்பு எவ்வளவு திட்டினளோ அவ்வளவு மறுபடியும் மெச்சினள். மதிகெட்ட பெண்ணல்லவா? கரன் உடனே தூஷணனென்ற தன் ஸேனாதிபதியைப்பார்த்து, "நமது ஸைன்யங்களுக்குள் பதினாலாயிரம் ராக்ஷஸர்களை யுத்தத்திற்குப் புறப்படச்சொல். அவர்கள் என்னிஷ்டப்படி நடப்பவர்கள், பயங்கரமான வேகமுள்ளவர்கள், யுத்தத்தில் பின்வாங்காதவர்கள்; நீருண்ட மேகம்போல் கறுத்தவர்கள்; தேஜஸால் ஜ்வலிப்பவர்கள்; க்ரூரமான நடத்தையுள்ளவர்கள், ப்ராணிகளை ஹிம்ஸிப்பதையே விளையாட்டாகவுடையவர்கள்; மஹாபலவான்கள்; புலியைப்போல் கொழுப்புடையவர்கள்; அகலமான வாயையும் எல்லையற்ற ஆண்மையையுமுடையவர்கள்; எல்லா வாகனங்களிலும் ஆயுதங்களிலும் பழகினவர்கள். ஆகையால் அதி சீக்ரத்தில் யுத்தத்திற்குப் போகட்டும். என் ரதமும் வில்லும் பாணங்களும் கத்தி ஈட்டி முதலிய ஆயுதங்களும் தயாராகட்டும். யுத்தங்களில் கைகண்ட என் ராக்ஷஸர்களுக்கு முன்னே சென்று ராமனென்ற துஷ்டனைச் சித்ரவதை செய்கிறே"னென்று கட்டளையிட்டான். தூஷணன் ரதத்தைக் கொண்டுவந்து நிறுத்தினன். அதன் காந்தி ஸூர்யனைப்போல் கண்ணைப் பறித்தது. விசித்ரவர்ணமுள்ள குதிரைகள் அதில் கட்டப்பட்டிருந்தன. மேருவைப்போல் ஆகாசத்தை அளாவிற்று. வெகு

விசாலமானது. உருக்கி ஓடவிட்ட தங்க ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டது. தங்கச் சக்ரங்களையும் வைடூர்யத்தால் விளங்கும் ஏர்க்கால்களையுமுடையது. மீன்களும் மலர்களும் மரங்களும் மலைகளும் ஸூர்ய சந்த்ரர்களும் சுபமான பக்ஷிகளும் தங்கத்தால் விசித்ரமாக வேலைசெய்யப்பட்டிருந்தன. தங்கச் சலங்கைகளாலும் ஆகாசத்தை எட்டின. கொடிகளாலும் விளங்கி ஸகல ஆயுதங்களாலும் நிறைந்திருந்தது. கரன் அதில் ஏறினதைப் பார்த்து ராக்ஷஸர்களெல்லோரும் அவனையும் தூஷணனையும் சூழ்ந்து நின்றார்கள். வஜ்ரகவசங்களாலும் கோரமான ஆயுதங்களாலும் விளங்கி நேர்த்தியான ரதங்களிலிருக்கும் தன் ஸேனைத்தலைவர்களைப் பார்த்துப் புறப்படுங்களென்று கரன் உத்திரவு செய்தான். இருப்புலக்கைகள் பட்டாக்கத்திகள் வல்லயங்கள் சூலங்கள் கோடாரிகள் கத்திகள் சக்ரங்கள் ஈட்டிகள் குண்டாந்தடிகள் வஜ்ராயுதம்போன்ற பெரிய வில்லுகள் கதைகள் முதலிய கோரமான ஆயுதங்களுடன் ராக்ஷஸ ஸைன்யம் பெரிய கோஷத்துடன். ஜனஸ்தானத்திலிருந்து பூமி நடுங்கும்படி உடனே புறப்படுவதைக் கண்டு கரன் ஸந்தோஷமடைந்து தன் ரதத்தை மெள்ள நடத்தச் சொன்னான். இப்படிக் கோபாவேசத்துடன் பயங்கரமாகக் கர்ஜித்துக்கொண்டு, சத்ருக்களை நிர்மூலஞ் செய்யவெண்ணிக் காலனைப்போல் பார்ப்பவர்கள் நடுங்கும்படி அட்டஹாஸம் பண்ணி, கல்மாரி பொழியும் மேகத்தை ஜிஞ்ஜாமாருதம் தாக்கி ஓட்டுவதுபோல் கரன் ஸாரதியை ஏவ, எல்லா திக்குகளும் கிடுகிடென்று அதிரும்படி அந்த மஹாரதம் அதிவேகமாகப் பஞ்சவடியை நோக்கி வந்தது.

—:o:—

## ஸர்க்கம் 23.

## அபசகுனங்கள்

அந்த ராக்ஷஸ ஸைன்யம் மஹா உத்ஸாஹத்துடன் யுத்தத்திற்குப் போகும்பொழுது, கழுதையைப்போல் சாம்பல் நிறமுள்ள மேகங்கள் ரக்தமழை பெய்தன. கரனுடைய ரதத்திலுள்ள குதிரைகள் ராஜமார்க்கத்தில் மேடுபள்ளமில்லாமல் புஷ்பங்களால் நிறைந்த விடத்தில் திடீரென்று இழுந்தன. கொள்ளிக்கட்டை

யைச் சுழற்றுவதுபோல் ஸுூர்ய மண்டலத்தைச் சுற்றிக் கறுத்து ஓரத்தில் கொஞ்சம் சிவந்த ஒரு வட்டம் காணப்பட்டது. தங்கக் கழியில் கட்டப்பட்ட த்வஜத்தின்மேல் பருத்த சரீரமுள்ள ஒரு கழுகு உட்கார்ந்து பயங்கரமாகக் கூவிற்று. மாம்ஸத்தைத் தின்னும் மிருகங்களும் பக்ஷிகளும் ஜனஸ்தானத்திற்கு ஸமீபத்தில் வந்து விகாரமாகக் கத்தின. ஸுூர்யனிருந்த திக்கில் நரிகள் கூட்டங்கூட்டமாக நின்று பயங்கரமாக ஊளையிட்டு ராக்ஷஸர்களுக்கு நேரும் நாசத்தைக் காட்டின. வஜ்ராயுதத்தால் வெட்டப்பட்ட இறகுகளையுடைய மலைகளைப்போன்ற மேகங்கள் ரக்தமழையால் நிறைந்து ஆகாசத்தை மறைத்தன. மயிர்க்கூச்சலெடுக்கும் ஓர் இருட்டு எங்கும் பரவித் திக்குதிசை தெரியாமல் மறைத்தது. ரக்தத்தில் நனைந்த வஸ்த்ரத்தைப்போல் ஸந்த்யாகாலம் வேளைக்கு முன்பே காணப்பட்டது. கழுகு பருந்து நரி முதலிய அசுபமான ஜந்துக்கள் பின்வரும் கெடுதியைத் தெரிவித்துக், கரனுடைய ரதத்திற்கெதிரில் கூவின; யுத்தத்தில் அபஜயத்தையும் நாசத்தையும் காட்டும் நரிகள், வாயிலிருந்து நெருப்பு ஜ்வாலைகள் கிளம்ப ஸைன்யத்திற்கெதிரில் நின்று ஊளையிட்டன. குண்டாந்தடியைப்போல் ஒரு தலையில்லாத முண்டம் ஸுூர்யனுக்கு ஸமீபத்தில் காணப்பட்டது. பர்வகாலமில்லாதபொழுதே ஸுூர்யனை ராஹு பிடித்துக் கொண்டது. எதிர் காற்று வேகமாக அடித்தது. ஸுூர்யன் காந்தியை இழந்தான். ராத்ரியில்லாவிட்டாலும் ஆகாசத்திலிருந்து மினுமினுப்பூச்சிகளைப்போல் நக்ஷத்ரங்கள் உதிர்ந்தன. ஓடைகளில் தாமரைகள் வாடின; மீன்கள் மறைந்தன. சிவந்த மேகத்தைப் போன்ற செந்தூள் காற்றில்லாமலேயே கிளம்பிற்று. நாகணவாய்க்குருவிகள் வீசி கூசியென்று கத்தின. ஆகாசத்திலிருந்து கொள்ளிக்கட்டைகள் பேரிடிபோன்ற முழக்கத்துடன் விழுந்தன. மலைகளும் காடுகளும் பூமிமுழுவதும் நடுங்கிற்று. ரதத்தில் கர்ஜித்துக்கொண்டு உட்கார்ந்திருக்கும் கரனுடைய வலதுகை துடித்தது; குரல் தழதழத்தது; கண்ணீர் பெருகிற்று; நெற்றியில் வலி உண்டாயிற்று.

இப்படி அநேக அபசகுனங்கள் நேர்ந்தாலும் பிடிவாதத்தாலும் அக்ஞானத்தாலும் அவன் திரும்பவில்லை. மயிர்க்கூச்சலுண்டாகும் அந்த அபசகுனங்களைக் கண்டும் அவன் கலங்க

வில்லை. கடகடவென்று சிரித்துக்கொண்டு ராக்ஷஸர்களைப் பார்த்து "பலசாலி பலஹீனர்களை அலக்ஷ்யஞ்செய்வதுபோல் இந்தக் கோரமான அபசகுனங்களெல்லாம் எனக்கொரு பொருட் டல்லவென்று அலக்ஷ்யஞ் செய்கிறேன். என் கூர்மையான பாணங்களால் ஆகாசத்திலிருந்து நக்ஷத்ரங்களைப் பலபலவென்று உதிர்ப்பேன். நான் கோபங்கொண்டால் ஸகல ப்ராணிகளையும் அழிக்கும் யமனையும் கொல்வேன். மதங்கொண்ட இந்த ராம லக்ஷ்மணர்களை அழிக்காமல் திரும்பமாட்டேன். அவர்களுடைய ரத்தத்தை என் உடன் பிறந்தவள் வேண்டியவரையில் குடிக் கட்டும். அவர்களுக்கு நாசகாரணம் அவளே. நான் இதுவரை யில் யுத்தத்தில் தோற்றதில்லை. அது உங்களுக்கு நன்றாகத் தெரியும். நான் சொல்வது பொய்யல்ல. வஜ்ரத்தை எடுத்து மதங்கொண்ட ஐராவதத்தின் மேலேறிவரும் இந்த்ரனையும் விளை யாட்டாகக் கொல்வேன். இந்த மனுஷ்யப் பூச்சிகளைப்பற்றி விசாரமென்ன"வென்று திக்குகள் நடுங்கும்படி கர்ஜித்தான். அதைக்கேட்டு அந்த மஹாஸைன்யம் அடங்காமகிழ்ச்சி கொண்டு ஆரவாரித்தது.

தேவ ரிஷி கந்தர்வ ஸித்த சாரண கணங்கள் அந்த யுத்தத் தைப் பார்க்க வந்து "பசுகளுக்கும் ப்ராமணர்களுக்கும் ப்ராணி களுக்கும் ஹிதத்தைக் கோருகிறவர்களுக்கும் மங்களமுண்டா கட்டும். முன்காலத்தில் மஹாவிஷ்ணு அஸுரர்களைச் சக்ரத்தால் நாசஞ்செய்ததுபோல் ரகுவீரன் இந்த ராக்ஷஸர்களை நாசஞ்செய் யட்டு"மென்று பலவிதமாக ஒருவர்க்கொருவர் பேசிக்கொண்டு, யமனுக்கிரையான அந்த மஹா ஸைன்யத்தை விமானங்களிலிருந்து ஆவலுடன் பார்த்துக்கொண்டிருந்தார்கள். கரன் அதிவேகமாகப் போனதைக் கண்டு அவனுடைய மந்திரிகளான ச்யேனகாமி ப்ருதுக்ரீவன் யக்ஞசத்ரு விஹங்கமன் துர்ஜயன் கரவீராக்ஷன் பருஷன் காலகாமுகன் மேகமாலி மஹாமாலி ஸர்ப்பாஸ்யன் ருதிராசனனென்றவர்கள் அவனைச் சூழ்ந்து சென்றார்கள். மஹா கபாலன் ஸ்தூலாக்ஷன் ப்ரமாதி த்ரிசிரஸென்ற நான்கு ஸேனா பதிகள் தூஷணனைப் பின்தொடர்ந்தார்கள். மஹா பலசாலி களான அந்த ராக்ஷஸ வீரர்கள் யுத்தஞ்செய்ய ஆவல்கொண்டு க்ரூரக்ரஹங்கள் ஒன்றுசேர்ந்து ஸூர்யசந்திரர்களை எதிர்த்ததுபோல்

அந்த ராஜபுத்ரர்கள் இருக்குமிடத்தை நோக்கி ஸைன்யங்களுடன் கடுவேகமாக ஓடிவந்தார்கள்.

—:○:—

## ஸர்க்கம் 24.

### ராமன் யுத்தத்திற்குப் புறப்பட்டது

ராக்ஷஸர்களுக்கு நேர்ந்த அபசகுனங்களைக் கண்டு ராமன் "லக்ஷ்மணா! இவை ஜனங்களுக்குக் கஷ்டத்தையும் ஸகல ப்ராணிகளுக்குப் பயத்தையும் ராக்ஷஸர்களுக்கு நாசத்தையும் காட்டுகின்றன. ஆகாசத்தில் கழுதையைப்போல் சாம்பல் நிறமுள்ள மேகங்கள் ரக்தவர்ஷத்துடனும் இடி மின்னல்களுடனும் பயங்கரமாகச் சுழன்றுகொண்டிருப்பதைப் பார். நமக்கு நேரும் ஜயத்தைக் காட்டுகிற நல்ல சகுனங்களையும் கவனித்தாயா? என்னைப் போல் யுத்தத்தில் ஆவல்கொண்டு, தங்கப்பட்டங்களால் அலங்கரிக்கப்பட்ட என் வில் யுத்தஞ்செய்யத் துடிக்கிறது. பாணங்களிலிருந்து புகை கிளம்புகிறது. இந்தப் பக்ஷிகளின் சப்தமும் அதிசீக்ரத்தில் நமக்குப் பெரும் பயமும் உயிருக்கு ஆபத்தும் நேருமென்று தெரிவிக்கின்றது. என் வலது புஜம் அடிக்கடி துடிப்பதால் கோர யுத்தம் ஸமீபத்தில் நடக்குமென்று நினைக்கிறேன். அதில் நமக்கு ஜயமும் சத்ருக்களுக்குத் தோல்வியும் நிச்சயம். உன் முகம் காந்தியால் ஜ்வலிக்கிறது. இது வெற்றிக்கு அடையாளம். யுத்தத்திற்குப் புறப்படுகிறவர்களின் முகங்களில் காந்தி குறைந்தால் ஆயுஸ்ஸும் குறையும். ராக்ஷஸர்களின் அட்டஹாஸங்களும் ஸிம்ஹநாதங்களும் பேரீ முதலிய வாத்ய சப்தங்களும் ஸமீபத்தில் வந்துவிட்டன. அடையாளங்களால் அபாயம் வருவதை அறிந்து அதை விலக்க விரும்புகிறவர்கள் தகுந்த ஏற்பாடு செய்யவேண்டும். அவனே புத்திமான். ஆகையால், நீ ஆயுதம்பூண்டு மரங்களால் மறைக்கப்பட்ட இந்த மலைக்குஹையில் ஸீதையை ஜாக்ரதையாகக் காப்பாற்றிக்கொண்டிரு. இந்த ராக்ஷஸர்களுடன் யுத்தஞ் செய்ய நீ ஆவல்கொண்டிருக்கிறாயென்று எனக்கு நன்றாகத் தெரியும். நீ மஹாசூரன், மஹாபலசாலி. இவர்களோ நிச்சயமாகக் கொல்லப்பட வேண்டியவர்கள். ஆனாலும் நானே இவர்களைக் கொல்லுகிறேனென்று மஹர்ஷிகளிடத்தில் ப்ரதிக்ஞைசெய்திருக்

கிறபடியால் என் வார்த்தையைத் தடுத்துச்சொல்லாதே. என் பாதங்களின் மேல் ஆணையிட்டேன். சீக்ரமாகப் போ"வென்று ஆக்ஞாபித்தார்.

உடனே லக்ஷ்மணன் ஆயுதபாணியாக ஸீதையை அழைத்துக்கொண்டு மலைக்குஹைக்குப் போனார். ராமன் "நான் சொன்னபடி இவன் செய்தா"னென்று ஸந்தோஷமடைந்து கவசத்தைத் தரித்தார். அக்னியைப்போன்ற அந்தத் திவ்ய கவசத்தால், இருண்ட ராத்ரியில் புகையற்ற நெருப்புக்கொழுந்தைப் போல் ரகுவீரன் ப்ரகாசித்தார். வில்லையும் பாணங்களையும் ஸித்தஞ் செய்து, திக்குகள் நடுங்கும்படி நாணோசை காட்டி ராக்ஷஸர்களுடைய வரவை எதிர்பார்த்திருந்தார். பிறகு தேவ கந்தர்வ ஸித்த சாரணகணங்களும் மூன்று லோகங்களிலுமுள்ள தேவர்ஷிகளும் ப்ரஹ்மர்ஷிகளும் அந்தக் கோரமான யுத்தத்தைப் பார்க்க அங்கே வந்து நின்று "பசுக்களுக்கும் ப்ராஹ்மணர்களுக்கும் ப்ராணிகளுக்கு ஹிதத்தையே விரும்பும் புண்யாத்மாக்களுக்கும் மங்களமுண்டாகட்டும். முன்பு மஹாவிஷ்ணு சக்ரத்தால் அஸுரர்களை அழித்ததுபோல் ரகுவீரனும் இந்த ராக்ஷஸர்களை அழிக்கட்டு" மென்று பேசிக்கொண்டு ராமன் ஜயிக்கவேண்டுமென்று ப்ரார்த்தித்தார்கள். காலாந்தகனைப்போல் தேஜஸால் ஜ்வலித்துக்கொண்டு யுத்தகளத்தில் நிற்கும் ராமனைப் பார்த்து ஸகல ப்ராணிகளும் நடுங்கின. ஸகல ஜகத்தையும் அழிக்கப் புறப்பட்ட ப்ரளய கால ருத்ரனைப்போல் அப்பொழுது ஒப்பில்லாத தேஜஸுடன் விளங்கும் ரகுநாதனை ஒருவரும் பார்க்கமுடியவில்லை.

இதற்குள் ராக்ஷஸ ஸைன்யம் ஸமீபித்தது. கோரமான கவசங்களாலும் ஆயுதங்களாலும் த்வஜங்களாலும் வாத்யத்வனியாலும் பர்வகாலத்தில் கரைகடந்து பொங்கும் ஸமுத்ரத்தைப் போல் பார்க்கப் பயங்கரமாக இருந்தது. சில ராக்ஷஸர்கள் ஸிம்ஹநாதஞ் செய்தார்கள். சிலர் மற்றவர்களை நோக்கி "நானே ராமலக்ஷ்மணர்களைக் கொல்வே"னென்று வீரவாதஞ்செய்தார்கள். சிலர் வில்லை வளைத்து நாணேற்றித் திக்குகள் நடுங்கும்படி டங்காரஞ்செய்தார்கள். சிலர் கொழுப்பால் அங்கங்களை நீட்டி நெட்டிமுறித்தார்கள். சிலர் கும்மென்று கத்தினர்கள். பேரீ முதலிய வாத்யங்களைச் சிலர் அடித்தார்கள். இவை யாவும்

சேர்ந்து அந்தக் காட்டில் ஒரே ஓசையாகப் பரவி அங்கிருந்த மிருகங்களும் பக்ஷிகளும் சிதறியோடும்படி செய்தது. அவை திரும்பிப் பார்க்காமல் அந்தக் கோரமான சப்தம் எட்டாதவிடத்தைத் தேடி ஓடின. இப்படிக் கடல் புரண்டு வருவதைப்போல் கரனுடைய ஸைன்யம் அதிவேகமாகத் தன்னை நோக்கி வருவதைப் பார்த்து ரண தீரனான ரகுவீரன் நான்கு புறத்திலும் திரும்பிப் பார்த்தார். கோதண்டத்தைத் கையில் பிடித்து அம்பறையிலிருந்து பாணங்களை எடுத்தார். கருணாமூர்த்தியானாலும் தன் பக்தர்களுக்குக் கெடுதி செய்கிறவர்களை அழிக்கவேண்டி மஹா கோபத்தை வருவித்துக்கொண்டார். ப்ரளய காலாக்னியைப்போல் கோபத்தால் ஜ்வலிக்கும் ரகுவீரனைக் கண்ணெடுத்துப் பார்க்க முடியாமல் அங்கிருந்த வனதேவதைகள் பயந்து ஓடின. கோபாவேசங் கொண்ட ராமனுடைய ரூபம் தக்ஷயாகத்தை நாசஞ்செய்யப் புறப்பட்ட ருத்ரனுடைய ரூபத்தைப்போல இருந்தது.

பல ஆயுதங்களாலும் நெருப்பைப்போல் ஜ்வலிக்கும் கவசங்களாலும் ஆபரணங்களாலும் த்வஜங்களாலும் விளங்கி அந்த ராக்ஷஸ ஸைன்யம் ராமனுக் கெதிரில் நிற்கும்பொழுது உதிக்கும் ஸூர்யனுக்கெதிரில் கறுத்துத் திரண்டு பரவியிருக்கும் மேகக் கூட்டம்போல் காணப்பட்டது.

——:o:——

## ஸர்க்கம் 25.

### ராம ராக்ஷஸ யுத்தம்

கரனும் அவனுடைய ஸைன்யங்களும் அந்த ஆச்ரமத்திற்கு வந்து வில்லுங்கையுமாக நிற்கும் ராமமூர்த்தியையும் சத்ருக்களை நாசஞ் செய்ய விளங்கும் அவருடைய கோபாவேசத்தையும் கண்டார்கள். கரன் வெகு ஸுலபமாக அவரை ஜயிக்க நினைத்து "அவன்மேல் ரதத்தைச் செலுத்"தென்று ஸாரதிக்குக் கட்டளையிட்டான். ரகுவீரன் ஒண்டியாக வில்லை அசைத்துக்கொண்டு நிற்குமிடத்திற்கு ஸமீபத்தில் அந்த மஹா ரதத்தை ஸாரதி கொண்டுபோய் நிறுத்தினான். உடனே அவனுடைய மந்த்ரிகளும் ஸைன்யங்களும் கோரமாக ஆரவாரித்துக்கொண்டு அவனைச் சூழ, நக்ஷத்

ரங்களுக்கு நடுவில் அங்காரகனைப்போல் தோன்றினன். பிறகு பல பாணங்களால் ராகவனை உபத்ரவித்தான். ராக்ஷஸர்கள் கோபத்தால் மெய்மறந்து யமபாசத்தைப்போன்ற வில்லால் தங்களை யமலோகத்திற்கு இழுக்கும் ராமமூர்த்தியின்மேல் பெரிய கதாயுதங்களையும் பட்டயங்களையும் சூலங்களையும் ஈட்டிகளையும் கத்திகளையும் கண்ட்ர கோடாரிகளையும் கணக்கில்லாமல் ப்ரயோகித்தார்கள். மலைகளைப்போன்ற யானைகளின்மேலும் குதிரைகளின் மேலும் ரதங்களின்மேலுமிருந்து மஹா மேகங்கள் இடி மின்னல்களுடன் ஸூர்யனை நோக்கி வருவதுபோல் ராமனை நாசஞ்செய்ய நினைத்துச் சரமாரி பொழிந்தார்கள். மழைத் துளிகள் மலையில்மேல் விழுந்து தெறிப்பதைப்போல் அவை ராமனை நெருங்கவில்லை. ஆற்று வெள்ளத்தை ஸமுத்ரம் தடுப்பதுபோல் ராமன் கூர்மையான அம்புகளால் அவர்களுடைய சரமாரியைத் தடுத்து இருந்தவிடம் தெரியாமல் அழித்தார். கொழுந்துவிட்டெரியும் வஜ்ராயுதத்தால் பிளக்கப்படும் பெரிய மலையைப்போல் அந்த ஆயுதங்களால் எல்லா அவயவங்களிலும் பிளக்கப்பட்டும் அவர் கொஞ்சங்கூட வருத்தமடையவில்லை. தேஹமெங்கும் காயமடைந்து ரக்தம்பெருக, ஸந்த்யாகாலத்தில் மேகங்களால் சூழப்பட்ட ஸூர்யனைப்போல் விளங்கும் ரகுநந்தனன் பல்லாயிரம் ராக்ஷஸர்களால் சூழப்பட்டிருப்பதைப் பார்த்துத் தேவ ரிஷி கணங்கள் கவலையடைந்தார்கள்.

பிறகு ராமன் கோபங்கொண்டு கோதண்டத்தை வட்டமாக வளைத்துப் பல்லாயிர பாணங்களை எய்தார். (இறகுகளால் அலங்கரிக்கப்படாத அம்புகளே பாணங்கள்) அவை தடுக்கமுடியாதவை, தாங்க முடியாதவை, யமதண்டத்தைப்போல் ராக்ஷஸர்களின்மேல் விழுந்து அந்தப் பாபிகளின் உயிர்களைக் காலபாசத்தைப்போல் கட்டியிழுத்து யமலோகத்திற்குக் கொண்டுபோயின. அவர்களுடைய தேஹங்களைப் பிளந்து ரக்தத்தால் பூசப்பட்டு ஆகாசத்தில் போய் நெருப்புக் கொழுந்துகளைப்போல் ப்ரகாசித்தன. அவை கோதண்டத்திலிருந்து கணக்கில்லாமல் கிளம்பி, நெருப்பு ஜ்வாலைகளைக் கக்கிக்கொண்டு, ராக்ஷஸர்களின் உயிரென்ற நெய்யால் வளர்க்கப்பட்டு, வில்லுகளையும் கொடிகளையும் கவசங்களையும் தலைகளையும், ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டு

யானைத் துதிக்கைகளைப்போல் விளங்கும் புஜங்களையும் தொடைகளையும், தங்க ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டு ரதங்களில் கட்டியிருக்கும் குதிரைகளையும் ஸாரதிகளையும் ரதங்களையும் யானைகளையும் யானைப்பாகர்களையும் குதிரைகளையும் குதிரைப்பாகர்களையும் காலாட்களையும் அதிசீக்ரத்தில் யமலோகத்திற்கு அனுப்பின. நாளீகங்களாலும் நாராசங்களாலும் விகர்ணிகளாலும் சித்ரவதை செய்யப்பட்டு ராக்ஷஸ ஸைன்யம் பயங்கரமாகக் கத்திற்று. (நாளீகம், முனையில் மாத்ரம் இரும்புள்ளது. நாராசம் இரும்பாலேயே செய்யப்பட்டது. விகர்ணி முனையில் வளைவுடன் வெளியிலிருக்கும்பொழுது குடலைப் பிடுங்கிக் கொண்டுவரும்.) இப்படிக் கூர்மையான அம்புகளால் மர்மஸ்தானங்களில் அடிபட்டு அந்த ராக்ஷஸ ஸைன்யம் காய்ந்த காட்டில் தீப்பிடித்ததுபோல் தபித்தது.

பயங்கரமான பலசாலிகளான சில ராக்ஷஸவீரர்கள் ராமனுக்கு எதிரில் நின்று சூலம் கத்தி கண்ட்ரகோடாலி முதலிய பல ஆயுதங்களை அவர் மேல் எறிந்தார்கள். ரகுநாதன் அவைகளை அம்புகளால் துண்டித்து அவர்களுடைய தலைகளை அறுத்தார். அவர்கள் வில்லொடிந்து கவசம் பிளந்து, தலையறுந்து, கருடனுடைய இறக்கைகளின் வேகத்தால் மரங்கள் வேரற்று விழுவதுபோல் பூமியில் விழக்கண்டு மற்றவர்கள் பயந்து கரனிடத்திற்குப் போய்ச் சரணமடைந்தார்கள். அப்பொழுது தூஷணன் அவர்களை ஸமாதானஞ்செய்து திருப்பி, யமன் பரமசிவனை நோக்கி ஓடிவந்ததுபோல், ராமச்சந்த்ரனை நோக்கி ஓடிவந்தான். தூஷணனால் தைர்யமடைந்து பயமற்று அந்த ராக்ஷஸர்கள் பனை ஆசா முதலிய மரங்களையும் அம்புகளையும் சூலம் உலக்கை முதலிய ஆயுதங்களையும் எடுத்துக்கொண்டு ஓடிவந்து ராமன்மேல் மரங்களையும் பாறைகளையும் ஆயுதங்களையும் அம்புகளையும் பொழிந்தார்கள். ஒண்டியாக நின்ற ராமனுக்கும் கணக்கில்லாமல் அவரைச் சூழ்ந்து நின்ற ராக்ஷஸர்களுக்கும் நடந்த அந்த யுத்தம் பயத்தையும் ஆச்சர்யத்தையும் உண்டாக்கிற்று. அவர்கள் கோபத்தால் நெருப்புப் பொறிகள் பறக்கும் கண்களுடன் நான்கு புறத்திலிருந்து ஆயுதங்களையும் அம்புகளையும் ப்ரயோகித்துக் கிட்ட நெருங்குவதைக் கண்டு ராமமூர்த்தி லோகங்கள் நடுங்

கும்படி ஒரு ஸிம்ஹநாதஞ்செய்து அவர்களைக் கொல்ல நினைத்து ஸூர்யனைப்போல் ஜ்வலிக்கும் ஒரு கந்தர்வாஸ்த்ரத்தைத் தொடுத்தார்.

உடனே கோதண்ட மண்டலத்திலிருந்து பாணக்கூட்டங்கள் கணக்கில்லாமல் ஒரே காலத்தில் கிளம்பித் திசைகளை மறைத்தன. ராக்ஷஸர்கள் அவைகளால் பிளக்கப்பட்டு, ராமன் பாணங்களை எடுப்பதையும் தொடுப்பதையும் காணமுடியவில்லை. அவை கிளம்புமிடத்திலிருந்து உண்டாகும் ப்ரகாசத்தால் ராமன் மாத்ரம் தோன்றினர். அவை வந்து விழுவதற்கும் உயிரைப் போக்குவதற்கும் பிணங்கள் கீழே விழுவதற்கும் கொஞ்சமாவது இடைவெளி காணப்படவில்லை. ஒரே காலத்தில் சகல ராக்ஷஸர்களும் அடிபட்டு உயிரற்றுப் பூமியில் விழுந்தார்கள். சிலர் காயமடைந்தார்கள். சிலர் இடிவிழுந்ததுபோல் பூமியில் விழுந்தார்கள். சிலர் குற்றுயிராக விழுந்தார்கள். சிலர் இரண்டாக வெட்டப்பட்டார்கள். சிலர் துண்டு துண்டாக வெட்டப்பட்டார்கள். சிலர் கிழிக்கப் பட்டார்கள். இப்படி அங்கங்கே பலவிடங்களில் தலைப்பாகைகளுடன் தலைகளும் வெறுந்தலைகளும் ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டவைகளும் துடைகளும் கால்களும் யானைகளும் குதிரைகளும் ரதங்கள் சாமரங்கள் குடைகள் விசிறிகள் கொடிகள் சூலங்கள் பட்டயங்கள் கத்திகள் ஈட்டிகள் கண்ட்ர கோடாலிகள் பாறைகள் அம்புகள் முதலியவைகளும் ராகவனுடைய சரமாரியால் கண்ட துண்டமாகி அந்தப் போர்க்களத்தில் பயங்கரமாகச் சிதறிக்கிடந்தன. ராமமூர்த்தியின் பாணத்தின் மஹிமையை வர்ணிக்கவும் முடியுமா?

—: o .—

## ஸர்க்கம் 26.

## தூஷண வதம்

இப்படித் தன் ஸைன்யம் மடிந்ததைப் பார்த்துத் தூஷணன், யுத்தத்தில் திரும்பாதவர்களும் மஹா வேகமுள்ளவர்களும் எதிர்க்க முடியாதவர்களுமான ஐயாயிர ராக்ஷஸர்களை அனுப்பினன். அவர்கள் சூலம் பட்டயம் கத்தி பாறை அம்பு மரம் முதலியவை

களால் இடைவிடாமல் நான்கு புறங்களிலிருந்தும் ராமன்மேல் பொழிந்தார்கள். அதைக்கண்டு ராகவன் கூர்மையான பாணங்களால் அவைகளைத் தடுத்துக், கொழுத்த விருஷபத்தைப் போல் மதத்தால் கண்களை மூடிக்கொண்டு கொஞ்சமேனும் லக்ஷ்யஞ் செய்யாமல், ஸகல ராக்ஷஸர்களையும் கொல்ல நினைத்துக் கோபங் கொண்டு, கண்களிலிருந்து நெருப்புப் பொறி பறக்க, நான்கு புறங்களிலிருந்து க்ரூரமான பாணங்களைப் பொழிந்து, தூஷணனையும் அவனுடைய ராக்ஷஸர்களையும் சிதறவடித்தார். உடனே அவன் இடியைப்போன்ற பல அம்புகளால் ராமனைத் துளைக்க, ரகுநாதன் இவனுடன் எவ்வளவு நேரம் சண்டை செய்கிறதென்று, ஒரு பாணத்தால் அவனுடைய வில்லையும் நான்கு பாணங்களால் ரதத்தில் கட்டின நான்கு குதிரைகளையும், ஒரு அர்த்த சந்த்ர பாணத்தால் ஸாரதியின் தலையையும் அறுத்து, மூன்று பாணங்களால் தூஷணனுடைய மார்பைப் பிளந்தார். உடனே அவன் வில்லிழந்து, குதிரைகள் இறந்து, ரதம் ஒடிந்து, ஸாரதியில்லாமல் கீழே குதித்து மலையைப்போல் பயங்கரமான ஒரு குண்டாந்தடியை எடுத்துக் கொண்டு ராமன்மேல் பாய்ந்தான். அது தங்கக்கட்டுகளால் அலங்கரிக்கப்பட்டுக் கூர்மையான இரும்பு முளைகள் பதிக்கப் பட்டுச் சத்ருக்களுடைய ஹ்ருதயத்தின் மாம்ஸத்தால் பூசப்பட்டிருந்தது. தேவ ஸைன்யங்கள் அதைக் கண்டால் நடுங்குவார்கள். பகைவர்களின் பட்டணங்களையும் கோபுரங்களையும் தூளாக்கும். கால ஸர்ப்பத்தையும் வஜ்ரத்தையும் போல் பயங்கரமான அந்த ஆயுதத்தை எடுத்துக்கொண்டு ஓடிவரும் தூஷணனைப் பார்த்து இரண்டு பாணங்களால் அவனுடைய புஜங்களை வெட்டித்தள்ளினர். அவன் பெரிய இந்த்ரத்வஜத்தைப்போலும் கொம்பொடிந்த மஹா கஜத்தைப்போலும் புஜங்கள் அறுந்து உடனே பூமியில் விழுந்து இறந்தான்.

ஸகல ப்ராணிகளும் ராமனைக் கொண்டாடினர்கள். இதற்குள் மஹாகபாலன் பெரிய சூலத்தையும் ஸ்தூலாக்ஷன் பட்டயத்தையும் ப்ரமாதி கண்ட்ரகோடாலியையும் தூக்கிக்கொண்டு கோபாவேசத்துடன் காலபாசத்தால் கட்டியிழுக்கப்பட்டவர்களைப்போல் ராமன்மேல் பாய்ந்தார்கள். ராகவன் ச்ரேஷ்டமான அதிதிகளைப்போல் அவர்களை எதிர்கொண்டுபோய்க் கூர்

அங்கே மஹா மேகம்போன்ற ஒரு ஆலமரம் நான்கு புறத்திலும் பல யோஜனை நீளமுள்ள கிளைகளுடன் காணப்பட்டது. அதனடியில் பல மஹர்ஷிகள் முன்பு தபஸ்செய்து கொண்டிருந்தார்கள். அப்பொழுது கருடன் மலையைப்போன்ற யானையையும் ஆமையையும் நகங்களால் தூக்கிக்கொண்டு அவைகளைப் புஜிக்க அந்த ஆலமரத்தில் உட்கார்ந்தார். அந்தப் பாரந்தாங்காமல் அந்தக் கிளை முறிந்து விழ, அதனடியிலிருந்த மஹர்ஷிகள் நாசமடைவார்களோவென்று கருடன் பயந்தார். ஆகையால் அந்தக் கிளையையும் ஏந்திக்கொண்டு வெகுதூரம் பறந்துபோய், ஆமையையும் யானையையும் தின்று, அந்தக் கிளையை ஒரு வேடச்சேரியில் எறிந்து, அதனால் அங்கிருந்த துஷ்டர்களைக் கொன்றார். அந்தப் பாபிகளால் துன்பப்படுத்தப்பட்ட அங்கிருந்த முனிவர்களுடைய கஷ்டத்தைத் தீர்த்து வெகு ஸந்தோஷமடைந்து அந்த இரண்டு மஹா ஜந்துக்களைத் தின்றதால் இருமடங்கான, பலத்துடன், அமிருதத்தைக் கொண்டுவர தேவலோகத்திற்குப் போனார். இரும்பால் செய்யப்பட்ட வலைகளையும் யந்த்ரங்களையும் முறித்து, ரத்னத்தால் அமைக்கப்பட்ட கோட்டையை இடித்து, அதற்குள் வைத்திருந்த அமிருதத்தைத் தேவர்களிடத்திலிருந்து எடுத்து வந்தார். இப்படி மஹர்ஷிகள் அதனடியில் தபஸ் செய்யப்பெற்றுக் கருடனால் முறிக்கப்பட்ட அந்தக் கிளையை ராவணன் பார்த்தான்.

வெகு தூரம் போய் ஸமுத்ரத்தின் அக்கரைக்கு வந்து, ஒரு பரிசுத்தமான வனத்தில் தனிமையான ஆச்ரமத்தில் முனிவேஷத்துடன் ஆஹா நியமத்துடன் மாரீசன் தபஸ்செய்வதைப் பார்த்தான். தனக்குப் பந்துவாகவும் அரசனாகவுமிருக்கும் ராவணனைக் கண்டு மாரீசன் விசேஷ மர்யாதை செய்து உத்தமமான அன்ன பானங்களால் உபசரித்தான். பிறகு ராவணன் ஸுகமாக ஆஸனத்தில் உட்கார்ந்திருக்கையில் மாரீசன் மிகுந்த வணக்கத்துடன் தசமுகனைப் பார்த்து "மஹாராஜ! லங்கையில் தங்கள் ஜனங்களும் பந்துக்களும் க்ஷேமமா? தாங்கள் ஒண்டியாக இவ்வளவு சீக்ரமாக இங்கே வந்த காரணமென்ன"வென்றான். (விச்வாமித்ர யாககாலத்தில் ராமன் அவனை அடித்துத் தள்ளினதுமுதல் மாரீசன் வைராக்யமடைந்து தபஸ்வியானான்.)

—:o:—

ஸர்க்கம் 36.

## ராவணன் மாரீசனை வேண்டினது

ராவணன் "மாரீச! பெரிய கவலைகொண்டிருக்கிறேன். அதைத் தீர்க்க உன்னைத் தவிர வேறொருவனுமில்லை. ஜனஸ்தானத்திலிருந்த என் தம்பிகளான கரதூஷண த்ரிசிரஸ் என்றவர்களும் என்னுடன் பிறந்த சூர்ப்பநகையும் இன்னும் பல ராக்ஷஸர்களும் என் கட்டளையால் அங்கே வஸித்துக் கொண்டிருந்தார்களென்று உனக்குத் தெரியும். அவர்கள் அங்குள்ள ரிஷிகளின் தபஸ்களையும் தர்மங்களையும் கெடுத்துக்கொண்டு மஹா வீரர்களாக ஸுகமாகக் காலங்கழித்தார்கள். யுத்தத்தில் உத்ஸாஹமுள்ள அந்தப் பதினாலாயிரம் ராக்ஷஸர்களும் எல்லா ஆயுதங்களுடனும் ராமனை யுத்தத்தில் எதிர்த்தார்கள். அவன் கோபங்கொண்டு கடுமையான வார்த்தை ஒன்றும் சொல்லாமல் அவர்களை அதிசீக்ரத்தில் பாணங்களால் கொன்றான். பூமியில் நின்றுகொண்டு யுத்தஞ்செய்த ஒரு மனிதனால் கரனும் தூஷணனும் த்ரிசிரஸும் மாண்டது என்ன ஆச்சர்யம்! தண்டகாரண்யத்தில் ப்ராணிகள் பயமில்லாமல் நடமாடுகின்றனவாம்! அவனுடைய தகப்பன், கோபங்கொண்டு அவனைக் காட்டிற்குத் துரத்தினான். (இது ராவணனுக்கு எப்படித் தெரியும்?) மனைவியுடன் இந்தக் கோரமான வனத்தில் வஸிப்பவன், எவ்வளவு காலம் பிழைத்திருப்பான்? அவன் க்ஷத்ரியகுலத்தைக் கெடுக்கவந்தவன், நீசன், தயையில்லாதவன், முட்டாள், க்ரூரன், பேராசைகொண்டவன், இந்த்ரியஸ்வாதீனமற்றவன், தர்மத்தை விட்டவன், ப்ராணிகளுக்குக் கெடுதியைத் தேடுகிறவன், யாதொரு விரோதகாரணமுமின்றிக் கேவலம் பலக்கொழுப்பால் என் தங்கை சூர்ப்பநகையின் காது மூக்குகளை அந்யாயமாக அறுத்தான். (தனக்காக ஸீதையை எடுத்துவரச் சூர்ப்பநகை முயன்றதை அவள் சொன்னாள். அது விரோதகாரணமாகாதோ?). ஆகையால் தேவஸ்த்ரீகளைப்போன்ற அவனுடைய மனைவியை ஜனஸ்தானத்திலிருந்து எடுத்துக்கொண்டு வருகிறேன். நீயும் என் தம்பிகளுமிருக்கையில் தேவர்கள் ஒன்று சேர்ந்து எதிர்த்தாலும் லக்ஷ்யம் பண்ணமாட்டேன். ஆகையால் எனக்கு உதவிசெய். வீர்யத்திலும் கொழுப்பிலும் யுத்தத்திலும் உனக்கு ஈடில்லை. நீயோ மஹாசூரன், ஸகலமாயைகளையும் அறிந்

தவன், ஸகல உபாயங்களையும் அறிந்தவன். இதற்காகவே உன்னிடத்தில் வந்தேன்.

வெள்ளிப் புள்ளிகளுள்ள தங்க மானாக நீ ரூபமெடுத்து, ஸீதை பார்க்கும்படி அவர்களுடைய ஆச்ரமத்திற்கருகில் நீ அலைந்துகொண்டிரு. அவள் ஸந்தேகமின்றி உன்னை மானென்றே எண்ணிப்பிடித்துத் தரச்சொல்லி ராஜபுத்ரர்களை வேண்டுவாள். நீ அவர்களை வெகு தூரம் அழைத்துக்கொண்டுபோன பிறகு, ராஹு சந்த்ரனைப் பிடிப்பதுபோல் ஸீதையை ஸுலபமாக எடுத்து வருவேன். ராமன் ஸீதையை விட்டுப் பிரிந்து மனங்குன்றி வெகு ஸுலபமாக என்னால் கொல்லப்படுவான். அப்பொழுது என் எண்ணங்கள் நிறைவேறு''மென்றான்.

ராமனுடைய பெயரைச் சொன்னவுடனே மாரீசனுடைய முகம் பயத்தால் சுண்டிற்று; கைகால்கள் நடுங்கின; வாய் உலர்ந்தது. ஒரு தரம் உதடுகளை நக்கிக்கொண்டு கண் கொட்டாமல் சவத்தைப்போல் ராவணனை வெறிக்கப்பார்த்தான். இப்படிப் பயத்தாலும் துக்கத்தாலும் மனமொடுங்கித், தண்டகாரண்யத்தில் ராமனுடைய பராக்ரமத்தை அறிந்ததால் கைகூப்பி வணக்கத்துடன், தனக்கும் ராவணனுக்கும் ஹிதத்தைச் செய்யும் வார்த்தைகளையும் ராமனுடைய உண்மையான ஸ்வரூபத்தையும் எடுத்துரைத்தான்.

—:o.—

## ஸர்க்கம் 37.

## மாரீசனுடைய உபதேசம்

"மஹாராஜ! யஜமானனுடைய க்ஷேமத்தையும் கெடுதியையும் ஆபத்துக் காலத்திலும் யோசிக்காமல், கேவலம் தங்களுடைய லாபத்தையே மேலாக எண்ணி இச்சகம் பேசுகிறவர்கள் அரசனிடத்தில் பலருண்டு. ஆனால் ப்ரபுவின் ஹிதத்தைக்கவனித்து, அப்பொழுது கடுமையாகத் தோன்றினாலும் கெடுதியைப்போல் காணப்பட்டாலும் முடிவில் நன்மையையும் ஸுகத்தையும் கொடுக்கும் புத்திமதியை, ப்ரபுவின் கோபத்திற்குப் பயப்படாமல் தன் கடமையையும் தர்மத்தையுமே பெரிதாகவெண்ணி அடிக்கடி

தைர்யத்துடன் சொல்லுகிறவன் லோகத்தில் கிடைப்பதரிது. அப்படிச் சொன்னாலும், காமத்தாலும் கோபத்தாலும் புத்தி மயங்கிப், பக்ஷபாதத்திற்கு இடங்கொடாமல், ப்ரியமில்லாத அந்த வார்த்தைகளைக் கேட்கும் ப்ரபு கிடைப்பது அதைவிட அரிது. ராமனைப்பற்றித் தங்களுடைய தூதர்கள் யாதொன்றும் தெரிவிக்கவில்லையென்று எண்ணுகிறேன். மஹாவீரனென்றும் லோகபாலர்களுக்கு மேலானவனென்றும் உத்தம குணங்கள் வாய்ந்தவனென்றும் தங்களுக்குத் தெரிந்திராது. அல்லது பல விஷயங்களில் புத்தியைச் செலுத்துவதால் கவனித்திருக்கமாட்டீர்கள். குழந்தாய்! உனக்கு எவ்வளவோ ஹிதத்தைச் சொல்லி இப்பொழுதே உன்னை அனுப்பினேனே. இவ்வளவு சீக்ரத்தில் நீ திரும்பி வந்ததைப் பார்த்தால் பிறருடைய போதனை மேலிட்டு, என் ஹிதோபதேசம் பலிக்கவில்லையென்று தெரிகிறது. ஐயோ! லோகத்திலுள்ள ராக்ஷஸர்கள் யாவரும் க்ஷேமமாக இருக்க வேண்டுமே. ராமன் கோபங்கொண்டு ராக்ஷஸப் பூண்டே லோகத்திலிராமல் வேரறுப்பானோ தெரியவில்லையே? உன்னை அழிக்கவே ஸீதை பிறந்திருக்கிறாளோ? என் நாசத்திற்கும் அவளே காரணமாவாளோ? ஸாதுக்களின் ஹிதோபதேசத்தைக் கேளாமல் இஷ்டப்படி நடக்கும் உன்னை அரசனாக அடைந்து லங்கையும் ராக்ஷஸ குலமும் அழியுமோ? துர்ப்புத்தியுள்ள மந்த்ரிகளால் சூழப்பட்டுக் கெட்ட நடத்தையுள்ளவனாகக் கட்டுப்பாடில்லாமல் நடக்கும் உன்னைப்போன்ற அரசன் தன்னையும் அண்டினவர்களையும் ராஜ்யத்தையும் நாசஞ்செய்வான்.

ராமன் தகப்பனால் காட்டிற்குத் துரத்தப்படவில்லை; தர்மத்திற்கு கட்டுப்படாதவனல்ல; பேராசை பிடித்தவனல்ல; கெட்ட நடத்தையுள்ளவனல்ல; கொடியவனல்ல; ப்ராணிகளுக்குக் கெடுதியைச் செய்கிறவனல்ல; எல்லா உத்தம குணங்களாலும் அலங்கரிக்கப்பட்டுக் கௌஸல்யையின் பாக்யரூபமாய் அவதரித்தவனல்லவா? ஸத்யந்தவறாத தன் பிதா, கைகேயியால் ஏமாற்றப்பட்டதால், ஸகல தர்மங்களையும் அறிந்த ராமன் தகப்பன் செய்த ப்ரதிக்ஞையை நிறைவேற்றக் காட்டிற்குப் போக இணங்கினான். கைகேயியையும் தசரதரையும் ஸந்தோஷப்படுத்த விரும்பித் தனக்கு ந்யாயமாகக் கிடைக்கவேண்டிய ராஜ்யத்தையும் போகங்களையும்

விட்டு வனத்திற்கு வந்தான். (காட்டிலிருந்தவனுக்கு அயோத்யையில் நடந்த வரலாறும் ராமனுடைய நிஜஸ்வரூபமும் எப்படித் தெரிந்தது?)

ராமன் கடின சித்தமுடையவனல்ல, ஞானமற்றவனல்ல, இந்த்ரியங்களை ஜயிக்காதவனல்ல. பிறர் விபரீதமாகச் சொன்னதை நீயும் விசாரிக்காமல் சொல்லலாமா? தர்மதேவதையின் அவதாரமே ராமன், அவனிடத்தில் எள்ளளவாவது தோஷமிருக்க முடியாமா? பரம ஸாது. அவனுடைய பராக்ரமம் வீணாகாது. இந்த்ரன் தேவர்களுக்கு எப்படி நாயகனோ அப்படி ராமன் லோகங்களுக்கு நாதன். அவனுடைய மனைவியும், மஹா ஞானியான ஜனகருடைய புத்ரியுமான ஸீதை, தன் பதிவ்ரதாதர்மத்தாலேயே காக்கப்பட்டிருக்கிறாள். ஸூர்யனை விட்டுத் தேஜஸ் எப்படிப் பிரியாதோ அப்படி ராமனை விட்டு அவள் பிரியாள். ஸூர்யனுடைய காந்தியைத் திருட முயல்வது எப்படி முடியாதோ அப்படி ஸீதையை எடுத்துவருவதும் அஸாத்யம். ஸூர்யனுடைய தேஜஸைத் திருட முயன்றவன் அதனால் மடிவதுபோல் ஸீதையைத் திருட முயன்றவனும் அவளால் மடிவான். ராமன் காலாக்னியைப் போன்றவன்; கிட்டி நெருங்கமுடியாது. கோதண்டமே அதை வளர்க்கும் விறகு; பாணங்களே அதன் ஜ்வாலை. அந்த நெருப்பில் வலுவில் போய் விழாதே ராமன் காலனைப் போன்றவன்; அவனுடைய வில்லே திறந்த வாய்; சத்ருக்களால் தாங்க முடியாத அவனுடைய பாணங்களே தேஜஸ். சத்ரு ஸைன்யங்களை அழிக்கும் கோதண்டமே காலபாசம். அவனை நெருங்கி எதிர்த்தால் உன் ராஜ்யமும் உயிரும் ஸுகமும் எண்ணங்களும் பாழாகும், அழிவாய், அப்படிச் செய்யாதே. ஜனகருடைய பெண் எவனைச் சேர்ந்தவளோ அவன் நிகரற்ற தேஜஸுடையவன்; அவர்கள் வனத்திற்கு வந்திருப்பதால் அவளை ராமன் வெகு ஜாக்ரதையாகக் காப்பாற்றுவான். மஹா ஞானியான ஜனகருக்குப்பிறந்து ராமனுடைய கோதண்டத்தால் ரக்ஷிக்கப்படுகிறவளை நீ எடுத்துவர முடியுமா? ராமன் மனிதர்களுக்குள் ஸிம்ஹத்தைப் போன்றவன். ஸிம்ஹத்தின் மார்பைப்போல் பருத்து விசாலமான மார்பையுடையவன். அவனுடைய மனைவி அவனுடைய தர்மங்களைக் குறைவின்றி நடத்துகிறவள். உயிரைக்காட்டிலும்

அவனுக்கு ப்ரியமானவள். கொழுந்து விட்டெரியும் நெருப்பு ஜ்வாலையைப்போன்ற ஸீதையை எவனுவது திருட நினைப்பானு? மஹா பராக்ரமசாலியான ராமனுடைய பத்னியைப் பலவந்தஞ் செய்ய எவனுவது துணிவானு? இந்த வீண் முயற்சியை ஏன் செய்கிருய்? அவனை யுத்தகோலத்துடன் கண்டவுடனேயே உன் உயிர் போகும், ராஜ்யமும் ஸுகமும் உயிரும் மனிதனுக்குக் கிடைப்பது அரிது. வெகுகாலம் இவைகளை அனுபவிக்க எண்ண மிருந்தால் ராமனைக் கோபமூட்டாதே. விபீஷணன் முதலிய தர் மாத்மாக்களான ஸகல மந்த்ரிகளுடன் ஆலோசித்துக் குண தோஷங்களுடைய பலாபலத்தையும் உன் சக்தியையும் நீ நன்முக விசாரித்து, ராமனுடைய சக்தியையும் பூர்ணமாகவும் உண்மை யாகவும் தெரிந்துகொண்டு, உனக்கு ஹிதத்தையும் கெடுதியையும் நிச்சயித்துப், பிறகு எது உசிதமோ அப்படிச் செய்யவேண்டும். ராமனுடன் நீ யுத்தஞ்செய்தால் தோற்று மடிவாயென்று எனக் குத் தோன்றுகிறது. என் வார்த்தைகள் மேலாகவும் ஹிதமாக வும் யுக்திக்கு ஒத்துமிருக்கும். கவனித்துக் கேள்.

—:o:—

## ஸர்க்கம் 38.

(தொடர்ச்சி)

"ராவண! நான் இதுவரையில் சொன்ன வார்த்தைகள் கல்பனையல்ல. ராமனுக்குப் பயந்து உனக்கு ஒத்தாசை செய்ய இஷ்டமில்லாமல் சாக்குச்சொல்வதல்ல. நான் நேரே பார்த்து அனுபவித்துச் சொல்லுகிறேன், கேள். ஒருக்கால் நான் பதின யிர யானைகளின் பலங்கொண்டவனென்று கொழுப்படைந்து மஹாவீரனென்று நினைத்து மலையைப்போல் பருத்து, நீருண்ட மேகத்தைப் போல் கறுத்துப் பயங்கரமான ரூபத்துடன் தங்கங் குண்டலங்களாலும் கிரீடங்களாலும் அலங்கரிக்கப்பட்டு, எல்லா ப்ராணிகளையும் நடுங்கச் செய்துகொண்டு ரிஷிகளைக் கொன்று தின்று தண்டகாரண்யத்தில் திரிந்தேன். அப்பொழுது விச்வா மித்திரர் யாகம் செய்துகொண்டிருக்கையில் நான் அதை அழித்து அவரை பயப்படச் செய்தேன். அவர் தசரதரிடத்திற்குப்போய் "மஹாராஜ! நான் யாகம்செய்கையில் மாரீசனென்ற ராக்ஷஸன்

அதை அழித்து என்னுடனிருக்கும் ரிஷிகளைப் பயமுறுத்தித் துன்பப்படுத்துகிறான். ஆகையால் ராமனென்ற உமது புத்ரனை என்னுடன் அனுப்ப வேண்டு"மென்று ப்ரார்த்தித்தார். அவ்வரசன் "மஹர்ஷே! ராகவன் சிறு குழந்தை. பன்னிரண்டு வயஸ் நிறையவில்லை. அஸ்த்ர வித்யையில் பயிற்சி முடியவில்லை. சத்ருக்களின் பலாபலங்களை அறியான். என் சதுரங்க ஸைன்யத்துடன் நானே தங்களுடன் வந்து அந்தத் துஷ்ட ராக்ஷஸர்களை நாசஞ் செய்கிறே"னென்றார். விச்வாமித்ரர் "நீர் முன் காலத்தில் தேவதைகளுக்காக அஸுரர்களுடன் யுத்தஞ்செய்து அவர்களை ஜயித்து வெகு கீர்த்தி பெற்றீர். அது இவ்வுலகத்திலும் பரவியிருக்கிறது. உமது ஸைன்யம் இங்கேயே இருக்கட்டும். இந்த ராக்ஷஸனை ஜயிக்க ராமனைத்தவிர வேறொருவராலும் முடியாது. இவன் சிறுவனாலும் அந்தத்துஷ்டனை அடக்கப் போதும். ஆகையால் ராமனை அழைத்துப் போகிறேன்; உமக்கு ஸகல மங்களமுண்டாகட்டு"மென்று ராமனைக் கூட்டிக்கொண்டு வெகு ஸந்தோஷத்துடன் தன் ஆச்ரமத்திற்கு வந்தார். (இது மாரீசனுக்கு எப்படித் தெரியும்?). பிறகு யாகம் செய்ய ஆரம்பித்து நடத்துகையில் குழந்தையான ராமன் வில்லுங் கையுமாக ஸமீபத்திலிருந்து அதைக் காப்பாற்றி வந்தான். பாலன், யௌவனத்திற்குள்ள அடையாளங்கள் உண்டாகவில்லை. ப்ரஹ்மசாரியானதால் ஒற்றை வஸ்த்ரத்தை உடுத்திக்கொண்டிருந்தான். க்ஷத்ரியர்களுக்கு ஏற்பட்ட ஜில்பாவுடனும் தங்கமாலையுடனும் விளங்கினான். பூர்ண சந்திரன் உதித்ததுபோல் அந்தத் தண்டகாரண்யத்தைத் தன் தேஜஸால் ஜ்வலிக்கச் செய்தான். அப்பொழுது நான் கருத்த பெருமேகத்தைப் போன்ற சரீரத்துடன், மின்னலைப்போல் ப்ரகாசிக்கும் தங்கக் குண்டலங்களால் அலங்கரிக்கப்பட்டு, என் பலத்தாலும் நான் அடைந்த வரத்தாலும் கர்வங்கொண்டு, அலக்ஷ்யமாக அங்கே போய், பயங்கரமான இரும்புக் கட்டுத் தடியைச் சுழற்றிக்கொண்டு அவன்மேல் பாய்ந்தேன். ராமன் பயப்படாமல், கலங்காமல் என் தலையைக் கண்டவுடனே கோதண்டத்தை எடுத்து வளைத்து நாணேற்றித் திக்குகள் நடுங்கும்படி டங்காரஞ்செய்தான். அந்த ஓசையால் என் புத்தி சிதறிற்று; ஆனாலும், இந்தச் சிறு பிள்ளையால் என்ன செய்ய முடியுமென்று அவனை அலக்ஷ்யஞ்செய்து, விச்வாமித்ரர் ஹோமஞ்

செய்யும் அக்னி குண்டத்தை நோக்கி ஓடினேன். உடனே ராகவன் ஓர் கூர்மையான பாணத்தை விடுத்தான். அது என்னை அடித்துத் தள்ளி நூறுயோஜனைக்கு அப்பாலுள்ள கடலில் அழுத்திற்று. என்னைக் கொல்ல அவனுக்குத் திறமையிருந்தும் என் உயிரை வாங்காமல் விட்டதற்குக் காரணம் தெரியவில்லை. ராம பாணத்தின் வேகத்தால் துரத்தப்பட்டு ப்ரக்ஞை போயிற்று. மெள்ள மெள்ளத் தெளிந்து, வெகு நேரம் வரையில் ஸமுத்ரத்தில் கிடந்த பிறகு லங்கைக்குப் போனேன். சிறு குழந்தை ; அஸ்த்ர வித்யையைப் பூரணமாக அறியாதவன் ; ஒருக்காலும் பிறர்கு ஹிம்ஸை செய்யாதவன். ஒரு பாணத்தால் என்னை அந்தப் பாடு படுத்தினன். என்னுடன் வந்தவர்கள் அவனுடைய அம்புகளுக்கு இரையானர்கள்.

ஆகையால் அவனுடன் யுத்தஞ் செய்யாதேயென்று உன்னை தடுக்கிறேன். அவனுடன் பகைக்காதேயென்று வேண்டுகிறேன். அப்படியும் கேட்காவிட்டால் வெகு சீக்ரத்தில் கொடிய ஆபத்து நேரும். உன் குடிகள் வேடிக்கையிலும் விளையாட்டிலும் ஸ்த்ரீ ஸுகத்திலும் காலங்கழித்துக்கொண்டு ஆனந்தமாகவிருக்கிறார்கள். அவர்களுக்குக் கஷ்டத்தையும் நாசத்தையும் ஏன் வருவிக்கிறாய்? உப்பரிகைகள் அரண்மனைகள் தோட்டங்கள் விளையாட்டு வீடுகள் விளையாட்டு மலைகள் தாமரையோடைகள் முதலியவைகளாலும் பலவித ரத்னங்களாலும் விளங்கும் லங்கை ஸீதையால் அழிவதைப் பார்ப்பாய். உன் கெட்ட நடத்தையால் உன்னைச் சேர்ந்த குற்றமற்ற ராக்ஷஸர்களும் அழிவார்கள். லோகத்தில் சுத்தமான நடத்தையுள்ள புண்யவான்களும் பாபிகளுடன் சேர்ந்தால், ஸர்ப்பங்கள் நிறைந்த மடுவிலுள்ள மீன்களும் அவைகளுடன் மடிவதைப்போல, அந்தத் துஷ்டர்கள் செய்யும் பாபங்களால் மடிகிறார்கள். திவ்யமான சந்தனங்களாலும் ஆபரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டு ஸுகமாக வஸிக்கும் ராக்ஷஸர்களெல்லாம் உன் கெட்ட நடத்தையால் உயிரிழந்து பூமியில் கிடப்பார்கள். யுத்தத்தில் மடியாதவர்கள், வேறு கதியற்றுக் காப்பாற்றுவாரின்றி, பெண்டு பிள்ளைகளை விட்டுப் பத்துத் திக்குகளிலும் ஓடி ஒளிவார்கள். லங்கை பாணவர்ஷங்களால் நாசமடைந்து எரிக்கப்பட்டு, வீடுகளும் அரண்மனைகளும் ஆலயங்களும் இடிந்து

சாம்பலாயிருப்பதைப் பார்ப்பாயென்பது நிச்சயம். பர ஸ்த்ரீகளை எடுத்து வருவதைக்காட்டிலும் கொடிய பாபமுண்டோ? எண்ணிறந்த உத்தமஸ்த்ரீகள் உன் அந்தப்புரத்திலில்லையா? அவர்களுடன் ஸுகமாகக் காலத்தைக்கழி. உன் குலத்தை அழிக்காதே. பெண்டு பிள்ளைகள் பந்துக்கள் நண்பர்கள் மேன்மை ஐச்வர்யம் ராஜ்யம், இவற்றைக் காட்டிலும் ப்ரியமான உயிர் முதலியவைகளுடன் நீண்டகாலம் வாழ நீ விரும்பினல் ராமனுடன் பகைக்காதே. நான் உனக்குப் பந்து; உனக்கு மித்ரன்; உன் ஹிதத்தையே தேடுகிறவன். உன்னை எவ்வளவோ சொல்லித் தடுக்கிறேன். அப்படியும் கேட்காமல் ஸீதையைப் பலவந்தமாக எடுத்து வந்தால் நீயும் உன் பந்துக்களும் பலமழிந்து ராமனுடைய சரங்களுக்கு இரையாவீர்கள்.

——:o:——

## ஸர்க்கம் 39.

(தொடர்ச்சி)

"ராவண! கேள். ராமன் சிறுவனயிருந்தபொழுது நடந்ததையும் அக்காலத்தில் அவனுடைய பலபாாக்ரமத்தையும் இது வரையில் வர்ணித்து, அவன் வயஸ் முதிர்ந்து அஸ்த்ர வித்யையைக் கரைகடந்து பூர்ணசக்தியுடன் விளங்கும்பொழுது நடந்ததைச் சொல்லுகிறேன். என்னைத் தடுக்காமல் கவனத்துடன் கேள். முன்னொரு தரம் அவனுடைய பாணத்தால் உயிர் போகும்படியிருந்து அவனுடைய கிருபையால் தப்பினேன்; ஆயினும் புத்தி வராமல் பயமடையாமல் அவன் ஸஞ்சரிக்கும் தண்டகாரண்யத்தில் நானும் இரண்டு ராக்ஷஸர்களும் மான்களைப்போல் நடமாடினேம். மலைபோன்ற தேஹத்தையும் கூர்மையான பல்லுகளையும் நெருப்புக் கொழுந்துபோன்ற நாக்கையும் தரித்துக் கொண்டு அக்னி ஹோத்ர சாலைகளிலும் புண்ய க்ஷேத்திரங்களிலும் தேவதைகள் வஸிக்கும் மரச்சோலைகளிலும் பயமில்லாமல் போனேம். தர்மாத்மாக்களான தபஸ்விகளையும் முனிகளையும் ரிஷிகளையும் பயமுறுத்திப் பலவந்தஞ்செய்து, கொன்று தின்றேன். காடுகளிலுள்ள ஸகல ப்ராணிகளையும் நடுங்கச் செய்து கொண்டிருந்தேன். ரிஷிகளின் ரத்தத்தால் வெறிகொண்டு, தர்ம

கார்யங்களை அழித்துக்கொண்டு, ராமலக்ஷ்மணர்கள் தபஸ்வி வேஷம் பூண்டு ஜானகியுடனிருக்கும் ஆச்ரமத்திற்குப் போனேன். ஜடை மரவுரியுடன் ஆஹார நியமத்துடன் ஸகல ப்ராணிகளுக்கும் ஹிதத்தையே நாடிக்கொண்டிருக்கும் ராமனைப் பார்த்து, “இவன் முனிவேடம் தரித்திருக்கிறான். ப்ராணிகளை அடக்க மாட்டா”னென்று அந்த மஹாபலசாலியை அலக்ஷ்யஞ் செய்து, முன்பு அவனால் நான் அனுபவித்த கஷ்டத்தை நினைத்து அதற்குப் பழிவாங்க இதே ஸமயமென்று மகிழ்ந்து கூரானகொம்புகளால் அவனைக் குத்திக்கொல்லத் திடீரென்று அவன்மேல் பாய்ந்தேன். ஒரு தடவை அவன் கையால் பட்ட கஷ்டத்தை மறந்து, “இவன் தபஸ்வி வேஷம் பூண்டிருந்தும், ஆயுதத்தைத் தரிக்கிறானே; நம்மைக் கொல்லமாட்டானென்று எண்ணக்கூடாது. இவனுடைய ஸமீபத்தில் போகக்கூடா”தென்ற புத்தியில்லாத என்னை யல்லவா மெச்சவேண்டும்? உடனே ரகுநாதன் கோதண்டத்தை வளைத்துக் கருடனைப்போலும் நெருப்பைப்போலும் கர்ஜிக்கும் மூன்று பாணங்களைவிட்டான். அவை வளைந்த கணுக்களுடன் சத்ருக்களின் ரக்தத்தைக் குடிக்க ஆவல்கொண்டு வஜ்ராயுதத்தைப் போல் ஒரே காலத்தில் கிளம்பிவந்தன. நான் ராமனுடைய பராக்ரமத்தை அறிந்தவன்; அவைகளால் உண்டாகும் பயத்தையும் துன்பத்தையும் அனுபவித்தவன்; ஆகையால் புத்தி சிதறி ஓடி ஒளிந்து தப்பினேன். யுத்தத்தில் பயந்து ஓடுகிறவனை அவன் கொல்வதில்லை. அதை அறியாத மற்ற இரண்டு ராக்ஷஸர்களும் கொல்லப்பட்டார்கள்.

இப்படி ராமபாணத்தின் கிருபையால் அதிர்ஷ்டவசத்தால் என் உயிர் போகவில்லை. அப்பொழுதுமுதல் மனஸையும் இந்த்ரியங்களையும் அடக்கி ஆஹார நியமத்துடன் ஸாதுக்களின் ஆசாரத்தைக் கைக்கொண்டு கெட்ட வழியை விட்டு இந்தக் காட்டில் தவஞ் செய்துகொண்டிருக்கிறேன். மரவுரி மான்தோல் ஜடைகளுடன், காலபாசத்தைக் கையில் பிடித்த யமனைப்போல் கோதண்டத்தைக் கையில் பிடித்து, ஒவ்வொரு மரத்தடியிலும் ராமன் நிற்பதாகப் பார்க்கிறேன். ஒரு ராமனல்ல; பயந்த என் கண்களுக்கு ஆயிரம் பதினாயிரம் ராமன்களாகத் தோன்றுகின்றன. சோகத்தாலாவது ஆசையாலாவது பயத்தாலாவது ஒரே விஷ

யத்தை நினைத்துக்கொண்டிருப்பவனுக்கு அது எதிரில் நிற்பது போலிருக்குமல்லவா? ராமன் ஒருவனே ஒவ்வொரு மரத்தடியிலும் போய் நின்றுகொண்டு உன்னை இப்படி மயக்குகிறனென்று எண்ணுகிருயா? மரங்களிருக்கட்டும். இந்த வன முழுவதும் எங்கே பார்த்தாலும் ராமரூபமாக எனக்குக் காணப்படுகிறது. இது ராமன் செய்த மாயையல்ல; அவனில்லாதவிடத்திலும் அவனுடைய ரூபமே காணப்படுகிறது. இது விழித்துக்கொண் டிருக்கும்பொழுது மாத்ரமல்ல; கனவிலும் ராமனையே கண்டு பயந்து பிதற்றுகிறேன். வரவர அதைப்பற்றிக் கேட்டாலும் அதே பயம் பிடித்துக்கொள்ளுகிறது. ராமனைக் கண்டு நடுங் கும் எனக்கு 'ர'வென்னும் எழுத்தில் ஆரம்பிக்கும் வார்த்தை களை (ரதம், ரத்னம்) ஒருவன் சொல்ல ஆரம்பித்தால் "இவன் ராமாவென்று சொல்லிவிடுவானே, அதைக் கேட்டால் எனக்கு என்ன கெடுதி விளையுமோ"வென்று பயமுண்டாகிறது. பின் வரும் எழுத்துகள் 'ம'வென்றிராவிட்டால் அந்தப் பயம் மெள்ள மெள்ளத் தெளிகிறது.

ராவண! நான் அவனுடைய திறமையையும் உன் திறமையை யும் நன்ருக அறிந்தவன்; என் வார்த்தையைக் கேள். அவனுடன் உன்னால் சண்டை செய்ய முடியாது. மஹாபலியையும் நமுசியை யும் அவன் விளையாட்டாகக் கொல்வான். கரதூஷணர்களுடைய வதத்திற்குப் பழிவாங்கவேண்டுமென்றிருந்தால் ராமனுடன் யுத்தஞ்செய். முடியாவிட்டால் பொறுத்துக்கொள். ஸீதையை மாத்ரம் திருட்டுத்தனமாய் எடுத்து வராதே. ஒரே வார்த்தை சொல்லுகிறேன். என்னை மறுபடியும் உயிருடன் பார்க்க உனக்கு எண்ணமிருந்தால் அவனுடைய பேச்சை எடுக்காதே. லோகத்தில் மனஸை அடக்கி நல்ல வழியில் நடக்கும் தர்ம வான்களான பல ஸாதுக்கள், துஷ்டர்கள் செய்த அபராதத் தால் தங்கள் பரிவாரங்களுடன் அழிகிருர்கள். நான் ஸகல துராசாரத்தையும் விட்டு நல்ல வழியில் நடந்து கொண்டிருப்ப வன்; உன்னுடன் சேர்ந்தால் நீ செய்யும் அக்ரமத்தின் பயனை அனுபவித்து உன்னுடன் நசிப்பேன். ஆகையால் உன்னிஷ்டப் படி செய். என்னை நிர்ப்பந்தம் பண்ணதே. உன்னுடன் வர மாட்டேன். வந்தால் சாவது நிச்சயம். ராமன் மஹாதேஜஸ்வி,

மஹாபலவான், மஹாபராக்ரமசாலி ; அவன் ராக்ஷஸ குலத்துக்குக் காலனாகாமல் பார்த்துக்கொள் ; உன் பிடிவாதத்தைப் பார்த்தால் அப்படியே நேருமென்பதில் ஸந்தேஹமில்லை.

இதிருக்கட்டும். ராமனுக்கு நீ ஏன் அபகாரம் செய்கிறாய் ? கரதூஷணாதி ராக்ஷஸர்களைக் கொன்றதற்கா? அவனுடன் யுத்தத்திற்குப் போய் அவனைக் கொல்லப் பார்த்தால் விட்டுவிடுவானா? சூர்ப்பநகையை அலங்கோலஞ் செய்ததற்கா ? அவள் ஸீதையைத் தின்க ஓடிவந்ததைத் தடுத்து அவளைக் கொல்லாமல் அங்கஹீனஞ் செய்தது பிசகே. சூர்ப்பநகையின் அதிருஷ்டமும் ராமனுடைய கிருபையுமல்லவா அதைத் தடுத்தது? இப்பொழுது ராமனிடத்தில் ஏதாவது குற்றமிருந்தால் எடுத்துச்சொல். நீ எனக்கு பந்து, நண்பன், அரசன்; ஆகையால் உனக்கு ஹிதத்தை அடிக்கடி சொல்கிறேன். நீ அதை அலக்ஷ்யம் பண்ணி ஒரே பிடிவாதமாக உன் கெட்ட எண்ணத்தை நிறைவேற்ற முயன்றால், ராமனுடைய வீணாகாத பாணங்களுக்கு நீயும் உன் பந்துக்களும் இரையாவீர்களென்பதில் ஸந்தேஹமில்லை''யென்று தடுத்தான்.

—:o:—

## ஸர்க்கம் 40.

## ராவணன் மாரீசனை நிர்ப்பந்தித்தது

இப்படி மாரீசன் அபாயமின்றி ஸுகத்தைக் கொடுக்கக் கூடியதாக உண்மைக்கும் யுக்திக்கும் ஒத்த வார்த்தைகளைச் சொன்னான். தன் மரணம் நெருங்கினவன் மருந்தை விட்டெறிவதுபோல் ராவணன் அவைகளை ஒப்புக்கொள்ளவில்லை. காலனால் தூண்டப்பட்டுக் கடுமையாகத் தகாத வார்த்தைகளைச் சொன்னான். "மாரீச! உன் ஆலோசனை கொஞ்சங்கூடப் பயன்படாது. அரசர்களுடைய மனப்போக்கை அறிந்து அதை ஒத்துச் சொன்னதல்ல. உவர் நிலத்தில் விதைத்த விதையைப் போல் வீணாகும். கேவலம் ஒரு மனிதன், மூர்க்கன், மஹாபாபி, அவனுடன் நான் யுத்தஞ் செய்வது என் கீர்த்திக்கும் மேன்மைக்கும் தகாது. ஸீதையை எடுத்து வருவதே அவனுக்குத் தகுந்த சிக்ஷை. அதை விட்டு அவனுடன் யுத்தஞ்செய்ய வேண்டுமென்று நீ எவ்

வளவு முயன்றாலும் பலிக்காது. கேவலம் ஒரு அல்பஸ்த்ரீயான கைகேயியின் வார்த்தையைக் கேட்டு, அடுத்த க்ஷணத்தில் பெற்றோரையும் நண்பர்களையும் ராஜ்யத்தையும் விட்டுக் காட்டிற்கு வந்த முட்டாளுடன் நான் யுத்தஞ் செய்வது எனக்கழகா? கர தூஷணர்களை யுத்தத்தில் கொன்ற அந்தத் துஷ்டனுக்கு ப்ராணனைக்காட்டிலும் ப்ரியமான ஸீதையை உனக்கெதிரிலேயே எடுத்து வருகிறேன். அவனுடைய உயிரை வாங்குவதைவிட இதே அவனுக்குக் கடுமையான தண்டனை. இப்படிச் செய்ய நிச்சயித்து விட்டேன். தேவாஸுரர்கள ஒன்று கூடித் தடுத்தாலும் நிற்க மாட்டேன்.

" உன்னைக் கேட்காமலிருக்கையில் நீ புத்திசொல்வது தகுமா? ஒரு கார்யத்தை நிச்சயிக்கும்பொழுது அதிலுள்ள குணதோஷங்களென்ன? அதை முடிக்க உபாயமென்ன? அதில் நேரும் அபாயமென்னவென்று கேட்டால் நீ பதில் சொல்லவேண்டும். நான் அதைப்பற்றித் தெரிந்துகொள்ள உன்னிடத்தில் வரவில்லை. ஆகையால் நீ சொன்னதெல்லாம் யுக்தமல்ல. அரசர்களிடத்தில் விஷயங்களைத் தெரிவிக்கும் முறையையும் ஒழுங்கையும் நீ அறியாதவன். அரசர்களிடத்தில் வேலைசெய்யும் ஸேவகர்கள் தங்கள் க்ஷேமத்தையும் செல்வத்தையும் விரும்பினால், யஜமானன் கேட்ட பிறகு வணக்கமாகக் கைகூப்பி விஷயத்தைத் தெரிவிக்கவேண்டும். மேலும் ஹிதமான உபதேசத்தையும் உபசாரத்துடன் மர்யாதையுடன் மிருதுவாகத் தெரிவிக்கவேண்டும். அது மதுரமாகவும் சுலபமாகவும் ப்ரபுக்களின் மனப்போக்கை ஒத்துமிருக்கவேண்டும். ஹிதமானாலும் அலக்ஷ்யமாக மர்யாதையில்லாமல் சொன்னால், ஜனங்களால் பூஜிக்கத் தகுந்த அரசர்கள் அதை ஒப்புக்கொள்வார்களா? அரசன் நெருப்பைப்போல் கொடுமையையும் இந்த்ரனைப்போல் பராக்ரமத்தையும் சந்த்ரனைப்போல் ப்ரியத்தையும் வருணனைப்போல் தண்டிக்கும் சக்தியையும் தர்மராஜனைப்போல் கருணையையுமுடையவன். ஆகையால் இந்து ஐந்து தேவதைகளின் ஸ்வரூபத்தைத் தரித்து எல்லையற்ற தேஜஸுடன் விளங்குகிறான். எக்காலத்திலும் எவ்விடத்திலும் அவனை மனதாலும் சொல்லாலும் பூஜித்து மர்யாதை செய்யவேண்டும்.

நீ ராஜ தர்மத்தை அறியாதவன், கேவலம் அக்ஞானத்தால் மூடப்பட்ட புத்தியுடையவன்; உன் அரசனும் பந்துவாயும் நண்பனுமிருக்கும் நான் உன்னைத்தேடிவந்து உன் உதவியை வேண்டும்பொழுது என்னைத் தடுத்து நிந்தித்துக் கடுமையான வார்த்தைகளால் அவமானஞ் செய்தாய். நான் உத்தேசித்த கார்யத்தின் குணதோஷங்களையாவது என் க்ஷேமத்தையாவது என் சக்தியையாவது உன்னிடத்தில் தெரிந்துகொள்ள வந்தேனோ? நான் சோல்வது இதே. இந்தக் கார்யத்தில் நீ எனக்கு உதவி செய்யவேண்டும். பராக்ரமத்தில் எல்லையற்ற நீ முடியாதென்று சொல்வது வீண் பேச்சு. நான் உன்னிடத்தில் விரும்பும் உதவியையும் தெளிவாகச் சொல்லுகிறேன். விசித்ரமான வெள்ளிப் புள்ளிகளுடைய தங்க நிறமுள்ள மானாக நீ ராமனுடைய ஆச்ரமத்திற்கு அருகில் போய் ஸீதைக்கெதிரே நடமாடவேண்டும். அவளை ஏமாற்றி ராம லக்ஷ்மணர்களைத் தூரத்தில் இழுத்துக் கொண்டுபோய் என் கார்யத்தை முடித்துப் பிறகு இஷ்டப்படி போகலாம். தங்க நிறமுள்ள மானைப் பார்த்து ஸீதை ஆச்சர்யப்பட்டு அதைப் பிடித்துத் தர ராமனை நிச்சயமாகக் கேட்பாள். பிறகு அவனை அழைத்துக்கொண்டு நீ வெகுதூரம் போய் அவனுடைய குரலுடன் "ஹா ஸீதே, ஹா லக்ஷ்மணா" வென்று கத்த வேண்டும். அதைக் கேட்டு ராமனைத் தேட லக்ஷ்மணனை அனுப்புவாள். ராமனிடத்திலுள்ள ப்ரியத்தால் அவனும் நிச்சயமாகத் தேடப்போவான். இப்படி அவ்விருவரும் ஆச்ரமத்திலில்லாத காலத்தில், இந்த்ரன் இந்த்ராணியை எடுத்துப் போவதுபோல் ஸீதையை எடுத்து வருவேன். என்னிஷ்டத்தை நிறைவேற்றிப் பிறகு நீ வேண்டிய இடத்திற்குப் போகலாம். இந்த உபகாரத்திற்காக உனக்கு என் ராஜ்யத்தில் பாதி தருகிறேன். ஆகையால் கண்ணைப் பறிக்கும் அழகுள்ள மான்ரூபத்தை எடு. என் எண்ணம் சீக்ரத்தில் முடியவேண்டும். உன்னுடன் நானும் இந்த ரதத்தில் தண்டகாரண்யத்திற்கு வருகிறேன். ராமனுடன் யுத்தஞ் செய்யாமல் அவனை ஏமாற்றி ஸீதையை எடுத்துவந்து என் மனோரதம் நிறைவேறின பிறகு நாம் லங்கைக்குப் போவோம். இப்படிச் செய்யாமல் இன்னும் என் வார்த்தையைத் தடுத்துப் பேசினால் உன்னை இப்பொழுதே கொல்வேன். நீ விரும்பினாலும் இல்லாவிட்டாலும் இதைச் செய்தே தீரவேண்டும். அரசர்

களுடைய எண்ணத்திற்கு விரோதமாக நடப்பவர்கள் ஒரு போதும் ஸுகப்படமாட்டார்கள். மானைப்போல் ராமனிடத்தில் போனால் ஒருவேளை உன் அதிருஷ்டத்தால் உயிர் தப்பலாம். என்னைப் பகைத்தால் இப்பொழுதே உனக்கு மரணம் நிச்சயம். இந்த விஷயத்திலுள்ள குணதோஷங்களையும் லாப நஷ்டங்களையும் தெளிவாக எடுத்துச் சொன்னேன். உனக்கு எது ஹிதமென்று தோன்றினாலும் அதைச் செய்''யென்றான்.

—: o :—

## ஸர்க்கம் 41.

## மாரீசன் மறுபடியும் தடுத்தது

இப்படி ராவணன் அரசனென்ற முறையால் அதிகாரத்துடன் கட்டளையிட்ட பிறகும், மாரீசன் கொஞ்சமேனும் பயப்படாமல் அவனுடைய ஹிதத்தையே நாடி, கடுமையாகப் பதில் சொன்னான். "ராவண! நீயும் உன் புத்ரர்களும் மந்த்ரிகளும் ராஜ்யமும் வேரில்லாமல் அழியவேண்டுமென்று எந்தப் பாபி உனக்கு இந்த யோசனையைச் சொன்னான்? உன் க்ஷேமத்தையும் செல்வத்தையும் அதிகாரத்தையும் கீர்த்தியையும் பார்த்துப் பொறுக்காமல், எந்தத் துஷ்டன் யமனுடைய வீட்டிற்குச் சீக்ரமாகப் போகும் வழியை உனக்குக் காட்டினான்? பலவானான ராமனால் ஜயிக்கப்பட்டு நீ இறக்கும்படி விரும்பும் வீர்யமற்ற ராக்ஷஸர்கள் உன் பரம சத்ருக்களே. நீ செய்த அந்யாயத்தாலேயே நீ அழியவேண்டுமென்று, அல்பனும் கெடுதியை உபதேசிப்பவனுமான எந்த த்ரோஹி உனக்கு இதைச் சொன்னான்? நல்ல வழியை விட்டு விலகின உன்னைத் தடுக்காத உன் மந்த்ரிகள் கொல்லப்படவேண்டியவர்கள்; இன்னும் கொல்லப்படவில்லையே, அரசன் தன்னிஷ்டப்படி நடந்து கெட்ட வழியில் இறங்கினால். அவனை ஸாதுக்களான மந்த்ரிகள் தடுக்க வேண்டும். அப்படித் தடுக்கவேண்டிய உன்னை எவரும் தடுக்கவில்லையே! அரசன் க்ஷேமமாயிருந்தால் ஸேவகர்கள் தர்மம் அர்த்தம் காமம் கீர்த்தியென்றவைகளை அடைவார்கள். அரசன் துஷ்டனாகவும் கெட்ட நடத்தையுள்ளவனாகவுமிருந்தால் இவையெல்லாம் வீணாகும். மற்ற ஜனங்களும் அழிவார்கள். ராஜ்யத்தில் தர்மமும்

ஜயமும் அரசனை பொறுத்திருக்கின்றன. ஆகையால் எப்பொழுதும் எந்தக் கஷ்டம் நேர்ந்தாலும் அரசர்கள் நல்ல வழியிலிருந்து விலகாதபடி மந்த்ரிகள் ஜாக்ரதையாகப் பார்த்துக்கொள்ளவேண்டும். ஜனங்களை க்ரூரமாகத் தண்டிப்பவனும் அவர்களுக்குக் கெடுதி செய்பவனும் இந்த்ரியஸ்வாதீனமற்றவனுமான அரசன் ராஜ்யத்தை ஆளச் சக்தியற்றவன். குடிகளை க்ரூரமாகத் தண்டிக்கும்படி அரசனைத் தூண்டிவிடும் மந்த்ரிகள் அவனுடன் அழிகிறார்கள். ரதத்தில் பூட்டின குதிரைகள் மிரண்டு கட்டுப் படாமல் மேடுபள்ளமுள்ளவிடத்தில் ஓடும்பொழுது, திறமையில்லாத தேரோட்டி அவைகளை அடக்கமுடியாமல் தன்னையும் ரதத்தையும் குதிரைகளையும் நாசமாக்குவானல்லவா? லோகத்தில் எவ்வளவோ ஸாதுக்கள் தர்ம மார்க்கத்தை விட்டு விலகாமலிருந்தும், துஷ்டர்களுடன் சேர்ந்து அவர்கள் செய்யும் பாப கர்மங்களால் தாங்களும் தங்களுடைய பரிவாரங்களும் மடிகிறார்கள். குடிகளுக்கு விரோதியும் அவர்களைக் கொடுமையாகத் தண்டிப் பவனும் அவர்களைக் காப்பாற்றுவது, ஆட்டுமந்தையை நரி பாதுகாத்ததுபோலல்லவா? கடின சித்தமும் கெட்ட புத்தியும் வாய்ந்த இந்த்ரிய ஸ்வாதீனமற்ற உன்னை அரசனாக அடைந்த ராக்ஷஸர்களெல்லாம் நாசமடைவதில் ஸந்தேஹமுண்டோ?

காக்கை ஏறினதும் பனம் பழம் விழுந்ததுபோல் எனக்கு இந்தக் கெடுதி நேர்ந்திருக்கிறது. என்னைப்பற்றி எனக்கு வருத்தமேயில்லை. நீயும் ஸைன்யமும் பந்துக்களும் பெண்டு பிள்ளைகளும் நிர்மூலமாவீர்களே என்று வருந்துகிறேன். என்னைக் கண்டவுடனே ராமன் என்னுயிரை வாங்கிவிடுவான். பிறகு உனக்கு மரணம் நேர வெகுகாலம் செல்லுமென்று எண்ணாதே. ராமன் எனக்குச் சத்ருவாக நேர்ந்து அவன் கையால் நான் மரணமடைந்தால் எனக்கு எல்லா க்ஷேமமுண்டாகும். விச்வாமித்ர யாகத்தைக் காக்க வந்தது முதல் கரதூஷண வதம் வரையில் நடந்த அத்புதமான கார்யங்களை நினைத்து நினைத்து, ராமன் ஸாதாரண மனுஷ்யனல்ல, கேவலம் பரம புருஷனே யென்று அறிந்தேன். இது நிச்சயம். ஆகையால் அவனுடைய கையால் இறந்தால் பரம புருஷார்த்தம் கிடைக்கும். அப்படியில்லாவிட்டாலும் அரசனும் நண்பனும் பந்துவுமான உன்னால் இறப்பதை

விட, சத்ருவின் பாணங்களால் அடிப்பட்டு இறந்தால் ஸ்வர்க்கத்தை அடைவேன். ராவண! இன்னும் ஒருதரம் சொல்லுகிறேன். ராமனைக் கண்ட அந்த க்ஷணத்திலேயே இறந்தேனென்று நிச்சயமாக நம்பு. ஸீதையை எடுத்து வந்தால், நான், நீ, லங்கை, உன் பந்துக்கள், குடிகள் எல்லாம் பிறகு ஒரு நிமிஷமாவது உயிரோடிருப்போமென்று நினைக்காதே. உன் க்ஷேமத்தை விரும்பி உன்னை இப்படி அடிக்கடி தடுக்கிறேன். என் வார்த்தை உனக்கு ஹிதமாகத் தோன்றவில்லை. ஆயுஸ் குறைந்து சாவு நெருங்கின நிர்ப்பாக்யர்கள், ஸாதுக்களுடைய உபதேசத்தை ஒப்புக்கொள்ள மாட்டார்க"ளென்றான்.

——: o :——

## ஸர்க்கம் 42.

## மாரீசன் மானானது

'போகாவிட்டால் ராவணன் இப்பொழுதே கொல்வா'னென்று மாரீசன் பயந்து, "கோதண்டபாணியான ராமனுடைய கண்ணில் நான் மறுபடியும் பட்டால் அடுத்த க்ஷணம் உயிரோடிருக்கமாட்டேன்; ராமனை எதிர்த்து எவனாவது பிழைத்ததுண்டா? காலதண்டத்தைக் கையிலேந்தி, நம்மிருவரையும் அழிக்கும் யமனே ராமரூபமாக வந்திருக்கிறானல்லவா? நீயோ வெகு பொல்லாதவன்; பிடிவாதக்காரன்; கூடியவரையில் உன்னைத் தடுத்துப்பார்த்தேன்; இனி நான் என்ன செய்வேன்? புறப்படு, போவோம். உமக்கு மங்களமுண்டாகட்டு"மென்றான். அதைக் கேட்ட ராவணன் அடங்கா மகிழ்ச்சி கொண்டு, மாரீசனை வெகு ப்ரியத்துடன் ஆலிங்கனஞ் செய்து, "மாரீச! இதுவரையிலும் ஏதோ பிதற்றிக்கொண்டிருந்தாய். இப்பொழுது சொன்ன பேச்சல்லவா பேச்சு? என்னிஷ்டத்தை ஒத்தும் உன் வீர்யத்திற்கு தகுந்தும் பேசினாய். மாரீசன் இறந்து வேறு யாரோ ராக்ஷஸன் என்னுடன் இதுவரையில் பேசிக்கொண்டிருந்தான். பழைய மாரீசனை இப்பொழுதுதான் கண்டேன். பல பராக்ரம தைர்யங்களால் லோகத்தில் கீர்த்திபெற்ற மாரீசனுக்குத் தகுந்த நடத்தை இதல்லவா? இதே உன் உண்மையான தன்மை. இதை விட்டுக் கையாலாகாத ராக்ஷஸப் பதரைப்போல் பேசினாய். இந்தத் திவ்ய

ரதத்தில் சீக்ரமாக ஏறு. பிசாசமுகங்களையுடைய இந்தக் கோவேறு கழுதைகள் நம்மை ஒரு க்ஷணத்தில் அந்த ஆச்ரமத்திற்குக் கொண்டுபோய்விடும். ஸீதையை ஏமாற்றின பிறகு உன்னிஷ்டப்படி போ. ராமலக்ஷ்மணர்களில்லாமல் ஒண்டியாயிருக்கும் ஜானகியை அபஹரித்து லங்கையில் கொண்டுபோய் வைக்கிறே"னென்ருன்.

பிறகு அவர்கள் விமானம் போன்ற அந்த ரதத்திலேறி, வழியில் காடு மலை நதி நாடு நகரம் பட்டணம் ராஜ்யம் முதலியவைகளைக் பார்த்துக்கொண்டு ராமனுடைய ஆச்ரமத்திற்கு ஸமீபத்தில் அதிவேகமாக வந்தார்கள். ரதத்திலிருந்து இறங்கி ராவணன் மாரீசனுடைய கையைப் பிடித்துக்கொண்டு, "மாரீச! இதோ வாழைத் தோட்டத்தின் நடுவிலிருக்கும் ஆச்ரமமே ராமனுடையது. (ராவணனுக்கு இது எப்படித் தெரியும்?) வந்த கார்யத்தைச் சீக்ரமாக முடி"யென்ருன்.

பிறகு மாரீசன் ஆச்சர்யகரமான மான் ரூபத்தை எடுத்து ராமனுடைய ஆச்ரமத்திற்கு ஸமீபத்தில் திரிந்துகொண்டிருந்தான். கொம்புகளின் முனைகள் இந்த்ர நீலக்கல்லுகளைப்போல் ப்ரகாசித்தன. முகம் ஓரிடத்தில் வெளுத்தும் ஓரிடத்தில் கறுத்தும் விசித்ரமாக விளங்கிற்று. மலர்ந்த செந்தாமரைப்போன்ற வாயும் நீலோத்பலத்தையும் இந்த்ர நீலத்தையும்போன்ற காதுகளும் இந்த்ரநீலம்போன்ற கழுத்தும், குருக்கத்திப் பூவையும் சந்த்ரனையும் வஜ்ராயுதத்தையும்போன்ற வயிற்றையும், இலுப்பைப் பூவைப் போன்ற பக்கங்களும், தாமரைத் தாதுக்களையும் வைடூர்யத்தையும் போன்ற குளம்புகளும், மெல்லிய முழங்கால்களும், நன்ருக அமைக்கப்பட்ட அவயங்களும் பொருந்தி, இந்த்ர வில்லைப்போன்ற நாநா வர்ணங்களுள்ள வாலை உயரத் தூக்கிக்கொண்டு, இதுவரையில் ஒருவரும் பார்த்திராத மான் ரூபத்தை மாரீசன் மாயா பலத்தால் ஒரு நிமிஷத்தில் எடுத்தான். ஸீதையை ஏமாற்ற மனஸைக் கவரும் அழகுவாய்ந்த மான்ரூபத்தைத் தரித்து அந்த ஆச்ரமத்தையும் வனங்களையும் தன் தேஹகாந்தியால் விளங்கச் செய்துகொண்டு, சற்று நேரம் இளம்புற்களை மேய்ந்து சற்று நேரம் மரங்களில் துளிர்களை முறித்துத் தின்று, சற்று நேரம் வாழைத் தோட்டத்திற்குப் போய் அங்கிருந்து கொங்கு மரங்களின் அடி

யில் தங்கித் தங்கி, ஸீதை தன்னைப் பார்க்கும்படி செய்தான். மலைகளில் தாதுக்கள் மின்னுவதுபோல் தேஹத்தில் பல நிறங்களும் விளங்க, நக்ஷத்திரங்களைம்போன்ற விசித்ரமான புள்ளிகளால் நிறைந்து, தாமரையைப்போன்ற விசித்ரமான முதுகுடன் வந்த அந்தத் தங்க மான் ராமனிருக்கும் ஆச்ரமத்திற்கு ஸமீபத்தில் நடமாடிற்று. கொஞ்ச தூரத்தில் போவதும், மறுபடி திரும்புவதும், ஒரு முஹூர்த்தம் வரையில் கண்ணில் படாமலிருப்பதும், பிறகு திடீரென்று அதிவேகமாக ஓடி வருவதும், கொஞ்ச நேரம் துள்ளிக் குதித்து விளையாடுவதும், கொஞ்ச நேரம் களைத்துப் படுத்திருப்பதுபோல் காட்டுவதுமாகத் தன் மாயா வித்யைகள் எல்லாவற்றையும் வெளிப்படுத்தினன்; மான் கூட்டங்களோடு கலந்து ஆச்ரம த்வாரத்திற்கு ஸமீபத்தில் போவான். பிறகு அவைகளோடு மறுபடியும் அந்த வழியாகவே வருவான்.

இப்படி ஸீதை தன்னைப் பார்க்கவேண்டுமென்ற எண்ணத்துடன் அந்த ராக்ஷஸ மிருகம் விசித்ரமாகச் சுழன்றுகொண்டு அங்கும் மிங்கும் உலாவித்திரியும்பொழுது, மற்ற மான்கள் அவனுக்கு ஸமீபத்தில் வந்து, முதலில் தங்களைப்போன்ற ஒரு மானென்றே எண்ணியிருந்தன. பிறகு அவனை முகர்ந்து பார்த்து ராக்ஷஸனென்று அறிந்து பயந்து மறைந்தோடின.

அவை தன்னருகில் இருக்கும்பொழுது அவைகளைக் கொன்று தின்கவேண்டுமென்று மாரீசனுக்கு ஆசை மேலிட்டு வாயில் ஜலம் ஊறிற்று. ஆனல் தானெடுத்த வேஷத்திற்கும் உத்தேசித்து வந்த கார்யத்திற்கும் கெடுதி நேருமென்று அவைகளைத் தொட்டுப்பார்த்துக் கொல்லாமல் போக விட்டான்.

அந்த ஸமயத்தில் ஸீதை கோங்கு அசோகம் தேன் மா முதலிய மரங்கள் அடர்ந்த சோலைக்குப் போய் மிகுந்த ஸந்தோஷத்துடன் அங்குமிங்கும் பார்த்துக்கொண்டு புஷ்பங்களைப்பறித்தாள். அதுவரையில் காட்டில் வஸித்தறியாதவள்; அந்தக்கஷ்டத்தை அனுபவிக்கத் தகாதவள்; ஆகையால் ரத்னங்களால் அலங்கரிக்கப்பட்ட தங்க மானைப்போல் விளங்கும் அந்த மாயா மிருகத்தைப் பார்த்து ஆச்சரியமடைந்து மஹா ப்ரியமாகப் பார்த்துக் கொண்டேயிருந்தாள். ஸீதை தன்னைப் பார்ப்பதை அறிந்து மாரீசன் முன்னைவிட அதிக விசித்ரமாக அங்குமிங்கும் அலைந்து

கொண்டு, தன் காந்தியால் அந்த வனம் முழுவதையும் ப்ரகாசிக்கச் செய்தான். தான் அதுவரையிலும் பார்த்திராத விசித்ரமான நிறமுள்ள அந்த மானைக் கண்டு ஜானகி ஆச்சர்யம் மேலிட்டுக் கண் கொட்டாமல் அதை பார்த்துக்கொண்டே நின்ருள்.

—:o:—

## ஸர்க்கம் 43.

### மானைப் பிடித்துத்தர ஸீதை ப்ரார்த்தித்தது

ஒரு புறம் தங்கவர்ணமும் ஒரு புறம் வெள்ளி நிறமும் விளங்கும் அந்த அபூர்வமான மிருகத்தைப் பார்த்து ஸீதை மிகவும் ஸந்தோஷித்து ராம லக்ஷ்மணர்களைக் கூப்பிட்டாள். அவர்கள் வெளியில் வந்து சுற்றிப்பார்த்து, அங்கே ஓரிடத்தில் மேய்ந்து கொண்டு விளையாடும் மாயா மிருகத்தைக் கண்டார்கள். எப்போதும் ராக்ஷஸர்களிடத்தில் ஸந்தேகமுள்ளவரும் எப்பொழுதும் ஜாக்ரதையாக இருப்பவருமான லக்ஷ்மணன் அதைக் கவனித்துப் பார்த்து, "அண்ணா! நாம் முன்பு இரக்கத்தால் கொல்லாமல் விட்ட அந்த மாரீசனே இப்படி மான்ரூபத்தை எடுத்து வந்திருக்கிருன். இந்த பாபி, நினைத்த ரூபங்களை எடுத்துக்கொண்டு இந்தக் காட்டில் வேட்டையாட வரும் அரசர்களுக்கெதிரில் மானைப்போல் தோன்றி அவர்களை மயக்கி, அடர்ந்த காடுகளில் இழுத்துக்கொண்டுபோய்க் கொடுமையாகக் கொல்லுகிருன். இவன் மஹா மாயாவி; கந்தர்வ நகரத்தைப்போன்ற இந்த விசித்ரமான மான்ரூபத்தை எடுப்பது இவனுக்குப் பெரிய கார்யமல்ல. ரத்னங்கள் பதித்த தங்க மானைப்போல் விளங்கும் இந்த ஜந்து, லோகத்திலுள்ள மிருகங்களில் ஒன்றல்ல. இது மாயையே. ஸந்தேஹமில்லை"யென்று சொன்னார். ஸீதையோ அந்த மாயா மிருகத்தின் தோலைப் பார்த்து மயங்கி அவரைத் தடுத்து "நாத! இந்த மான் பார்க்க வெகு அழகாகவிருக்கிறது. என் மனஸைக் கவர்ந்துவிட்டது. எனக்கு விளையாட இதைப் பிடித்துத் தரவேண்டும். இந்த ஆச்ரமத்திற்குப் பக்கத்தில் கரடிகளும் குரங்குகளும் பலவித மான்களும் கின்னரங்களும் திரிகின்றன. அவை ஆச்சர்யகரமாகவும், பார்க்க அழகாகவுமிருக்கின்றனவென்று ஒப்புக்கொண்டேன். ஆனால் இதைப்போல் நான்

இதுவரையிலும் எந்த மிருகத்தையும் பார்த்ததில்லே. பல வர்ணங்களால் அலங்கரிக்கப்பட்டிருக்கும் விசித்ரமான அங்கங்களோடும், நிறத்தாலும், மெதுவான நடையாலும், தேஹத்தின் காந்தியாலும் இந்த வனத்தில் பூர்ணசந்த்ரன் உதித்ததுபோல் மிகுந்த காந்தியுடன் ப்ரகாசிக்கிறது. என்ன ரூபம்! என்ன குரல்! என்ன காந்தி! விசித்ரமான அங்கங்களேயுடைய இந்த மான் என் மனதைக் கொள்ளேகொண்டது. இதை உயிருடன் பிடித்து வந்தால் பார்ப்பவர்களுக்கு அடங்காத ஆச்சர்யத்தையும் ஆனந்தத்தையும் கொடுக்கும். வனவாஸம் தீர்ந்து நாம் அயோத்யைக்குப் போகும்பொழுது இதைக் கொண்டுபோனல் பரதனும் ராஜபத்னிகளும் அந்தப்புரஜனங்களும் இதைப் பார்த்து ஆச்சர்யமடைவார்கள். ஒருவேளே இது உயிருடன் கிடைக்காவிட்டாலும் இதைக் கொன்று இதன் விசித்ரமான தோலே தர்ப்பாஸனத்தின்மேல் விரித்து உட்காரலாம். நான் என் இஷ்டத்தை அனுஸரித்து இந்தக் கார்யத்தில் தங்களே ஏவினேனென்று கோபிக்கக்கூடாது. இது ஸ்த்ரீகளுக்குத் தகாத வார்த்தையே. கேட்டால் எல்லோரும் வெறுப்பார்கள். ஆனாலும் இந்த மிருகத்தின் விசித்ரமான அழகைப் பார்த்து என் மனஸ் மயங்கியிருக்கிறது. இதைப் பிடித்துத்தாவென்று நான் தங்களேச் சொல்லத் தகாது நான் சொன்னதை மன்னிக்கவேண்டும். இதுவரையிலும் பார்த்திராத விசித்ரமான மிருகமென்று தங்களுக்குத் தோன்றினல் இதைப் பிடித்துத் தாருங்க"ளென்று ப்ரார்த்தித்தாள்.

தங்க நிறமுள்ள மயிரையும் நீலரத்னத்தைப்போன்ற கொம்பையுமுடைய அந்த மாயா மிருகம், உதிக்கும் ஸூர்யனேயும் ஆகாசத்தையும்போல் விளங்குவதைப் பார்த்து ராமனும் ஆச்சர்யமடைந்தார். அந்த மானின் அபூர்வ ரூபத்தாலும் ஸீதையின் வேண்டுகோளாலும் அதைப் பிடிக்க விரும்பி, "லக்ஷ்மண! குழந்தாய், பார். ஸீதை இந்த மிருகத்தினிடத்தில் அதிக ஆசை வைத்திருக்கிருள். எந்தக் காடுகளிலும் நந்தனம் சைத்ரரதமென்ற தேவத் தோட்டங்களிலும் இதைப்போல் விசித்ரமான மான் இருக்குமென்று நான் எண்ணவில்லே. நேராகவும் எதிராகவும் வளரும் இதன் மயிர் முழுவதும் தங்கநிறமுள்ள புள்ளிகளால் அலங்கரிக்கப்பட்டிருக்கின்றன.

இது கொட்டாவி விடும்பொழுது கொழுந்து விட்டெரியும் அக்னியையும் மேகத்தில் பாயும் மின்னலையும்போல் இதன் வாயி லிருந்து நாக்கு வெளியில் தொங்கும் அழகைப் பார். இதன் முகம் இந்த்ர நீலக்கல்லால் செய்யப்பட்ட கிண்ணியைப்போல் விளங்கு கிறது. சங்கையும் ஆணிமுத்துகளையும்போல் இதன் வயிறு வெளுத்திருக்கிறது. இதைப்பார்த்து மயங்காதவர்கள் யார்? அரசர்கள் விளையாட்டுக்காகவும் மாம்ஸத்திற்காகவும் மிருகங்களை வேட்டையாடுகிறார்கள். அப்படியிருக்கத், தங்கத்தில் நவரத்னங் கள் இழைத்ததுபோல் விளங்கும் இந்த மானைப் பிடிப்பதற்கு கேட்கவும் வேண்டுமா? தங்கம் வெள்ளி நவரத்னங்கள் முதலிய வற்றைக் கொடுக்கும் தாதுக்கள் காடுகளில் அதிகமாகக் கிடைக் கும். யானையின் தலையில் உத்தமமான முத்துகளுண்டு. அரசர்கள் அவைகளை வெகு ப்ரயாஸத்துடன் தேடவேண்டும். சுக்ரன் முத லிய தேவர்கள் மனஸால் நினைத்த பதார்த்தங்களை எப்படி அடை கிறார்களோ அப்படியே அரசர்களும் நாட்டுப் பொருள்களைக் காட்டிலும் இயற்கையாயுள்ள காட்டுப் பொருள்களையே மேலா னவை யென்றறிந்து தேடிவருவித்துப் பொக்கிஷத்தில் வைக்க வேண்டும். ஆனால் இதை நன்றாக விசாரித்துச் செய்யலா மென்பாய். ஒருவன் ஒரு பொருளை அடைய விரும்பி அதற்குச் செய்யவேண்டிய உபாயங்களைப்பற்றிக் கொஞ்சமேனும் விசாரிக் காமல் முயன்றால் மாத்ரம் அது அர்த்தமென்று சொல்லப்படு மென்பது அர்த்த சாஸ்த்ர நிபுணர்களின் கருத்து. இந்த அபூர்வ மான மிருகத்தின் தோலின்மேல் என்னுடன் உட்கார ஸீதை வெகு ஆசைகொண்டிருக்கிறாள். கதளி ப்ரியகி பரவேணி ஆவிகி முதலிய தோல்களும் இதைப்போல் அவ்வளவு மிருது வாயிராதென்றெண்ணுகிறேன். இதோ நமக்கெதிரிலிருக்கும் இந்தப் பொன்மானும் ஆகாசத்தில் நக்ஷத்ரங்களுக்குள் ஒன்றான மிருகசீர்ஷமென்ற மானும் லோகத்தில் சிறந்தவை.

"இதுவரையில் ஸீதை சொன்ன காரணங்களை ஒட்டி இதை அவச்யம் பிடிக்கவேண்டுமென்று காட்டினேன். நீ சொன்னபடி இது ராக்ஷஸனுடைய மாயையாயிருந்தாலும் இதைக் கொல்ல வேண்டியது அவச்யமே. இந்தக் கொடிய மாரீசன் கெட்ட தன்மையுள்ளவன்; நல்லோர்களைத் துன்பப்

படுத்துகிறவன். இவனால் இதுவரையில் பல மஹரிஷிகள் கொல்லப்பட்டிருக்கிறார்கள். இவன் மான்வேஷமெடுத்து, இங்கே வேட்டையாட வரும் அரசர்களுடைய கண்ணில் தோன்றி அவர்களை வெகுதூரம் அலைக்கழித்துக்கொண்டிருக்கிறான். ஆகையால் இவனை அவசியம் கொல்லவேண்டும். முன்பு இங்கே வாதாபியென்ற ஒரு அஸுரன் தபஸ்விகளை உபத்ரவித்துக்கொண்டிருந்தான். ப்ராஹ்மணர்களை ச்ராத்தத்திற்குத் தருவித்துத், தான் ஆட்டின் ரூபத்தை எடுத்து, அவர்களால் தின்கப்படுவான். பிறகு அவர்கள் வயிற்றைக் கிழித்துக்கொண்டு வெளியில் வருவான். ஒருநாள் அகஸ்த்யர் அங்கே வந்தார். அவரையும் அப்படிச்செய்யப் பார்த்தான். வயிற்றிலிருந்து தன் நிஜ ரூபத்துடன் வாதாபி வெளியில் வர முயன்றான். அகஸ்த்யர் அதைக் கண்டு புன்சிரிப்புடன் " துஷ்ட! சற்றும் யோசிக்காமல் இதுவரையில் பல ஸாதுக்களை இப்படி ஏமாற்றிக்கொண்டிருக்கிறாயல்லவா? கோவேறு கழுதை தன் வயிற்றில் பிறக்கும் சிசுவால் மடிவதுபோல் அவர்களுடைய வயிற்றிலிருந்தே அவர்களைக் கொன்று வந்தாயல்லவா? ஆகையால் என் வயிற்றிலுள்ள நெருப்பால் கொளுத்தப்பட்டு அங்கேயே ஜீர்ணமாகக் கடவா"யென்றார். இந்த்ரியங்களை ஜயித்துத் தர்மத்தையே நாடும் என்னை எதிர்த்து இந்த மாரீசனும் வாதாபியின் கதியை அடைவான்.

" ஆகையால் ஆயுதபாணியாக வேறு விஷயங்களில் மனதைச் செலுத்தாமல் ஸீதையைக் காப்பாற்றிக்கொண்டு இங்கேயே இரு. நாம் செய்யவேண்டிய ஸகல கார்யங்களும் இவளையே பொறுத்திருக்கின்றனவல்லவா! இந்த மானைப் பிடித்துக்கொண்டாவது முடியாவிட்டால் தோலை எடுத்துக்கொண்டாவது வருகிறேன். ஸீதைக்கு இதனிடத்தில் மிகுந்த ஆசையுண்டாயிருக்கிறதென்று தெரியவில்லையா? இதன் தோல் நமக்கு முக்யமாகையால் இது பிழைக்காதென்று எண்ணுகிறேன். ஒரே பாணத்தால் இதைக் கொன்றுவிட்டு இதன் தோலை எடுத்துக்கொண்டு அதிசீக்ரத்தில் வருகிறேன். அதுவரையில் இந்த ஆச்ரமத்திலிருந்துகொண்டு வெகு ஜாக்ரதையாக ஸீதையைக் காப்பாற்றவேண்டும். நமது நண்பனான ஜடாயுஸ் வெகு ஸமர்த்தர்; மஹாபலவான்; புத்திமான்; உனக்கு உதவி செய்வார். நான்கு புறங்களையும்

ஒவ்வொரு க்ஷணத்திலும் நன்றாகக் கவனித்துப் பார்த்துக்கொண்டு எங்கிருந்து அபாயம் நேருமோவென்று ஸந்தேஹத்துடன் கொஞ்ச மேனும் ஜாக்ரதைக் குறைவின்றி ஜானகியை ரக்ஷித்துக்கொண் டிரு" வென்று கட்டளையிட்டார்.

—:o:—

## ஸர்க்கம் 44.

## மாரீச வதம்

பிறகு ராமன் மயில்தோகைகளால் அலங்கரிக்கப்பட்ட அம்ப றைகளை முதுகில் கட்டித் தங்கப்பிடியுள்ள கத்தியைக் கச்சையில் மாட்டி, மூன்று வளையுள்ள கோதண்டத்தைக் கையிலேந்தி மானைத் தூரத்திக்கொண்டு போனார். அவனும் ராமனை ஏமாற்ற நினைத்து, அவர் யமனைப்போல் தன்னை நோக்கி வருவதைக் கண்டு பயந்து நடுங்கினான்; சற்று மறைவான்; சற்றுத் தோன்றுவான்; மின் னல் கொடிபோல் ராகவனுக்கெதிரில் ஒருவேளை விளங்குவான்; ஒருவேளை அம்பு பாயுந் தூரத்திற்கப்புறம் பயந்து ஓடுவான்; ஒருவேளை கையில் பிடிபடுகிறவனைப்போல் காட்டுவான்; ஒருவேளை ஆகாசத்தில் துள்ளிக்குதிப்பான்; ஆயுதபாணிகளைக் கண்டு ஸந்தேஹித்து ஓடும் மற்ற மிருகங்களைப்போன்றவனல்ல; ஒருவேளை தோன்றியும் தோன்றாமலுமிருப்பான். சரத் காலத் தில் சிறு மேகங்களுக்கு நடுவில் புகுந்து புறப்படும் சந்திர மண்டலத்தைப்போல், ரகுநாதனை ஆசை காட்டிமயக்கி வெகு தூரம் அலையச் செய்தான். பக்கத்தில் வந்து நிற்பான்; பாணத்தை எடுத்து விடும்பொழுது வெகு தூரத்திற்கப் பால் தோன்றுவான். ரகுவீரனும் இப்படித் தன்னை வஞ்சித்து அலைக்கழிக்கும் மாரீசனிடத்தில் கோபங்கொண்டு மெய் மறந்து, இளம்புல் தரையில் மரத்து நிழலில் சற்றுநேரம் தங்கி, அந்தப் பொன்மான் சற்றுதூரத்தில் ஸஞ்சரிப்பதைப்பார்த்து, அதைப் பிடிக்க மறுபடியும் ஆசை கொண்டார். உடனே அந்த ராக்ஷஸன் பயந்து ஓடி மறைந்தான். பிறகு ஒரு மரச்சோலையிலிருந்து அவன் வெளிக்கிளம்பக் கண்டு ராமன், 'இனிமேல் இவனை வதஞ் செய்வது நல்ல' தென்றெண்ணி, ஸூர்யகிரணத்தைப்போல் ஜ்வ லித்து, கால ஸர்ப்பத்தைப்போல் சீறிக்கொண்டிருக்கும் ஒரு

சரத்தை எடுத்துக் கோதண்டத்தில் தொடுத்து ப்ரஹ்மாஸ்த்ரத்தை அதில் மந்த்ரித்து மாரீசன் மேல் எய்தார்.

இந்த்ரனுடைய வஜ்ராயுதத்தைப்போல் அது மாரீசனுடைய தேஹத்தில் விழுந்தது; அவனுடைய ஹிருதயத்தைப் பிளந்தது. உடனே அவன் கோரமாகக் கர்ஜித்துக்கொண்டு ஒரு பனைமரத் தினுயரம் துள்ளிக்குதித்து உயிரற்றுத் தரையில் விழுந்தான். மரண ஸமயத்தில் "எந்த உபாயம் செய்தால் ஸீதை லக்ஷ்மணனை இங்கே அனுப்புவாள், எந்த உபாயம்செய்தால் ராவணன் அவளை எடுத்துப் போவா"னென்று ஆலோசித்து, ராகவனுடைய குரலை அமைத்துக்கொண்டு 'ஹா ஸீதே! ஹா லக்ஷ்மண"வென்று கதறினன். மர்ம ஸ்தானத்தில் பாணத்தால் அடிக்கப்பட்டு மான் ரூபத்தை விட்டுத் தன் ராக்ஷஸ ரூபத்தை எடுத்தான். விசித்ரமான கேயூரம் முதலிய தங்க ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டு, வஜ்ரம்போன்ற பல்லுகளுடன், மலைக்கு ஸரியான தேஹத்தை எடுத்துக்கொண்டு ரத்தம் பெருகப் பூமியில் மாரீசன் விழுந்து புரளக்கண்டு ராமன் லக்ஷ்மணனுடைய சொல்லை ஞாபகப்படுத்திக்கொண்டு ஸீதையை நினைத்து "ஐயோ! இது மாரீசனுடைய மாயையே; லக்ஷ்மணன் சொன்னது உண்மையே. இவன் சாகும் பொழுது என் குரலுடன் 'ஹா ஸீதே, ஹா லக்ஷ்மண!' வென்று பெருங்குரலிட்டதை ஸீதையும் லக்ஷ்மணனும் கேட்டு என்ன செய்வார்களோ"வென்று கவலை கொண்டார். பயத்தாலும் துக்கத்தாலும் மயிர்க்கூச்சலெடுத்துப், பிறகு வேறொரு மானை அடித்து அதன் மாம்ஸத்தை எடுத்துக்கொண்டு ஆச்ரமத்தை நோக்கி வேகமாக வந்தார்.

—:o:—

## ஸர்க்கம் 45.

## ஸீதை லக்ஷ்மணனைக் கோபித்தது

இப்படித் தன் கணவன் தீனஸ்வரத்துடன் கதறினதுபோல் உண்டான சப்தத்தைக் கேட்டு ஸீதை "லக்ஷ்மண! ராமன் ராக்ஷஸர்களுடைய வசத்தில் அகப்பட்டு, ஸிம்ஹங்களால் பீடிக்கப்பட்ட விருஷபத்தைப்போல், காப்பாற்றுவாரில்லாமல் தபிக்கிறார். இப்படி அவர் பரிதாபமாகக் கதறுவதைக் கேட்டு என்

மனஸும் ப்ராணனும் தரிக்கவில்லை; மயக்கம் வருகிறது. காட்டில் ஒண்டியாகத் தபிக்கும் உன் அண்ணனிடத்திற்கு அதி சீக்ரத்தில் "போ. உன்னுயிரைக் கொடுத்தாவது அவரைக் காப்பாற்" றென்று அழுதாள்.

லக்ஷ்மணனோ ராமன் தனக்கு இட்ட கட்டளையை நினைத்து அங்கிருந்து அசையவில்லை. அதைக்கண்டு ஸீதை கடுங்கோபங் கொண்டு, "ராமனுக்குச் சக்களத்தி மகனை த்ரோஹி! மித்ரனைப்போல் அவரைப் பின்தொடர்ந்து வந்த பரம சத்ரு! உன்னுடன் பிறந்தவன் இப்படிப்பட்ட ஆபத்திலிருந்தும் உனக்கு அவரைக் காப்பாற்ற மனஸில்லையல்லவா? என்னைக் கைப்பற்ற விரும்பி அவருடைய மரணத்தைக் கோரியிருக்கிறாயோ? ஆகையால் இங்கிருந்து போகமாட்டேனென்கிறாய். ராமனுக்கு நேரும் அபாயம் உனக்கு மிகுந்த ஸந்தோஷத்தைக் கொடுக்கிறதல்லவா? உன் அண்ணனிடத்தில் உனக்கு எள்ளளவு ஸ்நேஹமில்லையென்று இப்பொழுதல்லவா தெரிகிறது? இந்தக் கெட்ட எண்ணங் கொண்டு இங்கே நிற்கிறாயோ? என்னைக் காப்பாற்ற இங்கிருக்கிறேனென்று சொல்வது வஞ்சக வார்த்தை. நீயும் நானும் யாரை அண்டி வந்தோமோ அவர் மரணவஸ்தையிலிருக்கும்பொழுது நான் இங்கிருந்து என்ன செய்வேன்? ஐயோ! மோசம் போனேனே"யென்று அலறினாள்.

இப்படி மிரண்ட மானைப்போல் கண்ணுங் கண்ணீருமாய் ஜானகி கதறுவதைப் பார்த்து, லக்ஷ்மணன் "தாயே! தேவாஸுர கந்தர்வ பன்னக மனுஷ்ய ராக்ஷஸர்கள் யாவரும் ஒன்றுசேர்ந்து வந்தாலும் ராமனை ஜயிக்கமுடியாதென்பது தங்களுக்குத் தெரியாதா? தேவேந்த்ரனைப்போல் மஹா பராக்ரமசாலியான ராமனை யுத்தத்தில் எதிர்க்கக்கூடியவனுமுண்டோ? ராமன் சண்டையில் தோல்வியடைந்து இறக்கிறவரல்ல. தாங்கள் இப்படிச் சொல்லத் தகாது. ராமனுமின்றி நானுமின்றித் தங்களை இந்த வனத்தில் ஒண்டியாய் விட்டுப் போக எனக்கு மனஸ் வரவில்லை. மஹாபலசாலிகளுடைய பலங்களெல்லாம் ஒன்று சேர்ந்தாலும் அவருடைய பலத்திற்கு ஈடோ? ஸகல லோகங்களும் லோகபாலர்களும் ராமனுடைய கோபமென்ற நெருப்பில் விளக்கு வெட்டுப்பூச்சிகளைப் போல் விழுந்து சாம்பலாவார்களே. துக்கப் படவேண்டாம்;

கவலையை விடுங்கள். அந்த மானைக்கொன்றுவிட்டு அவர் அதி சீக்கிரத்தில் வருவார். இது அவருடைய குரலென்று, கந்தர்வ நகரத்தைப்போல் எவனோ இந்த மாயையை ப்ரயோகித்திருக்கிறான். ஸந்தேஹமென்ன? அந்த மாரீசனுடைய இந்த்ரஜாலமே. இது அவனுடைய குரலே. ராமன் தங்களை என்னிடத்தில் ஒப்புவித்துப் போயிருக்கிறார். நான் தங்களை விட்டுப் போவது ந்யாயமல்ல. கரதூஷணர்களை ஜனஸ்தானத்தில் ராமன் கொன்றது முதல் ராக்ஷஸர்கள் அவரிடத்தில் த்வேஷங்கொண்டு அவருக்குக் கெடுதிசெய்ய ஸமயம் பார்த்துக்கொண்டிருக்கிறார்கள். பிறரை ஹிம்ஸை செய்வதே அவர்களுக்கு ஆனந்தம். அவர்கள் இதைப் போல் இன்னும் பலவிதமாகப் பேசக்கூடியவர்கள். இதைப் பற்றித் தாங்கள் கவலைகொள்ளக்கூடா''தென்று ஸமாதானஞ் செய்தார்.

அதைக் கேட்டு ஸீதை கோபத்தால் கண் சிவந்து உண்மையையே பேசும் லக்ஷ்மணனைக் கடுமையான வார்த்தைகளால் தூஷித்தாள். "துஷ்ட! இரக்கமற்றவனே! க்ரூர ஸ்வபாவமுள்ள மஹாபாபி! இக்ஷ்வாகு குலத்தைக் கெடுக்கவந்த பித்ருத்ரோஹி! என்மேல் ஆசைகொண்டு ராமனுக்கு இந்த அபாயம் எப்பொழுது நேரப்போகிறதென்று எதிர்பார்த்துக் கொண்டிருந்தாயோ? இல்லாவிட்டால் அவர் இப்படித் தபிக்கும் பொழுதும் இந்த வார்த்தைகளைச் சொல்வாயா? உன்னைப் போன்ற சக்களத்தி மகன்கள் இப்படிச் சொல்வது ஆச்சர்யமா? நீங்கள் கொடியவர்கள், துஷ்டர்கள், ருத்ராக்ஷப் பூனையைப் போல் நிஜ ஸ்வபாவத்தை மறைத்து நடப்பவர்கள்; எந்தப் பாபத்தையும் செய்வீர்கள். மஹாயோக்யனைப்போல் எங்களுடன் வனத்திற்கு இதற்காகவா வந்தாய்? என்னைக்கைப்பற்ற எண்ணி வந்தாயோ? அல்லது பரதன் உன்னை அனுப்பினானோ? உங்களுடைய எண்ணம் பலிக்காது. மஹாபுருஷனான ராமனை கணவனாக அடைந்து உங்களைப்போன்ற அல்ப ஜந்துக்களை மனஸாலும் நினைப்பேனோ? நீ பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே உயிரை விடுவேன். ராமனை விட்டு ஒரு க்ஷணமாவது பிழைத்திருக்க மாட்டே''னென்றாள்.

மயிர்க்கூச்சலுண்டாகும் கோரமான வார்த்தைகளை ஸீதை இப்படிச் சொன்னாலும், லக்ஷ்மணன் இந்த்ரியஸ்வாதீனமுள்ள மஹானுபாவனானதால், கோபங் கொள்ளாமல் கைகூப்பி வணக்கத்துடன் சாந்தமாகத் "தாயே! தாங்கள் எனக்குத் தைவத்தைப் போன்றவர்கள்; தங்கள் வார்த்தைக்கு எதிர்த்துச் சொல்ல என்னால் முடியாது. முற்றிலும் உசிதமில்லாத வார்த்தைகளைச் சொல்வது ஸ்திரீகளுக்கு ஆச்சர்யமல்ல. அவர்களுடைய ஸ்வபாவம் எப்பொழுதும் இப்படியே. அடக்கம் பொறுமை வினயம் முதலிய நற்குணங்களில்லாமல் சபல சித்தத்துடன் கூர்மையான வார்த்தைகளால் புருஷர்களுடைய ஹ்ருதயங்களைப் பிளப்பதும், பரம ஸ்நேகமுள்ளவர்களை விரோதிகளாக்குவதும் அவர்களுடைய தொழில். ஆனாலும் தங்களுடைய கூர்மையான வார்த்தைகளைக் கேட்டு என் மனஸ் பதறுகிறது. மஹா ஞானியான ஜனகருக்கு எங்கே வந்து பிறந்தாய்? உத்தம குணங்களால் அலங்கரிக்கப்பட்ட விதேஹ சக்ரவர்த்திகளின் வம்சத்தில் எங்கே தோன்றினாய்? இந்த வார்த்தைகள் நாராச பாணங்களைப்போல் என் காதில் புகுந்து ஹ்ருதயத்தைப் பிளக்கின்றனவே. ந்யாய மார்க்கத்தை விட்டு விலகாத என்னைப்பார்த்து இந்த க்ரூரமான வார்த்தைகளைச் சொன்னாயல்லவா? இந்த வனத்திலுள்ள ஸகல பூதங்களும் இதற்கு ஸாக்ஷி. என்னிடத்திலும் ஸந்தேஹித்து இப்படிப்பட்ட கோரமான பாபத்தை என் தலையில் சுமத்தின உன்னைச் சுடவேண்டும். சீ சீ! இப்படிப்பட்ட நீ, இப்பொழுதே இறந்தால் லோகங்கள் சுகப்படும். ஸ்த்ரீகளுக்கே துஷ்டத்தனம் ஸ்வபாவமோ? பிதாவைப் போன்ற ராமனுடைய ஆக்ஞைக்குக் கட்டுப்பட்டு நடக்கிற என்னையும் பார்த்து இந்த வார்த்தைகளைச் சொல்லும் நீயும் ஒரு ஸ்த்ரீயா? நல்லது, ராமன் இருக்குமிடத்திற்குப் போகிறே"னென்று புறப்பட்டார். ராமனுடைய ஞாபகம் வந்தவுடன், "ஐயோ! நானும் கோபத்திற்கு இடங்கொடுத்து எல்லாவிதத்திலும் எனக்குத் தாயான ஜானகியைக் கடுமையாகப் பேசி விட்டேனே"யென்று பரிதபித்துத் "தங்களுக்கு ஸகல மங்களங்களுமுண்டாகட்டும். யாதொரு ஆபத்தும் நேரவேண்டாம். ராமன் தங்களை என்னிடத்தில் ஒப்புவித்தார். நானும் தங்களை இங்கிருக்கும் வனதேவதைகளிடத்தில் ஒப்புவித்துப் போகிறேன். இப்பொழுது காணப்படும் அபசகுனங்களைப்

பார்த்தால் நானும் ராமனும் இனி தங்களைப் பார்ப்போமா வென்று ஸந்தேஹப்படுகிறே"னென்று தயங்கினர். அதைக் கண்டு ஸீதை தாரைதாரையாகக் கண்ணீர் பெருகக் கோவென்று அலறிக்கொண்டு, "லக்ஷ்மண! நீ போய் ராமனை அழைத்துவரா விட்டால் இதோ பார். கோதாவரியில் குதிப்பேன். தூக்கு போட்டுக்கொண்டு உயிரைவிடுவேன். உயரமான இடத்தி லிருந்து விழுந்து ப்ராணனைக் கொடுப்பேன்; அல்லது விஷத்தைத் தின்பேன். நெருப்பில் விழுவேன், என் ரகுநாதனைத் தவிர மற் றொருவரைக் காலாலும் தொடுவேனே"வென்று லக்ஷ்மணனைக் கடிந்து, மஹா துக்கத்துடன் இரண்டு கைகளாலும் வயிற்றில் அடித்துக்கொண்டு அழுதாள்.

இப்படி ஸாஹஸஞ் செய்து காலஸர்ப்பத்தைப்போல் சீறிக் கொண்டு பெருங்குரலிட்டழும் ஸீதையை லக்ஷ்மணன் தன்னால் கூடியவரையில் ஸமாதானஞ் செய்தும் அவள் "பாபி, வஞ்சகா, த்ரோஹி! இப்படியாவது இன்னும் சற்று நேரம் இருக்கலா மென்று எண்ணுகிருயோ''வென்று, கடுங்கோபங்கொண்டவளைப் போல் அவரிடத்தில் பேசவேயில்லை. பிறகு லக்ஷ்மணன் அவளை நமஸ்கரித்து அபிவாதனஞ்செய்து கைகூப்பி வணக்கமாக அனு மதி பெற்று அவளைத் திரும்பிப் பார்த்துக்கொண்டே "இந்தக் கோரமான வனத்தில் இவளை இப்படி அனுதையாக விட்டுப் போகிறேமே"யென்று கவலைகொண்டு ராமன் இருக்குமிடத் திற்குப் போனர்.

—:o:—

## ஸர்க்கம் 46.

### ராவண ஸந்யாஸி

இப்படிக் கொஞ்சங்கூட இஷ்டமில்லாமல், ஸீதையின் க்ரூர வார்த்தைகளான பாணங்களால் துளைக்கப்பட்டு, லக்ஷ்மணன் மெள்ள மெள்ள அந்தக் காட்டில் போய்க்கொண்டிருந்தார். இந்த ஸமயம் எங்கே நேரப்போகிறதென்று காத்துக்கொண் டிருந்த ராவணேச்வரன், அழகான காஷாயம் சிகை யக்ஞோப வீதத்துடன், கையில் குடைபிடித்துக் காலில் பாதக்குறடுகளை மாட்டித், தண்டம் கமண்டலு முதலிய ஸந்யாஸி வேஷத்துடன்

ஆச்ரமத்தை நோக்கி வந்தான். ராமலக்ஷ்மணர்களில்லாமல் ஒண்டியாயிருக்கும் ஸீதையை அவன் எடுத்துப்போக வருவது, சந்த்ர ஸூர்யர்களில்லாத ஸந்த்யா காலத்தைப் பெரிய இருட்டு விழுங்க வருவதுபோல் தோன்றிற்று. சந்த்ரனை விட்டுப் பிரிந்த ரோஹிணி தேவியைச் சனியென்ற க்ரூரக்ருஹம் பார்ப்பது போல், ராமனை விட்டுப்பிரிந்த ஜானகியை மஹா க்ரூரமான ராவணன் பார்த்தான். ஸகல லோகங்களும் நடுங்கும்படியான தேஜஸையும் நடத்தையையுமுடைய அந்த ராக்ஷஸனைக் கண்டு, ஜனஸ்தானத்திலுள்ள மரங்களெல்லாம் பயத்தால் அசைவற்றிருந்தன. காற்றடிக்கவில்லை. நெருப்புப்பொறி போன்ற கண்களுடன் அவன் அங்குமிங்கும் பார்த்துக்கொண்டு போகையில் அதிக வேகமாக ஓடும் கோதாவரி நதியும் "நமது வேகத்தைக் கண்டு என்ன கோபிக்கிருனோ"வென்று மெள்ள ஓட ஆரம்பித்தது. ராமன் எப்பொழுது அப்புறம் போவானென்று காத்திருந்த ராவணன், தன் துஷ்ட ஸ்வபாவத்தை ஸாதுக்களின் வேஷத்தால் மறைத்து, ராமனைக் குறித்துத் தபித்துக்கொண்டிருக்கும் ஸீதையிருக்குமிடத்திற்குச் சித்ரா நக்ஷத்ரத்தைப் பிடிக்க வரும் சனியைப்போல் வந்தான். புல்லால் மூடப்பட்ட பாழுங் கிணற்றைப்போல் ஸந்யாஸி வேஷத்தால் ராக்ஷஸ ரூபத்தை மறைத்துக்கொண்டு, விதேஹராஜபுத்ரியும் ராமனுடைய பத்னியுமான ஸீதையைப் பார்த்துக்கொண்டே நின்முன். அழகான உதடுகளையும் பல்வரிசையையும் மலர்ந்த செந்தாமரையைப் போன்ற நேத்ரங்களையும் பூர்ணசந்த்ரனைப்போன்ற முகத்தையுமுடைய ஸீதை, வெண்பட்டைத் தரித்துக்கொண்டு, ராமனுக்கு நேர்ந்த அபாயத்தை நினைத்துக் கண்ணீர் தாரைதாரையாகப் பெருக ஆச்ரமத்தில் உட்கார்ந்திருக்கக் கண்டான். கெட்ட எண்ணத்துடன் காமத்தால் மெய்மறந்து, வெளிக்கு வேதவாக்யங்களைச் சொல்லிக்கொண்டு ஸீதையின் ஸமீபத்தில் வந்து, அவளுடைய தேஹகாந்தியையும் உத்தம லக்ஷணங்களையும் பார்த்து, "ஸகல லோகங்களிலும் இப்படிப்பட்ட ஸ்த்ரீயை நான் பார்த்ததேயில்லை. கமலாஸனத்தில் வீற்றிருக்கும் ஸ்ரீதேவியே கமலத்தைவிட்டுப் பூலோகத்தில் வந்திருக்கிருளோ"வென்று ப்ரமித்து வினயமாக ஸ்தோத்ரஞ் செய்தான்.

"உருக்கி ஓடவிட்ட ஆயிரத்தெட்டு மாற்றுத் தங்கத்தைப் போன்ற தேஹகாந்தியுடன், மலர்ந்த தாமரைகளால் விளங்கும் ஓடையைப்போல் வெண்பட்டால் அலங்கரிக்கப்பட்டிருக்கும் நீ யார்? பூதேவியோ! கீர்த்திதேவியோ, மஹாலக்ஷ்மியோ, ஸ்ரீதேவியோ, அப்ஸரஸோ, பாக்யதேவதையோ? ரதியோ? இஷ்டப்படி ஸஞ்சரிக்கும் நீ யார்? உன் பல்லுகள் ஏற்றத்தாழ்வில்லாமலும் நுனியுள்ளவைகளாகவும் வெண்மையாகவும் அழகு பொருந்தியுமிருக்கின்றன. உன் கண்கள் விசாலமாகத் தெளிந்து செவ்வரி படர்ந்து கறுத்திருக்கின்றன. உன் தொடைகள் யானைத் துதிக்கைகளைப்போலிருக்கின்றன. உன் ஸ்தனங்கள் உயர்ந்து பருத்து நெருங்கி வட்டமிட்டுப் பனம்பழங்களைப்போல் அதிக மனோகரமாகத் தங்க ஹாரங்களால் அலங்கரிக்கப்பட்டிருக்கின்றன. மனஸைக் கவரும் புன் சிரிப்பையும் பல்வரிசையும் நேத்ரங்களையும் விலாஸத்தையுமுடையவளே! வேகமான ப்ரவாஹம் கரைகளை அறுப்பதுபோல் உன் லீலைகளும் சேஷ்டைகளும் என் மனதை அறுகின்றனவே. கைப்பிடியில் அடங்கும் உன் இடையையும் தாமரைப் புஷ்பத்தில் மொய்க்கும் வண்டுகளைப்போலிருக்கும் உன் தலைமயிரையும் கண்டு மயங்காதவர்கள் யார்? தேவஸ்த்ரீகளையும் கந்தர்வஸ்த்ரீகளையும் யக்ஷஸ்த்ரீகளையும் கின்னரஸ்த்ரீகளையும் மனுஷ்யஸ்த்ரீகளையும் பார்த்திருக்கிறேன். இவ்விதமான ரூபத்தையும் லாவண்யத்தையும் பால்யத்தையும் அங்கங்களின் மேன்மையும் பருவத்தையும் யோசித்தால், இந்தக்காட்டில் நீ தனியாக இருப்பதையும் யோசித்தால் நீ இங்கே வந்த காரணமென்னவென்று நிச்சயிக்கமுடியவில்லை. கோரமான ராக்ஷஸர்கள் நடமாடும் இந்தக்காட்டில் வஸிக்கத் தகுந்தவளல்ல. ஆகையால் இங்கே இருக்காதே. ராக்ஷஸர்கள் இஷ்டமான ரூபங்களை எடுப்பார்கள், மஹா மாயாவிகள்; பலவிதமாக உன்னை வஞ்சிப்பார்கள், அழகிய உப்பரிகைகளிலும் நகரத்தைச் சேர்ந்த தோட்டங்களிலும் ஸகல பரிமளவஸ்துக்களாலும் நேத்ரத்திற்கு ஆனந்தத்தைக் கொடுக்கும் பொருள்களாலும் சூழப்பட்டல்லவா நீ வஸிக்கவேண்டும்? ச்ரேஷ்டமான மாலைகளும் உத்தமமான ஆஹாரங்களும் நேர்த்தியான ஆடைகளும் லோகோத்தரமான கணவனுமல்லவா உனக்குக் கிடைக்க வேண்டும்? நீ யார்? தேவஸ்த்ரீயென்றெண்ணுகிறேன். ருத்ர மருத்

வஸு முதலிய தேவகணங்களைச் சேர்ந்தவர்களில் நீ யாருடைய மனைவி? இங்கே தேவ கந்தர்வ கின்னர கணங்கள் வருவது வழக்கமில்லையே. ராக்ஷஸர்களல்லவா இங்கே ஸஞ்சரிக்கிறார்கள்? நீ இங்கேவரக் காரணமென்ன? இங்கே உன்னைச் சுற்றியிருக்கும் குரங்கு ஸிம்ஹம் சிறுத்தை புலி பெரும்புலி மான் கரடி கழுகு முதலியவைகளைக்கண்டு நீ எப்படிப் பயப்படாமலிருக்கிறாய்? மஹாபலமுள்ள யானை மதங்கொண்டு திரியும் இந்தக்காட்டில் நீ ஒண்டியாகப் பயப்படாமல் ஸஞ்சரிப்பதெப்படி? நீ யார்? யாரைச் சேர்ந்தவள்? எங்கிருந்து வந்தாய்? ஏன் வந்தாய்? கோரமான ராக்ஷஸர்கள் நிறைந்த இந்தத் தண்டகாரண்யத்தில் என்ன செய்கிறாய்''யென்று துராத்மாவான ராவணன் ப்ராஹ்மண ஸந்யாஸி வேஷத்துடன் ஸீதையைப் புகழ்ந்தான்.

அவள் அவனை விதிப்படி உபசரித்துப் பூஜித்து ஆஸனம் அர்க்யம் பாத்யம் முதலியவைகளைக் கொடுத்து, ஆஹாரம் ஸித்தமாயிருக்கிறதென்று தெரிவித்தாள். காஷாயம் தண்டம் முதலிய ப்ராஹ்மண ஸந்யாஸி வேஷத்துடன் வந்திருந்தாலும், ஸீதையை எடுத்துப்போக உபாயத்தைத் தேடிக் கொண்டிருந்தானேயொழிய அவள் செய்த அதிதிப் பூசையைப் பெற்றுக்கொள்ளவாவது புஜிக்கவாவது அங்கே வந்தவனா? அவன் கோறி வந்த பிக்ஷை வேறல்லவா? மஹா ஞானியான ஜனகருடைய வீட்டில் பழகின ஸீதைக்கு ஸந்யாஸிகளின் தர்மமும் ஆசாரமும் நன்றாகத் தெரியும். ஆகையால் அவன் கபட ஸந்யாஸியென்றறிந்தும், அவனுடைய வேஷத்திற்காவது மர்யாதை செய்ய விரும்பி அவனிடத்தில் த்வேஷம் வைக்கமுடியாமல், உண்மையான ப்ராஹ்மண ஸந்யாஸியைப் பூஜிப்பதுபோல் "ஸ்வாமி! இந்த ஆஸனத்தில் உட்காருங்கள். இந்த ஜலத்தால் கால்களைக் கழுவுங்கள். இந்தக் காட்டில் கிடைக்கும் ஆஹாரம் தங்களுக்காக ஸித்தமாயிருக்கிறது. இஷ்டப்படி ஸுகமாகப் புஜிக்கலா''மென்றாள்.

இப்படி ராமசந்த்ர மஹாராஜாவின் பார்யையான ஜானகி தனக்கு உத்தமமான அதிதிபூஜை செய்வதைப்பார்த்து அந்தப் பாபி அவளை எப்படிப் பலாத்காரமாக எடுத்துப் போகலாமென்று ஆலோசித்துக்கொண்டிருந்தான். அந்த க்ஷணத்திலேயே தன் சாவையும் தேடிக்கொண்டான். ஆயுதபாணியாக மான்வேட்

டைக்குப்போன ராமனையும் அவரைத் தேடப்போன லக்ஷ்மணனை யும் ஸீதை ஒவ்வொரு நிமிஷமும் எதிர்பார்த்துக்கொண்டு மரங்கள் அடர்ந்து இருண்ட அந்த வனத்தில் நான்கு புறத்திலும் பயத் துடன் பார்த்தும் அந்த யுத்தவீரர்களைக் காணமுடியவில்லை.

—:o:—

## ஸர்க்கம் 47.

## ஸீதா ராவணஸம்வாதம்

ஸந்யாஸி வேஷம்பூண்ட ராவணனால் இப்படித் தகாத வார்த் தைகளைச் சொல்லப்பட்ட ஸீதை "இவன் ப்ராஹ்மணன், அதிதி; கபட வேஷந்தரித்தாலும் இவன் கேட்டதற்கு நான் பதில் சொல்லாவிட்டால் ஒரு வேளை சபிப்பா"னென்று கொஞ்ச நேரம் ஆலோசித்து, "ஸ்வாமி! மிதிலா நகரத்து அதிபதியான ஜனக சக்ரவர்த்திக்கு நான் புத்ரி. ஸீதையென்று எனக்குப் பெயர். கோஸலாதிபதியான தசரத மஹாராஜாவின் மூத்த புத்ரன் ராம சந்த்ரனே என் பர்த்தா. எனக்கு விவாஹமானபிறகு பன்னி ரண்டு வர்ஷங்கள் வரையில் இக்ஷ்வாகு வம்சத் தரசர்களுடைய வீட்டில் ஸகல இஷ்டங்களும் பூர்த்தி செய்யப்பட்டு ஸகல லோகங்களையும் அனுபவித்துக்கொண்டிருந்தேன். பதின்மூன்றா வது வர்ஷத்தில் தசரதர் மந்த்ரிகளுடன் ஆலோசித்து ராமனுக்கு யௌவராஜ்யாபிஷேகஞ் செய்ய நிச்சயித்தார். அப்பொழுது அபிஷேகத்திற்கு வேண்டிய ஸகல ஏற்பாடுகளும் நடந்துகொண் டிருக்கும்பொழுது, சக்ரவர்த்தியின் ராணிகளில் ஒருத்தியான கைகேயி, மஹாராஜாவைத் தான் கேட்ட வரங்களைக் கொடுக்கும் படி அவர் செய்த புண்யத்தின் மேல் ப்ரதிக்ஞை செய்வித்து, என் பர்த்தா வனத்தில் பதினான்கு வர்ஷங்கள் வரையில் வஸிக்க வேண்டுமென்றும் அவளுடைய புத்ரனான பரதன் ராஜ்யத்தை ஆளவேண்டுமென்றும் இரண்டு வரங்களைக் கேட்டாள். ஸத்யந் தவறாத சக்ரவர்த்தியைப் பார்த்து 'நீர் ராமனுக்கு அபிஷேகஞ் செய்தால் அன்னபானங்களைத் தொடமாட்டேன், தூங்கமாட் டேன்; எப்படியாவது உயிரை விடுவே'னென்றாள். அவள் முன்பு தனக்குச் செய்த உபகாரத்தால் தசரதர் கட்டுப்பட்டு, மிகுந்த மானியாகையால் பலவிதமாக நயத்தாலும் பயத்

தாலும் ச்ரேஷ்டமான பொருள்களேயும் அபூர்வமான வஸ்துக்களே யும் கொடுக்கிறேனென்றும் அவளை ஸமாதானஞ் செய்து பார்த் தார். அவள் ஒப்புக்கொள்ளவில்லே. என் கணவனே ஸகல போகங்களேயும் அனுபவிக்கத் தகுந்த வயஸிலிருப்பவர்; சக்ரவர்த்தி லக்ஷணங்கள் யாவும் பொருந்தியவர். இப்படிப்பட்டவரைக் காட்டிற்கு அனுப்புவது ந்யாயமா? மஹா தேஜஸ்வி! காட்டிற் குப் போகும்பொழுது அவருக்கு இருபத்தைந்து வயஸ். எனக்குப் பதினேழு வயஸ்.

ஸகல கல்யாண குணங்களும் பொருந்தினவரென்றும் ஸத்யமே பேசுகிறவரென்றும் சுத்தரென்றும் ஸகல லோகங்களி லும் ராமன் கீர்த்தி பெற்றவர்; விசாலமான நேத்ரங்களேயும் முழங்கால் வரையில் நீண்டு யானைத் துதிக்கையைப் போல் பருத்த புஜங்களேயுமுடையவர். ஸகல ப்ராணிகளுக்கும் ஹிதத்தையே தேடுகிறவர். பிதாவான தசரத சக்ரவர்த்தி மஹாதேஜஸ்வி யானாலும், ஆசைக்கு அடிமையாகிக், கைகேயியின் இஷ்டத்தைப் பூர்த்திசெய்ய விரும்பி ராமனுக்கு அபிஷேகஞ் செய்யவில்லே. அதற்காகத் தகப்பனிடத்திற்குப் போன என் பர்த்தாவைப் பார்த் துக்கைகேயி வெகு துணிவுடன் "ராம! உன் பிதா உன்னிடத்தில் இந்த வார்த்தைகளேச் சொல்லும்படி என்னேக் கேட்டுக்கொண் டிருக்கிறார். இந்த ராஜ்யத்தை யாதொரு அபாயமில்லாமல் பரத னுக்குக் கொடுக்கவேண்டும். நீ காட்டில் பதினான்கு வர்ஷங்கள் வரையில் வஸிக்கவேண்டும். இப்படிச் செய்யாவிட்டால் உன் பிதாவைப் பொய் சொன்ன பாபத்திற்கு உட்படுத்துவா" யென்றாள்.

ராமனே செய்த ப்ரதிக்ஞையைத் தவருதவர். பிறர்க்குக் கொடுப்பதே யொழிய ஒருவரிடத்திலிருந்தும் வாங்கமாட்டார். எப்பொழுதும் ஸத்யத்தையே பேசுவார். பொய்யென்பதையே ஒருநாளும் அறியார். ராமன் அனுஷ்டிக்கும் வ்ரதம் இதே.

தசரதருடைய இரண்டாவது பத்னியான ஸுமித்ரைக்கு ஒரு மகனுண்டு. அந்த லக்ஷ்மண மஹாவீரன்; சத்ருக்களுக்குக் காலன். ராமனை விட்டுப் பிரியாதவன். ராம லக்ஷ்மணர்களும் நானும் மஹா ராஜாவின் வார்த்தையைக் காப்பாற்ற இந்த காட் டிற்கு வந்திருக்கிறோம். அவர்கள் தபஸ்விவேஷத்துடன் இந்த்ரி

யங்களை அடக்கித் தர்மத்தில் மனஸைநாட்டி ஆயுதபாணிகளாக இங்கே வஸித்துக் கொண்டிருக்கிறார்கள். இப்படிக் கைகேயி யின் மூலமாக ராஜ்யத்திலிருந்து துரத்தப்பட்டு இந்தக் காட்டிற்கு வந்து, எங்கள் தர்மத்தால் காப்பாற்றப் படுகிறோம். இந்த ஆச்ரமம் வெகு பரிசுத்தமானது. ஆகையால் இவ்விடத்தில் தாங்கள் சற்று நேரம் இளைப்பாறலாம். இந்தக் காட்டில் கிடைக் கக்கூடிய ஆஹார பதார்த்தங்களை எடுத்துக்கொண்டு என் பர்த்தா சீக்ரத்தில் வந்துவிடுவார். தங்களுடைய பெயரையும் குலத்தை யும் கோத்ரத்தையும் எனக்குச் சொல்லவேண்டும். இந்தத் தண்டகாரண்யத்தில் ஒண்டியாக ஏன் ஸஞ்சரிக்கிறீர்க" ளென்றாள்.

தன் குலத்தையும் பராக்ரமத்தையும் சொல்லிக்கொள்ள சமயம் கிடைத்ததைப்பற்றி மிகவும் ஸந்தோஷமடைந்து, ராவ ணன் உடனே "ஸீதே! நான் ராக்ஷஸாதிபதி. ப்ரதாப லங்கேச் வரன். ஸகல லோகங்களையும் ஸகல ப்ராணிகளையும் நடுங்கச் செய் கிறவன். என்னை ராவணனென்று சொல்வார்கள். ச்ரேஷ்டமான தங்கத்தைப்போன்ற தேககாந்தியுடன் வெண்பட்டால் அலங்க ரிக்கப்பட்டிருக்கும் உன்னைப் பார்த்த பிறகு என் பத்னிகளிடத் தில் மனஸ் செல்லவில்லை. பல லோகங்களிலிருந்து பல ஸமயங் களில் பல ஸ்த்ரீ ரத்னங்களைக் கொண்டுவந்து வைத்திருக்கிறேன். அவர்கள் யாவருக்கும் ஈச்வரியாகவிரு. ஸமுத்ரத்தின் நடுவில் த்ரிகூடமென்று ஒரு மலையுண்டு. அங்கே என் ராஜதானி மயனால் அமைக்கப்பட்டிருக்கிறது. பல மனோஹரமான மலைத்தாழ்வரை களிலும் தோட்டங்களிலும் என்னுடன் ஸுகமாகக் காலத்தைக் கழிக்கலாம். அப்பொழுது இந்தக் காட்டில் வஸிக்கவேண்டு மென்ற ஞாபகமே உனக்கு வராது. நீ எனக்குப் பார்யை யானால் ஸகல ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டு ஐயாயிரம் வேலைக்காரர்கள் உனக்குப் பணிவிடை செய்வார்க"ளென்றான்.

ஸீதை அதைக் கேட்டுக் கோபங்கொண்டு அந்த ராக்ஷஸ னைக் கொஞ்சமேனும் லக்ஷ்யஞ் செய்யாமல் "துஷ்ட! யாரைப் பார்த்து என்ன சொன்னாய்? என் பர்த்தா மேருமலையைப்போல் அசைக்க முடியாதவர். மஹா ஸமுத்ரத்தைப்போல் கலக்கமுடி யாதவர். மஹேந்த்ரனைப்போல் நிகரற்ற பலமுடையவர்; பராக்

ரமமுடையவர். அவர் அனுஷ்டிக்கும் தர்மத்தை நானும் நடத்து கிறேன். ஸகல உத்தம லக்ஷணங்களும் பொருந்தினவர் ; விசால மான கிளைகளுள்ள ஆலமரத்தைப்போல் ஸகல ஜனங்களாலும் அண்டத் தகுந்தவர். ஸத்யந் தவருதவர், மஹாத்மா. நான் அவரை அனுஸரிக்கிறவள். நீண்டு பருத்த புஜங்களையும் விசால மான மார்பையும் மதங்கொண்ட ஸிம்ஹத்தின் நடையையும் பலத் தையும் தைர்யத்தையும் பராக்ரமத்தையும் கொண்ட புருஷ ஸிம்ஹம். பூர்ணசந்த்ரனைப் போன்ற முகத்தையுடையவர். இந்த் ரியங்களை ஜயித்தவர் ; மஹாகீர்த்திமான். நானே அவரை அனு ஸரிக்கிறவள்.

பெண் ஸிம்ஹத்தைப் போன்ற என்னை, நாயைப்போன்ற நீ அடைய விரும்பத் தகுமா ? ஸூர்யனை விட்டுக் காந்தியைப் பிரிக் கவும் முடியுமா ? அப்படியே ராமனைவிட்டு என்னைப் பிரிக்க முடி யுமா ? உனக்கு மரணகாலம் நெருங்கிவிட்டது. தங்க நிறமுள்ள மரங்களைப் பார்க்கிருயென்று எண்ணுகிறேன். இல்லாவிட்டால் ராமனுக்கு ப்ரியபார்யையான என்னை விரும்புவாயா ? காட்டி லுள்ள மிருகங்களுக்குக் காலனை மஹாஸிம்ஹம் பசித்திருக்கும் பொழுது அதன் தந்தத்தைப் பிடுங்க முயல்கிருயா ? கொடிய விஷத்தையுடைய காலஸர்ப்பத்தின் வாயில் கையைவிட்டு விஷப் பல்லைப் பிடுங்கப்போகிருயோ ? மந்த்ர பர்வதத்தைக் கையா லெடுத்து விளையாடப் பார்க்கிருயே ? காலகூட விஷத்தைக் குடித்துவிட்டு ஸுகமாயிருக்கப் பார்க்கிருயோ ? கூர்மையான ஊசியால் கண்ணைச் சொறியப் பார்க்கிருயோ ? கருக்குள்ள கத் தியை நாக்கால் தடவப்பார்க்கிருயா ? கழுத்தில் பெரிய பாறை யைக் கட்டிக்கொண்டு ஸமுத்ரத்தை நீந்திக் கடக்கப்பார்க்கிருயா ? ஸூர்ய சந்த்ரர்களைக் கைகளால் தாவிப் பிடிக்கப்பார்க்கிருயோ ? கொழுந்து விட்டெரியும் நெருப்பைத் துணியில் சுருட்டப்பார்க் கிருயா ? கூர்மையான முனைகளுள்ள இரும்புச் சூலங்கள்மேல் நடக்கப் பார்க்கிருயா ? இல்லாவிட்டால் ராமனுக்கு ப்ரியபார்யை யாகிச் சுத்தமான ஆசாரத்தையுடைய என்னை விரும்பத்துணி வாயா ?

ராமன் ஸிம்ஹம், நீ அல்பமான நரி ; ராமன் மஹா ஸமுத்ரம், நீ அல்பமான கால்வாய் ; ராமன் உத்தமமான மத்யபானம், நீ

புளித்த காடிக் கழுநீர்; ராமன் உருக்கி ஓடவிட்ட ஆயிரத் தெட்டு மாற்றுத் தங்கம், நீயோ ஈயம். ராமன் ச்ரேஷ்டமான சந்தனக் குழம்பு, நீயோ நாற்றமுள்ள சேறு, ராமன் மதம்பிடித்த யானை; நீயோ பூனை; ராமன் பக்ஷிகளுக்கெல்லாம் அரசனான கருடன், நீயோ காக்கை; ராமன் கலஹம்ஸம், நீயோ விகாரமான கழுகு. உனக்கும் அவருக்கும் எவ்வளவு தூரம்!! மஹா ரத்னத்தை அரிசியென்று எண்ணிக்கொசு விழுங்கினால் அதை ஜரிக்க முடியுமா? பராக்ரமத்தில் தேவேந்த்ரனுக்கு ஸமமான ராமன் கோதண்டபாணியாக என்னை ரக்ஷிக்கும்பொழுது நீ என்னை எடுத்துப்போனாலும் வைத்துக்கொண்டிருக்க முடியுமா? என்னால் உன்னுயிர் போகுமேயொழிய வேறல்ல"வென்றாள்.

இப்படி மஹா ஸாதுவும் பரிசுத்தமானவளும் ஜனகராஜ புத்திரியுமான ஸீதை, ராவணனைப் பார்த்துத் தைர்யமாக அதட்டினாலும், மனஸிலிருக்கும் பயத்தால் காற்றில் அடிபட்ட வாழையைப்போல் நடுங்கினாள். ராவணன் அதைப் பார்த்து 'இவளை இன்னும் அதிகமாகப் பயமுறுத்தினால் நமக்குட்படுவா'ளென்றெண்ணினான். காலனைப்போன்ற பராக்ரமமுள்ள அந்தப் பாபி தன் குலத்தையும் பலத்தையும் பெயரையும் கோரமான செய்கைகளையும் வர்ணிக்க ஆரம்பித்தான்.

——:o:——

## ஸர்க்கம் 48.

### (தொடர்ச்சி)

அதைக் கேட்டு ராவணன் கோபத்தால் புருவத்தை நெறித்து மிகவும் கொடிய வார்த்தைகளைச் சொல்ல ஆரம்பித்தான். "மின்னற் கொடியைப்போன்ற பெண்ணரசே! குபேரனும் நானும் ஒரே பிதாவுக்கு வேறு பார்யைகளிடத்தில் பிறந்தோம். ராவணனென்றும் தசக்ரீவனென்றும் லோகங்களில் ப்ரஸித்தி பெற்றிருக்கிறேன். ஸகல ப்ராணிகளும் ம்ருத்யுவைக் கண்டு நடுங்கி ஓடுவதுபோல், என்னைக் கண்டு தேவ தானவ கந்தர்வ பிசாச பதக உரக தைத்ய கணங்கள் நடுங்கி ஓடும். ஏதோ ஒரு காரணத்தால் குபேரனுடன் யுத்தஞ்செய்து அவனை ஜயித்துக் கதறவடித்தேன்.

அவன் பயந்து ஸகல ஸம்பத்துகளும் நிறைந்த தன் ராஜதானி யான லங்கையைவிட்டு ஓடிக் கைலாஸத்தில் வஸிக்கிறான். ஆகாசத்தில் நினைத்தவிடத்திற்குப் போகக்கூடிய அவனுடைய புஷ்பக விமானத்தையும் கைப்பற்றினேன். நான் கோபித்தால் இந்த்ராதி தேவதைகள் பயந்து நடுங்கி ஓடி ஒளிந்துகொள்வார் கள். காற்றும் நானிருக்குமிடத்தில் பயந்தே அடிக்கும். ஸூர் யன் தன் கிரணங்களை ஒளித்துச் சந்த்ரனைப்போல் குளிர்ச்சி யைக் கொடுப்பான். மரங்களில் இலைகள் அசையாது. ஆறு களில் நீர் ஓடாமல் நிற்கும். நான் எங்கிருந்தாலும் எங்கே ஸஞ்சரித்தாலும் எங்கே பார்த்தாலும் இப்படியே.

இந்த்ரனுக்கு அமராவதியென்ற ராஜதானியைப்போல் எனக் கும் லங்கையென்ற ராஜதானியுண்டு. ஸமுத்ரத்தால் சூழப்பட்டுக், கோரமான ராக்ஷஸர்களால் நிறைந்து, வெள்ளியால் செய்யப் பட்ட கோட்டைச் சுவர்களையும் தங்கத்தால் செய்யப்பட்ட வீட்டுச் சுவர்களையும் வைடூர்யம் முதலிய நவரத்னங்களால் இழைக்கப்பட்ட வாசற்படிகளையுமுடையது. பலத்திலும் பராக்ர மத்திலும் தைர்யத்திலும் நிகரற்ற சத்ருஸைன்யத்தால் காக்கப் பட்டது. பாட்டு ஆட்டம் வாத்யம் முதலியவைகளின் கோஷம் எப்பொழுதும் மதுரமாகக் கேட்கப்படும். தோட்டங்களில் அபூர்வ மரங்கள் எக்காலத்திலும் பழங்களாலும் புஷ்பங்களாலும் நிறைந்திருக்கும். அங்கே நீ என்னுடன் ஸந்தோஷமாகக் காலங் கழித்துக்கொண்டு மனுஷ்யஸ்த்ரீகளையும் அவர் அனுபவிக்கும் போகங்களையும் நினைக்கவேமாட்டாய்.

"ராமன் தசரதருடைய மூத்த புத்ரன்; ராஜ்யத்தை அடைய வேண்டியவன். அப்படியிருக்க, ஒரு ஸ்த்ரீ தன் மகனுக்கு அந்த ராஜ்யத்தைக் கொடுத்து, ராமனைக் காட்டிற்குத் துரத்திவிட்டாள். அவனுடைய வீர்யம் எவ்வளவு? அவனுடைய ஆயுஸ் எவ்வளவு? கேவலம் ஒரு மனுஷ்யன்; அவனைப்பற்றி நினைக்கப்போகிறாயா? பலமற்றுத், தேஜஸ்குறைந்து புத்திமயங்கிப், 'பயிருக்கு முதவாத வன் பாகவத'னென்றபடி, ஒன்றும் கையாலாகாமல் தபஸ்வி வேஷத்தைத் தரித்த பேதையால் உனக்கென்ன' ப்ரயோஜனம்? ஸகல லோகங்களிலுள்ள ராக்ஷஸர்களுக்கெல்லாம் நாதன் நான். உன்னிடத்தில் ஆசை வைத்து நானே உன்னைத் தேடிவந்திருக்

கிறேன். என்னை அலக்ஷ்யஞ்செய்வது உனக்குத் தகாது. முன் காலத்தில் புரூரவஸ் சக்ரவர்த்தியை ஊர்வசி அலக்ஷ்யஞ்செய்து காலால் உதைத்துத் தள்ளிப் பிறகு பச்சாத்தாபம் மேலிட்டு அவனைத் தேடிப்போனதுபோல், நீயும் என்னை அலக்ஷ்யஞ்செய் தால் பிறகு மிகவும் வருத்தப்படுவாய். யுத்தத்தில் ராமன் என் சுண்டுவிரலுக்குக் காணுவானு? கேவலம் மனுஷ்யனல்லவா? உன் அதிருஷ்டவசத்தால் உன்னைத் தேடி வந்திருக்கிற என்னை அடைந்து ஸுகமாக இரு''வென்று பலவிதமாக கலைக்கப்பட்டும், ஸீதை கோபத்தால் கண்கள் சிவந்து, அந்த ராக்ஷஸனைக் கடுமை யாகக் கோபித்தாள்.

கேவலம் ஒரு மனுஷ்ய ஸ்த்ரீ. கோரமான வனத்தில் ஒண்டி யாகக் காப்பாற்றுவாரின்றித் தபிப்பவள். ஸகல ப்ராணிகளும் கண்டு நடுங்கும்படியான ராவணேச்வரன் தன் பலத்தையும் வீர் யத்தையும் கீர்த்தியையும் ஐச்வர்யத்தையும் கொடிய ஸ்வபாவத் தையும் மறந்து, அதுவரையிலும் ஒருவருக்கும் வணங்காத தன் தலையை ஸீதைக்கு வணங்கி, தன் ராஜ்யத்தையும் ஐச்வர்யங்களை யும் அவளுடைய பாதங்களில் ஸமர்ப்பணஞ்செய்து, தன்னை அங்கீகரிக்கவேண்டுமென்று கெஞ்சிக் கேட்டான். அவனை அலக்ஷ்யஞ்செய்து, ஒரு துரும்பாக நினைத்து, நிந்தித்த ஜானகி யின் பதிவ்ரதா தர்மத்தின் மஹிமையை வர்ணிக்க முடியுமா? "துஷ்ட! உன் உடன் பிறந்தவனை குபேரன் மஹாத்மா! ஸகல லோகங்களிலும் பூஜிக்கப்பட்டவன். அவனுக்குத் தம்பியா யிருந்தும் எப்படி இந்தக் கெட்ட எண்ணங்கொண்டாய்? கடின சித்தத்தையும், கெட்ட புத்தியையுங்கொண்டு, இந்த்ரி யங்களை ஜயிக்காமல், ஸாதுக்களை ஹிம்ஸிக்கும் உன்னை ராஜா வாக அடைந்த ஸகல ராக்ஷஸர்களும் மடிவார்களென்பதில் ஸந்தேஹமுண்டா? நிகரற்ற ரூபவதியான இந்த்ராணியை இந்த்ரனுடைய கையிலிருந்து பலவந்தமாக அபகரித்துப் பிழைத் தாலும் பிழைக்கலாம், ராகவனுக்கு ப்ரியமான என்னை அபஹரித்த நீ அமிருத பானஞ்செய்து மரணமற்றவனுக விருந்தாலும் உயிர் தப்புவாயா?''வென்று நிந்தித்தாள்.

——:o:——

## ஸர்க்கம் 49.

## ஸீதாஹரணம்

ஸீதை இப்படிச் சொல்லக் கேட்டு, மஹா ப்ரதாபசாலியான தசமுகன் கோபாவேசத்தால் கையோடுகையை அறைந்து, மலையைப்போன்ற ரூபத்தை எடுத்து "பெண்ணே! என் பல பராக்ரமங்களை நீ கேட்டதில்லை யென்றெண்ணுகிறேன். இப்பொழுது நான் அவைகளை விஸ்தாரமாக எடுத்துச் சொன்னாலும் நீ என்னை அலக்ஷ்யம் செய்வதைப் பார்த்தால் உனக்குச் சித்த ஸ்வாதீனமில்லாமல் பைத்யம் பிடித்திருக்கிறதென்று எண்ணுகிறேன். ஆகாசத்தில் நின்றுகொண்டு பூமியைக் காலால் தூக்குவேன். ஸமுத்ரத்தை அள்ளிக்குடிப்பேன். காலனுடன் யுத்தஞ் செய்து அவனுக்குங் காலனாவேன். கூர்மையான பாணங்களால் ஸூர்யனைத் தடுப்பேன். ஸகல லோகங்களையும் பிளப்பேன். நினைத்த ரூபங்களை எடுப்பேன். உனக்கு வேண்டிய வரங்களைக் கொடுப்பேன். இப்படிப்பட்ட நான் உன் மேல் கிருபைசெய்து உன்னை அங்கீகரிக்க, நீ என்னை கொஞ்சமாவது லக்ஷ்யஞ்செய்யாமல் என்னிடத்தில் கடுமையாய்ப் பேசுவதைப் பார்த்தால், உனக்குப் புத்தி ஒழுங்காக இல்லையென்று தோன்றுகிறது. இதோ பா"ரென்று தன் நிஜரூபத்தை எடுத்தான். தேஜஸால் ஸூர்யனுக்கும், உஷ்ணத்தால் அக்னிக்கும் ஸமமான அவனுடைய நேத்ரங்கள் சிவந்து, ஓரத்தில் மஞ்சள் படர்ந்திருந்தன. உத்தமமான ஆபரணங்களாலும், வஸ்த்ரங்களாலும், அலங்கரிக்கப்பட்டு, ஸகல ஆயுதங்களோடும் மஹாமேகங்களைப்போல் விளங்கினான். தான் முன் எடுத்துவந்த சாந்தமான ஸந்யாஸி வேஷத்தை விட்டு, காலாந்தகனுடைய ரூபத்தைப்போல் கோரமான ரூபத்தை எடுத்துக் கோபாவேஷங்களோடு, அதி ரூபலாவண்யத்துடன் விளங்கும் ஸீதைக்கு எதிரில் நின்று, அவளை வெறித்துப் பார்த்து, "ஸகல லோகங்களிலும் ச்ரேஷ்டமான புருஷனைப் பர்த்தாவாக அடையவேண்டுமென்று நீ விரும்பினால் என்னை அங்கீகரிப்பாய். நான் உனக்குத் தகுந்த புருஷன். என்னை அடைந்து வெகுகாலம் ஸுகத்தை அனுபவிக்கலாம். நான் எல்லாவிதத்திலும் ச்ரேஷ்டன். உன்னிடத்தில் ப்ரீதிவைத்தவன். உன்னிஷ்டத்திற்கு விரோதமாய் நான் நடக்கமாட்டேன். அல்ப மனுஷ்யனிடத்தில்

வைத்திருக்கும் ஆசையை விட்டு என்னிடத்தில் கிருபைசெய். முட்டாளே! எல்லாம் தெரிந்தவளைப் போல் எண்ணுகிறவளே! ராஜ்யத்திலிருந்து துரத்தப்பட்டு எல்லோராலும் அலக்ஷ்யஞ் செய்யப்பட்ட ராமனிடத்தில் எந்த குணங்களைக் கண்டு ஆசை கொள்ளுகிருய்? எந்தப் புத்திஹீனனுவது ஒரு ஸ்த்ரீயின் வார்த்தைக்குக் கட்டுப்பட்டு ராஜ்யத்தையும் ஸுகங்களையும் மித்ரர்களையும் விட்டு, துஷ்ட மிருகங்கள் ஸஞ்சரிக்கும் இந்த வனத்தில் வஸிப்பானு''வென்று பரிஹாஸஞ் செய்தான்.

தனக்கு எவ்வளவோ மர்யாதைசெய்து, உபசரித்து ப்ரியமாகப் பேசின ஸீதையிடத்தில் எவ்வளவோ மர்யாதையையும் ப்ரீதியையும் பக்தியையும் வைக்கவேண்டியிருக்க, கெட்ட ஸ்வபாவமுள்ளவனுகையால் எல்லாவற்றையும் மறந்து, ஆசை மேலிட்டு, புதன் ரோஹிணியைப் பிடிப்பதுபோல், இடது கையால் ஸீதையின் தலை மயிரையும் வலது கையால் துடைகளையும் சேர்த்துப் பிடித்து எடுத்தான்.

பெரிய மலையைப் போன்ற சரீரத்துடனும் மஹாநாகங்களைப் போன்ற இருபது புஜங்களுடனும் காலாந்தகனைப்போல் கோபத்தால் ஜ்வலிக்கும் அந்த ராக்ஷஸேச்வரனைப் பார்த்து, அங்கிருந்த வனதேவதைகள் பயந்து ஓடின. கோவேறு கழுதைகள் பூட்டி, தங்கத்தாலும் ரத்னங்களாலும் அலங்கரிக்கப்பட்டு, மஹா மேகங்களைப்போல் சப்தஞ்செய்யும் ராவணனுடைய மாயாமயமான ரதம் உடனே தோன்றிற்று. பிறகு கொடிய வார்த்தைகளால் அவளைப் பயமுறுத்தி, துடைகளைப் பிடித்துத் தூக்கி ரதத்தில் வைத்தான். மஹா கீர்த்திசாலியான ஸீதை, ராவணனுல் இப்படிப் பலவந்தஞ் செய்யப்பட்டு, துக்கந் தாங்காமல் கோரமான வனத்திலிருக்கும் தன் பர்த்தாவை நினைத்து, "ஹா ராம!" வென்று கதறினுள். தன்னிடத்தில் ப்ரியமில்லாத ஸீதையிடத்தில் தான் எல்லையற்ற ஆசை வைத்து, நாகேந்த்ரனுடைய பத்னியை அல்பஜந்து அபஹரிப்பதுபோல், ரதத்தில் கிடந்து புரளும் ஸீதையைப் பிடித்துக் கொண்டு தேரைச் செலுத்தினுன்.

அவன் ஆகாசமார்க்கத்தில் போகும்பொழுது ஸீதை பயத்தாலும் துக்கத்தாலும் மனங்கலங்கி புத்திமயங்கிப் புலம்பினாள். "லக்ஷ்மண, மஹா பராக்ரமசாலியே! பெரியோர்களுக்குப் பணிவிடை செய்வதில் ஒப்பில்லாதவனே! கரதூஷணர்களுடைய வதத்திற்காக பழிவாங்க நினைத்து, என்னைப் பலவந்தமாகக் கொண்டு போகும் இந்த ராவணனைப் பார்க்கமாட்டாயா? தன் உயிரையும் ஸுகங்களையும் ஐச்வர்யங்களையும் கொஞ்சமாவது லக்ஷ்யஞ் செய்யாமல் தன்னை அண்டினவர்களை ரக்ஷிக்கும் ரகுநந்தன! இந்த நீசன் என்னை இப்படி அதர்மாக அபஹரிப்பதைப் பார்க்கவில்லையோ? துஷ்டர்களை ஸம்ஹரித்து ஸாதுக்களை ரக்ஷிப்பதற்காக அவதரித்த மஹானுபவ! இந்த மஹாபாபியான ராவணனை மாத்ரம் ஏன் ஸம்ஹரிக்கவில்லை? ஒரு வேளை பாபிகள் செய்த பாபம் அப்பொழுதே பலிக்காது. பயிர்கள் வளர்வதற்குப் பல அனுகூலங்கள் ஒத்திருக்கவேண்டும். கர்மங்கள் பலிப்பதற்குக் காலமும் முக்யமான விஷயம். ராவண மரணம் நெருங்கினதால் நீ புத்தி கெட்டு இந்த மஹாபாபத்தைச் செய்திருக்கிறாய். ஆகையால் ராமன் உனக்கு மிருத்யுவாவர். தர்மத்தை விட்டு விலகாத மஹா கீர்த்திமானான ராமனுடைய பார்யை ராக்ஷஸனால் எடுத்துப் போகப்பட்டதைக் கேட்டு கைகேயியும் அவளைச் சேர்ந்தவர்களும் இப்பொழுதாவது ஸந்தோஷமடைவார்களா? ராமன் காட்டிற்குப் போனால் ஸீதை அவனுடன் போகாமலிருக்கமாட்டாள். அங்கிருக்கும் ராக்ஷஸர்கள் அவளை எடுத்துப் போவது நிச்சயம். அதனால் ராமன் உயிரை விடுவான். லக்ஷ்மணனும் பிழைத்திருக்கமாட்டான். ராஜ்யம் போட்டியில்லாமல் பரதனுக்கு நிலைக்குமென்ற அவளுடைய கெட்ட யோசனை எனக்குத் தெரியாதா?

ஜனஸ்தானத்திலுள்ள கோங்குமரங்களே! ராவணன் என்னை எடுத்துப் போகிறானென்று ராமனுக்குச் சீக்ரமாகத் தெரிவியுங்கள். மால்யவானென்ற மலையே! ராவணன் ஸீதையை எடுத்துப் போகிறானென்று ராமனுக்குச் சீக்ரமாகத் தெரிவியுங்கள். ஹம்ஸம் நீர்க்கோழி முதலிய பக்ஷிகளால் விளங்கும் கோதாவரி நதி தேவதையே! உன்னை வணங்குகிறேன். ராவணன் ஸீதையை எடுத்துப் போகிறானென்று ராமனுக்குச் சீக்ரமாகச் சொல். இங்குள்ள ஸகல விருக்ஷ தேவதைகளையும் வணங்குகிறேன்; எனக்கு

நேர்ந்த கஷ்டத்தை ராமனிடத்தில் சீக்ரமாகத் தெரிவியுங்கள். இந்த வனத்திலிருக்கும் ஸகல ஜந்துக்களையும் சரணமடைகிறேன். ராமனுக்கு ப்ராணனைக் காட்டிலும் ப்ரியமான நான் ராவணனால் அநாதையைப்போல் எடுத்துப்போகப் படுகிறேனென்று ராமனுக்குச் சீக்ரமாகத் தெரிவியுங்கள். ராவணனுக்குப் பயப்பட வேண்டாம். இவன் என்னை எந்த லோகங்களில் கொண்டுபோய் வைத்தாலும் யமனிடத்தில் ஒப்புவித்தாலும், ரகுவீரனுக்கு மாத்ரம் தெரிந்தால் தன் பராக்ரமத்தில் என்னை மீட்டு வருவார். ஆகையால் தவருமல் சொல்லுங்க"ளென்று தீனமாகப் புலம்பிக் கொண்டு போகையில் ஓரிடத்தில் ஜடாயுஸ் படுத்திருப்பதைக் கண்டாள்.

உடனே ராவணனுடைய வசத்திலிருந்ததாலும், துக்கத்தாலும், பயத்தாலும் வார்த்தைகள் குளற "என் பர்த்தாவிற்குப் பரம மித்ரனே! பாரும். இந்த மஹாபாவியான ராவணன் என்னை அநாதையைப்போல் எடுத்துப் போகிறான். தாங்கள் இவனைத் தடுத்த ப்ரயோஜனமில்லை. பல யுத்தங்களில் ஜயித்தவன்: கபட யுத்தஞ் செய்பவன்: ஆயுதபாணி: மஹாமாயாவி. ஆகையால் ராமலக்ஷ்மணர்களுக்கு இந்த விஷயத்தைப் பூர்ணமாகத் தெரிவிக்கும்படி ப்ரார்த்திக்கிறே"னென்றாள்.

—:o:—

## ஸர்க்கம் 50.

### ஜடாயுஸ் ராவணனைத் தடுத்தது

ச்ரம பரிஹாரத்திற்காகச் சற்று தூங்கிக்கொண்டிருந்த ஜடாயுவின் காதில் இந்த வார்த்தைகள்விழ, உடனே அவர் விழித்துக் கொண்டு பார்க்கையில், ராவணன் ஸீதையைத் தன் ரதத்தில் எடுத்துப் போவதைக் கண்டார். அவர் மலைச்சிகரத்தைப்போன்ற தேஹத்தையுடையவர். கூர்மையான மூக்கையும் நகங்களையும் ஆயுதங்களாயுடையவர். பக்ஷிகளுக்கெல்லாம் ராஜா. 'பகவானுக்

குக் கைங்கரியம் செய்யும் பாக்யத்தைப் பெற்றவர்களுக்குள் ச்ரேஷ்டர். அவர் மரத்திலிருந்தபடியே ராவணனுக்கு ஹிதமான வார்த்தைகளைச் சொன்னார். "தசமுக! ஆதிகாலம் முதல் ஸாதுக்களால் அனுஷ்டிக்கப்படும் பகவானுடைய கைங்கர்யத்தையே கதியாக நம்பியிருக்கிறேன். ஸத்யம் ஞானம் ஆனந்தம் முதலிய குணங்களால் விளங்கும் பரமாத்மாவே எனக்குப் பற்று; அவரை அடையும் உபாயமும் அவரே. நான் கழுகுகளுக்கெல்லாம் ராஜா; மஹாபலவான். என் பெயர் ஜடாயுஸ். ஸேவகனென என் ஸ்வரூபம் இதே.

"இனி என் ப்ரபுவின் ஸ்வரூபத்தைத் தெரிவிக்கிறேன். தசரத சக்ரவர்த்தியின் புத்ரனான ஸ்ரீராமன் ஸகல லோகங்களுக்கும் நாயகன். இந்த்ரன் வருணன் முதலிய திக்பாலகர்களுக்கு ஸமானன். ஸகல ப்ராணிகளின் ஹிதத்திலேயே நாடின மனமையுடையவன். ஆகையால் அவன் உனக்கும் ராஜாவென்பது நிச்சயம். நீ இப்பொழுது எடுத்துப்போக விரும்பும் ஸீதையோ அந்த லோகநாதனுடைய ப்ரிய பார்யை. அவன் அனுஷ்டிக்கும் தர்மத்தையே அனுஷ்டிப்பவள்; ரூபத்தாலும் குணத்தாலும் மிகுந்த கீர்த்தி பெற்றவள். ராமன் உனக்கு ப்ரபுவென்று நீ ஒப்புக்கொள்ளவேண்டாம். அவனை மனிதனாகப் பாவித்துப் பேசுவாய். அப்படியும் நீ செய்வது அதர்மம். நீயும் ராஜா, தர்மத்தைப் பரிபாலிக்க வேண்டியவன். பரஸ்த்ரீகளை எடுத்து வரலாமா? மேலும் உன்னைப்போன்ற அரசர்களின் மனைவிகளை ரக்ஷிக்கவேண்டியது உன் கடமையல்லவா? ராமன் அரசனென்று நீ எண்ணாவிட்டாலும் பரஸ்த்ரீகளை எடுத்துப் போவது அல்பமான செய்கையென்று உனக்குத் தெரியாதா? புத்திமான் பிறர் நிந்திக்கக்கூடிய கார்யத்தைச் செய்வானா? ஒருவன் தன் மனைவிகளை எப்படி ரக்ஷிப்பானோ அப்படியே மற்றவர்களுடைய மனைவிகளையும் ரக்ஷிக்க வேண்டும்.

சிலமுள்ள அரசர்கள் சாஸ்த்ரங்களில் விதிக்கப்படாத தர்மார்த்த காமங்களை விரும்பமாட்டார்கள். இந்த விஷயத்தில் ஸாதாரண ஜனங்கள் எப்படி நடந்துகொண்டாலும், அரசனான உனக்கு இது முற்றிலும் தகாது. உனக்காக இல்லாவிட்டாலும்

லோக ஜனங்களுடைய க்ஷேமத்தை உத்தேசித்தாவது நீ தர்மத்தி லிருந்து விலகலாமா? தர்மாத்த காமங்களுக்கும் ராஜா இருப் பிடம். தர்மா தர்மங்களை அரசன் அனுஷ்டிக்கிறபடியே ப்ரஜை களும் அனுஷ்டிப்பார்கள். ஆகையால் அரசன் எப்பொழுதும் பாபத்தை விலக்கித் தர்மத்தையே நடத்திக் காட்டவேண்டும். மேலும், பரஸ்த்ரீகளை அபஹரிப்பது ஐச்வர்யத்தை நாசஞ் செய்யும். பாபத்தைச் செய்யும் ஸ்வபாவமுள்ளவனாகவும் விஷய ஸுகங்களில் முழுகினவனாகவுமிருக்கும் நீ, பாபிக்குத் தேவவிமானம் கிடைப் பதுபோல், எல்லையற்ற ஐச்வர்யத்தை அடைந்தாய். இப்படி அதர்மத்திலேயே மனஸைச் செலுத்தினால் அதுவும் சீக்ரமாக அழி யும். நான் உனக்கு எவ்வளவு தூரம் ஹிதோபதேசஞ் செய்தும் நீ ஸீதையை விடவில்லை. ஆசை உனக்குத் தேஹத்துடன் பிறந்த தால் அதை ஒழிக்க முடியுமா? ஆகையால் கெட்டவனான உனக் குச் செய்த நல்ல உபதேசம் உன் மனஸில் படாது. மனிதன் புண்யத்தால் ஐச்வர்யத்தை அடைகிறான். பாபி ஒருக்கால் புண் யஞ் செய்தாலும் அதன் பயனை வெகுகாலம் அனுபவிக்கமாட் டான். சத்ருவின் மனைவியை அபஹரிப்பது என் ஸ்வபாவ மென்றால், மஹாபலவானும் தர்மாத்மாவுமான ராமன் உன் ராஜ் யத்திலாவது ராஜதானியிலாவது எவனுக்கு என்ன அபஹாரஞ் செய்தான்? ஒன்றுமில்லை. அப்படியிருக்க, அவனுக்கு ஏன் கெடுதி செய்ய நினைக்கிறாய்? 'கரனைக் கொன்றது எனக்குச் செய்த கெடுதியல்லவா'வென்றால் சூர்ப்பநகைக்காகக் கரன் ராம னிடத்தில் சண்டைக்குப் போனான். எல்லைமீறி நடந்தபடியால், பிறர்க்கு ஹிம்ஸை செய்வதை அறியாத ராமனே அவனைக் கொன்றான். நன்றாக யோசித்துப் பார். ராமன் உனக்குச் செய்த கெடுதி என்ன? உண்மையைச் சொல். லோகநாதனான ராமனுடைய மனைவியை நீ எடுத்து வர ஏதாவது ந்யாயமுண்டா!?

ஸீதையை இப்பொழுதே விடு; இல்லாவிட்டால் முன்பு இந்த்ரன் வஜ்ராயுதத்தால் விருத்ரனைக் கொன்றதுபோல், உன்னை ராமன் கோபப்பார்வையாலேயே எரித்துவிடுவான். மஹா கொடிய விஷமுள்ள ஸர்ப்பத்தை வஸ்த்ரத்தின் நுனியில் முடிந்து தோளில் போட்டுக்கொண்டு கவலையற்றிருக்கிறாயே! கழுத்தில் யமபாசம் விழுந்திருக்கையில் உனக்குக் கொஞ்சமாவது பயமில்

லேயே! ஒருவன் தான் தூக்கக்கூடிய பாரத்தையல்லவா தூக்க வேண்டும்? தனக்கு கெடுதி செய்யாமல் ஜீர்ணமாகக்கூடிய அன்னத்தை யல்லவா தின்ன வேண்டும்? தர்மமாவது கீர்த்தியாவது ஸுகமாவது கிடைக்காமல், தேஹப்ரயாஸமும் சாவும் மாத்ரம் நிச்சயமாகக் கிடைக்கும் கார்யத்தை எந்தப் புத்திமானவது செய்வானு?

"நான் வயஸ்சென்றவனென்று என்னை அலக்ஷ்யஞ் செய்யாதே. நான் பிறந்து அறுபதாயிரம் வர்ஷங்களாயின. அவ்வளவு காலம் என் ப்ரஜைகளை ஜாக்ரதையாகக் காப்பாற்றினதால் தேஹத்தில் ச்ரமம் மேலிட்டிருக்கிறது. எனக்கு ஆயுதங்களில்லை. நீயோ யௌவன புருஷன்; வில் அம்பு கவசம் ரதம் முதலிய யுத்த ஸாமான்களுடன் இருக்கிருய். ஆனுலும் ஸீதையை எடுத்துக்கொண்டு அபாயமில்லாமல் போகலாமென்றெண்ணுதே. வேதவாக்யங்கள் இயற்கையாகவே ப்ரமாணம். அவைகளைத் தர்க்க சாஸ்த்ரத்திலுள்ள அனுமானங்களால் விபரீதமான அர்த்தங்களைக் கொடுக்கும்படி ஒருவன் வ்யாக்கியானஞ்செய்வதை, வேதங்களையும் அவைகளின் கருத்தையும் பூர்ணமாக அறிந்தவன் பார்த்துக்கொண்டு சும்மா இருப்பானு? அப்படி வேதவாக்யங்களைத் தூஷிக்கிறவன் தானே அழிவான். அவைகளுக்கு ஏதாவது குறைவுண்டோ? ஸீதை அந்த வேதச்ருதியைப் போன்றவள்; நான் அவளுடைய மஹிமையைப் பூர்ணமாக அறிந்தவன். உன்னைப்போன்ற அயோக்யன் அபஹரிப்பதைப்பார்த்துக் கொண்டு சும்மா இருப்பேனே? (இங்கே ராமாயணத்தின் தத்வார்த்தம் வெகு ஸூக்ஷ்மமாகக் குறிக்கப்படுகிறது.) ஸீதையால் உனக்கு நாசமேயொழிய உன்னுல் அவளுக்கு யாதொரு குறைவும் நேராது. நீ சூரனுனல் சற்று நேரம் பொறுத்திரு. ராமன் வருவார். அவருடன் யுத்தஞ்செய். உன் பந்துவான கரன் அவரை எதிர்த்து மடிந்ததைப்போல் நீயும் பிணமாகப் பூமியில் கிடப்பாய். அதற்குத் தைர்யமில்லாவிட்டால் என்னுடன் யுத்தஞ் செய். இதுவரையில் தேவ தானவ தைத்யர்களைப் பல தடவை யுத்தத்தில் ஜயித்துத் துன்பப்படுத்தியிருக்கிருயல்லவா? அவர்களுக்கு நாதனுன ராமன் உன்னை அதற்காகவும் தண்டிக்க ந்யாயமுண்டு. மரவுரியையும் மான்தோலையும் தரித்த அந்த

ராமசந்த்ரனே உன்னை யுத்தத்தில் கொல்வார். அந்த ராஜபுத்ரர்கள் இப்பொழுது வெகு தூரத்திலிருக்கிறார்களே. அவர்களை எப்படி அழைத்துவர முடியும்? அவர்களுக்குப் பயந்தே நீ ஒளிந்து ஓடுகிறாயென்று எனக்கு நன்றாகத் தெரிகிறது. இதிருக்கட்டும். ரகுவீரனுக்கு ப்ரியமான மனைவியும் ஸகல லோகங்களிலும் நிகரற்ற ரூபவதியுமான ஸீதையை நான் உயிரோடிருக்கும் பொழுது நீ எடுத்துப்போக முடியுமா? என் மித்ரனை தசரதரை நினைத்தும் மகாத்மாவான ராமனுக்காகவும் என்னுயிரைக் கொடுத்தாவது அவர்களுக்கு அபாயம் நேராமல் கார்க்கவேண்டும். ஓடாதே. நில். பத்துத் தலைகளும் இருபது கைகளு மிருக்கின்றனவென்ற தைர்யமா? நீ எனக்கு ப்ரியமான அதிதியல்லவா? உன்னுடன் யுத்தஞ் செய்வதே உனக்கு நான் செய்யும் அதிதிபூஜை. என்னுயிர் உள்ளவரையில் உன்னை விடுவதில்லை. உன் பத்துத் தலைகளையும் பனங்காய்களைப்போல் அறுத்துத் தள்ளுகிறேன், பார்”ரென்றார்.

—:o:—

## ஸர்க்கம் 51.

## ஜடாயு ராவண யுத்தம்

ந்யாயமான வார்த்தைகளை ஜடாயுஸ் இப்படிச் சொல்ல, ராவணனுடைய இருபது கண்களும் கோபத்தால் நெருப்புக் கொழுந்தைப்போல் ஜ்வலித்தன. அந்த வார்த்தைகளைப் பொறுக்காமல் ஜடாயுஸின்மேல் பாய்ந்தான். எதிர்க்காற்றால் அடிக்கப்பட்ட இரண்டு மஹா மேகங்கள் தாக்கினதுபோலும் மால்யவானென்ற மலைகள் ஒன்றோடொன்று மோதினதுபோலும் ராவணனும் ஜடாயுஸும் அந்த வனத்தில் கோரமான யுத்தஞ் செய்தார்கள். (தண்டகாரண்யத்திலும் கிஷ்கிந்தைக்குப் பக்கத்திலும் மால்யவானென்ற பெயருள்ள இரண்டு மலைகளுண்டு) பிறகு அந்த ராக்ஷஸன் நாளீக நாராச விகர்ணி முதலிய கூர்மையான பாணங்களை ஜடாயுஸின்மேல் பொழிந்தான். அவர் அவைகளை இறக்கைகளால் அடித்துத் தள்ளி, தன் கூர்மையான நகங்களாலும் கால்களாலும் ராவணனுடைய தேஹத்தைக் கீறிப் பிளந்தார்.

ராவணன் அவரைக் கொல்ல நினைத்து, காலதண்டம் போன்ற கூர்மையான பத்துப் பாணங்களால் அவரைப் பிளந்தான். ஸீதை கண்ணும் கண்ணீருமாய் ரதத்தில் தவிப்பதை அவர் கண்டு, அந்தப் பாணங்களைக் கொஞ்சங்கூட லக்ஷ்யம் செய்யாமல் ராவணன் மேல் பாய்ந்து, அவனுடைய வில்லையும் பாணத்தையும் கால்களால் அடித்து முறித்தார். உடனே ராவணன் கடுங்கோபங் கொண்டு வேறொரு வில்லை எடுத்து ஆயிரம் பதினாயிரம் பாணங் களைப் பொழிந்தான். கூடு கட்டினதுபோல் அவை அவரை மறைத்தன. அவர் அவைகளை இறக்கைகளால் அடித்துத் தள்ளி அந்த வில்லையும் காலால் முறித்தார். அக்னியைப்போல் ஜ்வலிக்கும் அந்த ராக்ஷஸனுடைய திவ்ய கவசத்தை இறக்கைக் காற்றால் பிளந்து தள்ளினார். தங்கக் கவசங்களணிந்து பிசாசமுகங்களுடன் ரதத்தில் பூட்டியிருக்கும் அதிவேகமான கோவேறு கழுதைகளைக் கொன்று, அந்த ரதத்தையும் தூளாக்கி, குடைகளையும் சாமரங்களையும் அவைகளைப் பிடித்திருந்த ராக்ஷஸர்களையும் கொன்று, ஸாரதியின் தலையைக் கடித்தெறிந்தார். வில்லொடிந்து குதிரைகள் இறந்து ஸாரதி மடிந்து ரதமின்றி, ராவணன் ஸீதை யைத் தூக்கிக்கொண்டு கீழே குதித்தான். அப்பொழுது ஸகல ப்ராணிகளும் ஜடாயுவைக் கொண்டாடின. வயஸாலும் ச்ரமத் தாலும் இளைத்திருப்பதை ராவணன் அறிந்து ஸந்தோஷமடைந் தான். உடனே ஸீதையைத் தூக்கிக்கொண்டு ஆகாசத்தில் கிளம்பினான். அதைப் பார்த்து அந்தப் பக்ஷிராஜன் பறந்து அவனை வழிமறித்து, "மூடா! வஜ்ரத்தைப்போன்ற பாணங்களை விடும் ரகுவீரனுடைய மனைவியை எடுத்துப் போகப்பார்க் கிறாயோ? ராக்ஷஸ குலத்திற்கு நாசகாலம் நெருங்கினது போலிருக்கிறது. தாஹமெடுத்தவன் பானகத்தை அளவில்லாமல் குடிப்பதுபோல், நீயும் உன் மித்ரர்களும் பந்துக்களும் மந்த்ரிகளும் ஸைன்யங்களும் பரிவாரங்களும் விஷங்கலந்த பானத்தை அள வில்லாமல் குடிக்கிறீர்கள். கார்யங்களின் பயனை அறியாமல் நினைத்தபடி செய்கிறவர்கள் அதிசீக்ரத்தில் அழிவார்கள். அதற்கு நீயே திருஷ்டாந்தம். தூண்டிமுள்ளை விழுங்கின மீன் பிழைக்குமா? காலபாசத்தால் கட்டுப்பட்ட நீ ராமனிடத்தி லிருந்து தப்ப முடியுமா? ராம லக்ஷ்மணர்களில்லாதபொழுது அவர்களின் ஆச்ரமத்திலிருந்து நீ ஸீதையை எடுத்துப்போனதை

அந்த வீரர்கள் மன்னிப்பார்களென்று எண்ணினையோ? திருட்டுப் பயலைப்போல் பயந்து ஒளிந்து எல்லோரும் நிந்திக்கத் தக்க காரியத்தைச் செய்தாயே. இது வீரனுக்கு அழகா? சற்றுநேரம் பொறு. ராமன் வருவார். திறமையிருந்தால் அவருடன் யுத்தஞ் செய். உன்னுடன் பிறந்த கரனைப்போல் நீயும் உயிரற்றுப் பூமியில் கிடப்பாய். ஒருவனுக்கு ஆயுஸ் குறுகி அதற்குத் தகுந்த எந்தப் பாபத்தைச் செய்வானோ அதை நீ இப்பொழுது செய்திருக்கிறாய். லோகங்களுக்கு அதிபதியும் ஸ்வயம்புவுமான பகவானும் பாபபலத்தைக் கொடுக்கக்கூடிய கர்மத்தைச் செய்யத் துணிவரா" வென்று இப்படிப் பரமஹிதமான வார்த்தைகளைச் சொல்லிக் கொண்டிருக்கையில், ராவணன் ஓடுவதைக் கண்டு, ஜடாயுஸ் அவனைப் பின்தொடர்ந்து, அவன் முதுகில் குத்தி, மதம் பிடித்து ஓடும் யானையைப் பாகன் அங்குசத்தால் குத்தித் திருப்புவது போல், தன் கூர்மையான நகங்களால் தேஹமெங்கும் கீறிப் பிளந்தார். அவனுடைய தலைமயிரைப் பிடுங்கி முதுகில் கூர்மையான மூக்கைப் பதித்து மாம்ஸங்களைக் கடித்திழுத்தார். அந்த வேதனையைப் பொறுக்க முடியாமல் ராவணன் உதடு துடிக்க, கோபத்தால் தேஹம் நடுங்க, அவருடன் யுத்தஞ்செய்யத் திரும்பி, ஒரு கையால் ஸீதையைப் பிடித்துக்கொண்டு மற்றொரு கையால் ஜடாயுஸை அறைந்தான். அவர் திரும்பி அவனைப் பிடித்து, பத்துக்கைகளையும் கடித்தெறிந்தார். புற்றிலிருந்து மஹாஸர்ப்பங்கள் விஷ ஜ்வாலையுடன் கிளம்புவதுபோல், அறுபட்ட கைகள் முளைத்தன. பிறகு அந்த ராக்ஷஸன் ஸீதையை விட்டு முஷ்டிகளாலும் கால்களாலும் ஜடாயுஸை அடித்து உதைத்தான். அப்பொழுது ராக்ஷஸ ராஜனுக்கும் பக்ஷி ராஜனுக்கும் ஒரு முஹூர்த்தம் வரையில் கோரமான யுத்தம் நடந்தது. அதன் முடிவில் ராவணன் ஸமயம் பார்த்து, ரகுவீரனுக்காக யுத்தஞ் செய்யும் ஜடாயுஸின் இறக்கைகளையும் சிறகுகளையும் கால்களையும் கூர்மையான கத்தியால் வெட்டித் தள்ளினான். ஜடாயுஸ் குற்றுயிருடன் பூமியில் விழுந்தார். வெளுத்த மார்புடன் கறுத்த மேகத்தைப் போலும், அணைந்த காட்டுத் தீயைப்போலும் அந்த மஹாவீரன் அடிப்பட்டுக் கிடப்பதைப் பார்த்து ராவணன் ஸந்தோஷித்தான். ஸீதையோ தன் பந்துக்களெல்லாம் இறந்தது போல் துக்கமடைந்தாள். ராவணனுடைய புஜபலத்தால்

கொல்லப்பட்டுத் தாரை தாரையாய் ரக்தத்தைப் பெருக்கிக் கொண்டு ஜடாயுஸ் விழுந்து கிடக்குமிடத்திற்கு ஓடி அவரை இறுகத் தழுவிக்கொண்டு கோவென்றலறினள்.

—:o:—

## ஸர்க்கம் 52.

### ஸீதாஹரணம்

"கண் துடிப்பது முதலிய குறிகளும், காக்கை முதலிய பறவைகள் கத்துவதும், இன்னும் மற்றச் சகுனங்களும் அப சகுனங்களும் மனிதருக்கு நேரும் ஸுக துக்கங்களைக் குறிக் கின்றனவல்லவா? ராம! எனக்கு நேர்ந்த கஷ்டத்தைத் தெரிவிக்க மிருகங்களும் பக்ஷிகளும் நீர் இருக்குமிடத்தை நோக்கி ஓடு கின்றனவே. ஆகையால் அதிவேகமாக வந்து என்னைக் காப் பாற்றும். இந்தத் துஷ்டனிடத்திலிருந்து என்னை மீட்க உமது மித்ரனான பக்ஷிராஜன் தன்னால் இயன்றமட்டும் அவனுடன் யுத்தஞ்செய்து அடிபட்டுப் பூமியில் கிடக்கிறார். ஹா ராம! ஹா லக்ஷ்மண! ஓடிவந்து என்னை ரக்ஷியுங்க"ளென்று பயத்தால் நடுங்கி, அவர்கள் வெகுதூரத்தி லிருப்பதை மறந்து ஸமீபத்தி லிருப்பதுபோல் நினைத்துக் கூவினள்.

வஸ்த்ரங்களும், ஆபரணங்களும், அலங்கோலமாகச் சிதற, ஜடாயுவைக் கட்டிக்கொண்டு ப்ரலாபிக்கும் ஸீதையை நோக்கி ராவணன் ஓடிவந்து, அவள் வேரற்ற கொடியைப்போல் பூமி யில் விழுந்து புரளுவதையும், பெரிய மரங்களை இறுகப் பிடித்துக் கொள்வதையும் பார்த்து, 'அவைகளை விடு விடு' என்று பல தடவை அதட்டினன். அவள் அவனைக் கவனிக்காமல் மனித ஸஞ்சாரமில்லாத அந்த வனத்தில் 'ராம ராம' வென்று கதறிக் கொண்டிருக்கையில், யமன் ப்ராணிகளைப் பாசத்தால் இழுப்பது போல், அவளுடைய தலைமயிரைப் பிடித்திழுத்தான். தன் ஆயு ளையும் ஐச்வர்யத்தையும் கீர்த்தியையும் அதிகாரத்தையும் குலத் தையும் வேரறுத்தான்.

இப்படி ஸீதையைப் பலவந்தஞ் செய்வதைக் கண்டு ஸகல ப்ராணிகளும், ஸகல வஸ்துக்களும், தங்கள் தங்கள் ஸ்வபாவத்தையும், ஸ்வரூபத்தையும் இழந்தன. அக்ஞானமென்ற இருள் லோகமெங்கும் பரவிற்று. காற்றடிக்கவில்லை. ஸூர்ய ப்ரகாசம் மறைந்தது. ஸீதையை ராவணன் இப்படிப் பலவந்தஞ் செய்து ஹிம்ஸிப்பதை, ப்ரஹ்மா ஞானதிருஷ்டியால் பார்த்து ஸந்தோஷப்பட்டுப், "பகவான் ப்ரதிக்ஞை செய்த கார்யம் முடிந்தது"ன்றார். தண்டகாரண்யத்தில் வஸிக்கும் மஹர்ஷிகள் ஸீதை அப்பொழுது படும் துக்கத்தைப் பார்த்துப் பரிதபித்தார்கள். ராவணன் தானாகவே தன் நாசத்தைத் தேடிக்கொண்டதைப் பற்றி ஸந்தோஷித்தார்கள்.

'ஹா ராம! ஹா லக்ஷ்மண' வென்று அவள் கதறிக்கொண்டிருக்கையில் அந்த ராக்ஷஸன் அவளை தூக்கியெடுத்து ஆகாச மார்க்கமாகக் கொண்டுபோனான். மை மலையைப்போல் கறுத்த சரீரத்தையுடைய ராவணன், சுத்தமான தங்கத்தைப் போன்ற தேஹகாந்தியுடன் விளங்கி, வெண்பட்டால் அலங்கரிக்கப்பட்ட ஸீதையை எடுத்துப் போகும்பொழுது, ஆகாசத்தில் கறுத்த மேகத்தில் பாயும் மின்னலைப்போல் தோன்றினான். அவளுடைய ஆடைகள் காற்றால் அடிக்கப்பட்டு ராவணன்மேல் புரண்டன; நெருப்புக் கொழுந்துகளால் சூழப்பட்ட மலைச் சிகரத்தைப்போல் அதிகமாக விளங்கினான். அவள் அணிந்த தாமரை மலர்களிலிருந்து இதழ்கள் உதிர்ந்து, "இப்படியே உன் ஐச்வர்யம் சிதறு"மென்று காட்டுவதுபோல் ராவணனுடைய மடியில் விழுந்தன. தங்கத்தைப்போல் ப்ரகாசிக்கும் அவளுடைய மேலாடை, நடுப்பகலில் ஸூர்யப்ரகாசத்தில் தாமிர நிறமாகக் காணப்படும் மேகங்களைப்போலிருந்தது. ஸீதை ராவணனுடைய மடியில் உட்கார்ந்திருக்கையில் அவளுடைய முகம் காம்பறுந்த தாமரைமலரைப் போல் விளங்கவில்லை. ஸூர்யனுக்கு ஸமமான தேஜஸும் பராக்ரமமும் வாய்ந்த ராமனுடைய கடாக்ஷமிருந்தாலல்லவா, அவளுடைய முகமான தாமரை மலரும் அழகிய நெற்றியும் தலைமயிரும் பொருந்திக் கமலத்தைப்போன்ற நிறத்துடன் வெண்மையாக ப்ரகாசிக்கும்? நிர்மலமான பல்வரிசையால் அலங்கரிக்கப்பட்ட ஸீதையின் முகமண்டலம் ராவணனுடைய ஸமீபத்திலிருக்கையில்,

கறுத்த மேகங்களில் புகுந்து வெளிப்படும் சந்த்ரனைப்போல் காணப்பட்டது. உத்தம லக்ஷணங்கள் பொருந்தின ஸீதையின் முகம் தாரைதாரையாகச் சொரியும் கண்ணீரைத் துடைக்காமல் அழுக்கடைந்து, ராமன் ஸமீபத்திலில்லாமல் ராவணனுடன் காணப்படும்பொழுது, பகலில் உதித்த சந்த்ரனைப்போல் தோன்றிற்று. கறுத்த சரீரத்தையுடைய ராக்ஷஸனால் கொண்டுபோகப் படும் தங்கவர்ணமுள்ள ஸீதை, நீலரத்னங்கள் கோர்த்த தங்க சரட்டைப்போலும், மேகங்களுக்கு நடுவில் ப்ரகாசிக்கும் மின்னலைப்போலும், யானைக்குக் கட்டிய தங்கச் சங்கிலியைப் போலும் தோன்றினாள். ஸீதையின் ஆபரணங்கள் சப்திக்கும் பொழுது ராவணன் நீருண்ட மேகம் கர்ஜிப்பதுபோல் காணப் பட்டான். அவளுடைய தலையில் அணிந்திருக்கும் புஷ்பங்கள் சிதறிப் பூமியில் நான்கு புறத்திலும் விழுந்தன. ராவணன் போகும் வேகத்தாலுண்டான காற்று அந்தப் புஷ்பங்களை அவ் விடத்தில் இழுக்கையில், நிர்மலமான நக்ஷத்ர மாலைகளால் சூழப் பட்ட மேருமலையைப்போல் விளங்கினான். ஸீதையின் காலில் போடப்பட்ட ரத்னங்களிழைத்த தண்டைச் சலங்கைகள் அங் கிருந்து கழன்று மதுரமான சப்தத்துடன் மின்னலைப்போல் பூமி யில் விழுந்தன. தன் தேஜஸால் ஜ்வலிக்கும் ஸீதையை ராவணன் ஆகாசமார்க்கத்தில் எடுத்துக்கொண்டு போகையில், அரசர்களுக் குப் பெரிய அனர்த்தத்தைத் தெரிவிக்கும் குறைக்கொள்ளி ஆகா சத்தில் தோன்றினதுபோலிருந்தது. நெருப்புப் பொறியைப் போன்ற ஸீதையின் ஆபரணங்கள் கழன்று பூமியில் விழுகை யில், நக்ஷத்ரங்கள் பெரிய ஓசையுடன் பூமியில் உதிர்வதுபோலி ருந்தது. அவள் மார்பில் தரித்த சந்த்ரனைப்போல் ப்ரகாசிக்கும் ஹாரம், நழுவிப் பூமியில் விழும்பொழுது கங்கை ஆகாசத்திலி ருந்து பூமியில் விழுவதுபோல் தோன்றிற்று.

ராவணனுடைய வேகத்தாலுண்டான காற்று மரங்களில் அடித்து அவைகளின் கிளைகளை அங்குமிங்கும் அசைத்து அவை களிலிருந்த பக்ஷிகள் பயத்தால் கூவும்பொழுது, அந்த மரங்கள் பயப்படாதேயென்று தலையை அசைத்துக்கொண்டு ஸீதைக்குத் தைர்யஞ் சொன்னதுபோல் காணப்பட்டன. ஓடைகளில் தாமரை கள் காந்தியற்று மீன் முதலிய ஜலஜந்துகள் பயந்திருப்பதைப்

பார்க்கும்பொழுது, துக்கத்தால் மூர்ச்சையடைந்திருக்கும் தங்கள் அருமைத் தோழியான ஸீதைக்கு நேர்ந்த கஷ்டத்தால் வருந்துவதுபோலிருந்தது. ஸிம்ஹம் புலி மான் பக்ஷிகள் முதலியவைகளும் நான்கு பக்கங்களிலிருந்தும் ஓடிவந்து ராவணனுடைய நிழலைப் பார்த்துக் கோபங்கொண்டு அவனைப் பிடிக்கத் தாவிக் குதித்துப் பின்தொடர்ந்தன. காட்டாறுகள் பெருகும் உன்னதமான சிகரங்களுள்ள மலைகள், ராவணன் ஸீதையை எடுத்துப் போவதைப் பார்த்துத், தாரை தாரையாகக் கண்ணீர் பெருகக் கைகளைத் தூக்கிக் கோவென்று அலறுவதுபோல் காணப்பட்டன. ஸூர்யனும் அந்த அக்ரமத்தைப் பார்த்துப் பொறுக்காமல் வெளுத்துக் காந்தியிழந்தான். "லோகத்தில் தர்மமும் ஸத்யமும் நேர்மையும் இரக்கமும் அழிந்தன. இல்லாவிட்டால் ராமனுடைய ப்ரிய பார்யையும் விதேஹ ராஜபுத்ரியுமான ஸீதையை ராவணன் எடுத்துப் போவானு"வென்று ஸகல ப்ராணிகளும் கூட்டங் கூட்டமாக ப்ரலாபித்தன. மான்குட்டிகள் பயந்து தீனமாகக் கதறி ஸீதையைப் பார்த்துப் பார்த்துக் கண்ணீருதிர்த்தன. ஸீதை துக்கம் தாங்காமல் அலறுவதைப் பார்த்து வனதேவதைகளுக்கும் நடுக்கமுண்டாயிற்று. தலைமயிர் அவிழ்ந்து திலகம் அழிந்து பூமியில் நான்கு புறத்திலும் பார்த்துக்கொண்டு, ஹா ராம! ஹா லக்ஷ்மணவென்று ஸீதைக் கதறிக்கொண்டிருக்கையில், ராவணன் அதைக் கொஞ்சங்கூடக் கவனிக்காமல், தன் ம்ருத்யுவைத் தேடி அழைத்துக்கொண்டு போவதைப்போல், அவளை எடுத்துப் போனான். அப்பொழுது தன் பந்துக்களும் நண்பர்களுமில்லாமல் ராமலக்ஷ்மணர்களையும் காணாமல் ஸீதை பயந்து முகம் வெளுத்துத் தைர்யமிழந்தாள்.

—:o:—

## ஸர்க்கம் 53.

## ஸீதை ராவணனை நிந்தித்தது

கோபத்தாலும் அழுகையாலும் கண்கள் சிவந்து துக்கம் மேலிட்டுப் பயத்தால் நடுங்கிக்கொண்டு, ஸீதை ராவணனைப் பார்த்து "ராமலக்ஷ்மணர்கள் இல்லாத ஸமயத்தைத் தேடித்

திருட்டுத்தனமாக என்னை எடுத்துக்கொண்டு ஒடுகிருயே. சீச! உனக்கு வெட்கமில்லையா? என்னை எடுத்துப் போகவேண்டு மென்ற ஆசைகொண்டாயல்லவா? அவர்கள் இருக்கும்பொழுது ஸமீபத்தில் வரத் துணிந்தாயா? நீயே மாயையால் அந்தப் பொன் மானை உண்டாக்கி ராமலக்ஷ்மணர்களை அப்புறப்படுத்தினயென்று எனக்கு நன்ருகத் தெரியும். என் மாமனருக்கு வெகு காலமாக ப்ரிய மித்ரனை ஜடாயுஸும் என்னைக் காப்பாற்றத் தன்னல் கூடியவரையில் முயன்றும் அடித்துக் கொல்லப்பட்டார். உன் பெயரையும் குலத்தையும் கோத்ரத்தையும் கீர்த்தியையும் என் னிடத்தில் பெருமையாகச் சொல்லிக்கொண்டாயே! என்னுடன் யுத்தஞ் செய்து ஜயித்த நீயல்லவா வீரன்! உன் பராக்ரமத்தை என்னென்று சொல்வேன்! பரஸ்த்ரீயை அவளைச் சேர்ந்தவர்களில் லாத வேளையில் திருட்டுத்தனமாக எடுத்துப் போயும் கொஞ்ச மாவது உனக்கு வெட்கமில்லையே! மிகுந்த பல பராக்ரமுள்ளவ னென்று இந்த இழிவான கார்யத்தைச் செய்த உன்னை ஜனங் கள் என்றைக்கும் துஷ்டனென்றும் க்ரூரனென்றும் பாபியென் றும் சொல்வார்கள். என்னை எடுத்து வருவதற்கு முன் 'பூமி யைத் தூக்குவேன், ஸமுத்ரத்தைக் குடிப்பேன், சந்த்ர ஸூர்யர் களைத் தடுப்பே'னென்று பலவிதமாகச் சொல்லிக்கொண்ட வீண் பெருமையெல்லாம் இப்பொழுது எங்கே போயிற்று? சீ சீ! நீயும் ஒரு ப்ராணியா? ராக்ஷஸ குலத்திற்கே நீங்காத அவமா னத்தை உண்டுபண்ணின உன் நடத்தையை என்னென்று சொல் வேன்! சீ சீ! இப்படி வேகமாக நீ ஓடினல் உன்னை என்ன செய்ய முடியும்? ஒரு முஹூர்த்தம் இங்கே நில். நீ உயிருட னிருப்பதைப் பார்ப்பேன். ராமலக்ஷ்மணர்களின் கண்ணில் பட்ட பிறகு நீயும் உன் ஸைன்யமும் உன் பந்துக்களும் ஒரு முஹூர்த் தங்கூடப் பிழைத்திருக்கமாட்டீர்கள். அவர்களுடைய பாண வேகத்தை உன்னல் தடுக்க முடியுமா? காட்டுத்தீ கோரமாக எரி யும்பொழுது சிறு பக்ஷிகள் அதில் விழுந்து தப்புமா? உனக்கு க்ஷேமத்தை விரும்பினல் என்னை விட்டுவிடு. யோசித்துப் பார்த் தால் நான் சொல்லுவது உனக்கு ஹிதமென்றே தெரியும். நீ என்னை விடாவிட்டால் என் கணவனும் அவருடைய தம்பியும் கோபங்கொண்டு உன்னைக் கொல்வார்கள். சீச! இவ்வளவு ச்ரமப்பட்டு என்னைப் பலவந்தஞ் செய்யப் பார்க்கிருயே!

உன் முயற்சியெல்லாம் வீணுகுமேயொழிய வேறல்ல. தேவர்களைப் போன்ற ரூபத்தையும் பராக்ரமத்தையும் படைத்த ரகுவீரனை விட்டுப் பிழைத்திருப்பேனு? அவருக்குச் சத்ருவான உன்னிடத்தில் கட்டுப்பட்டிருப்பேனு? ஒருவனுக்கு ஆயுஸ் குறைந்தபொழுது பத்யமில்லாத அபாயகரமானவைகளைத் தின்று எப்படி மரணமடைவானே, அப்படி உனக்கு எது ஹிதமென்றும் கீர்த்தியைக் கொடுக்குமென்றும் நீ அறியாமலிருக்கிருய். காலம் குறுகினவர்களுக்கு ஹிதமான விஷயங்களில் வெறுப்புண்டாகும். பார்க்கையில் பயமுண்டாகவேண்டிய விஷயத்தில் உனக்குப் பயமில்லாததைப் பார்த்தால் உன் கழுத்தில் காலபாசம் விழுந்து விட்டதென்று சொல்லவும் வேண்டுமா? தங்கநிறமுள்ள மரங்களும் ரக்த வெள்ளம் ஓடும் கோரமான வைதரணீ நதியும் பயங்கரமான அஸிமத்ரமென்ற வனமும் உன் கண்ணிற்குத் தோன்றுகின்றனவென்று எண்ணுகிறேன். கூர்மையான இரும்பு முள்ளுகளுடன் தங்க புஷ்பங்களாலும் வைடூர்ய இலைகளாலும் விளங்கி பழுக்கப் பழுக்கக் காய்ந்து கொதித்துக்கொண்டிருக்கும் கால்மலிமரம் உனக்குத் தெரிகிறதா? (பரஸ்த்ரீகளைப் பலவந்தஞ் செய்கிறவர்கள் நரகத்தில் இந்த மரங்களைத் தழுவவேண்டியதென்று புராணங்கள் சொல்லுகின்றன. இந்தக் கருத்தை திருமங்கையாழ்வார், பெரிய திருமொழி, 1-ம் பத்து, 6-ம் திருமொழி 4-ம் பாசுரத்தில் "வம்புலாங்கூந்தல் மனைவியைத் துறந்து, பிறர் பொருள் தாரமென்று இவற்றை நம்பினர் இறந்தால், நமன் தமர் பற்றி எற்றிவைத்து, எரியெழுகின்ற செம்பினுலியன்ற பாவையைப், பாவீ! தழுவென மொழிவதற்கஞ்சி, நம்பனே வந்துன் திருவடியடைந்தேன், நைமிசாரண்யத்துள் எந்தா" யென்று அருளிச் செய்தார்.) பிறகு வருவதைப் பார்த்துக்கொள்வோம்; இப்பொழுது கிடைக்கும் ஸுகமேபெரிதென்று நினைக்கிருயோ? மஹாத்மாவான ராகவனுடைய கோபத்திற்கு ஆளாகி எவ்வளவு காலம் பிழைத்திருப்பாய்? கொடிய விஷத்தைக் குடித்து ஒருவன் வெகு காலம் பிழைத்திருப்பதைப் பார்த்ததுண்டா? என் பர்த்தா உன்னைக் காலபாசத்தால் கட்டிவிட்டார். அதிலிருந்து உன்னை மீட்பவரில்லை. எங்கே போய் நீ க்ஷேமப்படுவாய்? ஜனஸ்தானத்தில் பதினுலாயிரம் ராக்ஷஸர்களும் கரதூஷணர்களும் என் ராமனுடைய பாணங்களுக்கு இரையான

தைப் பார்க்கவில்லையோ? அவருக்கு எவ்வளவு நேரம் பிடித்தது? எந்த வாஹனத்தில் ஏறியிருந்தார்? லக்ஷ்மணன் ஒத்தாசை செய்தாரா? அப்படியிருக்க அவருக்கு உயிருக்குயிரான பத்னியை எடுத்துப்போன உன்னை அந்த மஹாவீரன் தன் கூர்மையான பாணங்களுக்கு இரையாக்கமாட்டாரா? அவருக்குத் தெரியாத அஸ்த்ரங்களுமுண்டா? அவருடைய பலபராக்ரமத்தை அளவிட முடியுமா"வென்று கடுமையாயும் தீனமாயும் கண்டித்து ப்ரலாபித்தாள்.

அவையெல்லாம் ஸமுத்ரக் கரையில் இரைந்ததைப்போல் அந்த மஹாபாபியின் காதில் நுழையவில்லை. இப்படிக் கேட்பவர்களின் மனஸ் உருகும்படி வாசாமகோசரமாக அவள் சொன்னாலும் அந்தத் துஷ்டனுடைய மனஸ் உருகவில்லை. ஸீதை பயத்தால் நடுங்கி அவனிடத்திலிருந்து தப்பப் பலவிதமாக யத்னஞ் செய்தும் பலிக்கவில்லை. அவள் சொல்லமுடியாத துக்கத்தால் பீடிக்கப்படுவதை ராவணன் கொஞ்சங்கூட லக்ஷ்யஞ் செய்யாமல் அதிவேகமாக அவளை எடுத்துப் போனான்.

—: o :—

## ஸர்க்கம் 54.

## ஸீதையை அசோக வனத்தில் வைத்தது

இப்படி அநாதையாக ராவணனால் கொண்டுபோகப்படுகையில் வழியிலுள்ள ஒரு மலைச் சிகரத்தில் ஐந்து வானர ச்ரேஷ்டர்கள் உட்கார்ந்திருப்பதை ஸீதை பார்த்து "எனக்கு நேர்ந்த கஷ்டத்தை இவர்கள் ராமனுக்கு ஒருவேளை தெரிவிக்கமாட்டார்களா"வென்றெண்ணித் தன் ஆபரணங்களில் சிலவற்றைக் கழற்றி உத்தரீயத்தில் முடிந்து அவர்களுக்கு நடுவில் போட்டாள். ராவணன் பரபரப்பால் அதைக் கவனிக்கவில்லை. மஞ்சள் நிறமுள்ள கண்களையுடைய அந்த வானர ச்ரேஷ்டர்கள் தாமரையிதழைப்போல் விசாலமான நேத்ரங்களையுடைய ஸீதை கதறிக்கொண்டு போவதைக் கண்கொட்டாமல் பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

ராவணன் பம்பையென்னும் ஏரியைத் தாண்டும்வரையில் "ராமலக்ஷ்மணர்கள் என்னைத் தொடர்கிறார்களோ"வென்று ஆச்ரமத்தையே பார்த்துக்கொண்டிருந்து, அவர்கள் வராததால் ஸந்தோஷமும், தைர்யமும் உண்டாகி, லங்கையை நோக்கி அதிவேகமாகப் போனான். கொடிய விஷமுள்ள மஹாஸர்ப்பத்தை மடியில் கட்டிக்கொண்டு போவதைப்போல், தனக்கு மிருத்யுவான ஸீதையைப் பலவந்தமாக தன் வீட்டிற்கழைத்துப்போனான். வனங்களையும் ஆறுகளையும் ஏரிகளையும் மலைகளையும் தாண்டி, வில்லிலிருந்து விட்ட பாணத்தைப்போல் அதிவேகமாகப் போய், திமிங்கலம் முதலை முதலிய ஜந்துக்கள் நிறைந்த ஸமுத்ரத்தைக் கடந்தான். ராவணன் ஸீதையை எடுத்துப்போவதைப் பார்த்து ஸகல நதிகளுக்கும் ஆதாரமான ஸமுத்ரமும் பயந்து அலைகளை அடக்கிக்கொண்டது. மீன்களும் ஸர்ப்பங்களும் மறைந்தன. ஆகாசத்தில் ஸஞ்சரித்துக்கொண்டிருந்த ஸித்த சாரண தேவ கணங்கள் "ராவண! உன் ஆயுஸுக்கு இதே முடி"வென்றார்கள். தன் மிருத்யுவே ரூபமெடுத்து வந்ததைப் போன்ற ஸீதையைத் தூக்கிக்கொண்டு தசமுகன் லங்கையில் புகுந்தான். விசாலமான வீதிகளையும் ஜனங்கள் நிறைந்த கட்டுகளையும் தாண்டி, தன் அந்தப்புரத்திற்குப் போய், முன்பு மயனென்ற அஸுரன் தன் மாயையால் ஸிருஷ்டிக்கப்பட்ட ஒரு குகையில் ஸ்வயம்ப்ரபையென்ற அப்ஸரஸை வைத்ததுபோல், பயத்தாலும் சோகத்தாலும் மூர்ச்சையடைந்த ஸீதையைத் தன் அரண்மனையில் வைத்தான்.

பிறகு பிசாச முகங்களுள்ள ராக்ஷஸிகளை அழைத்து "இவளை உங்கள் வசத்தில் ஒப்புவித்திருக்கிறேன். ஆணாவது பெண்ணாவது என் உத்தரவில்லாமல் இவளைப் பார்க்கக்கூடாது. எனக்கு நடக்கும் உபசாரம் மர்யாதை பணிவிடை யாவும் இவளுக்கும் நடக்க வேண்டும். தங்கம் ரத்னங்கள் ஆடையாபரணங்கள் இன்னும் எவைகளை விரும்பினாலும் கேட்டவுடனே கொடுக்க வேண்டும். தெரிந்தாவது தெரியாமலாவது இவளுக்கு ப்ரியமில்லாத கார்யத்தை நீங்கள் செய்தால் அந்த நிமிஷத்தில் உங்களைக் கொல்வே"னென்று கடுமையாக உத்தரவிட்டான்.

பிறகு அந்தப்புரத்திலிருந்து வெளியில் வந்து இன்னும செய்யவேண்டிய காரியம் என்ன பாக்கியிருக்கிறதென்று யோசித்துக் கொண்டிருக்கையில், மஹா வீரர்களும் க்ரூரர்களும் ஒன்றிற்கும் அஞ்சாதவர்களுமான எட்டு ராக்ஷஸர்கள் எதிரில் நிற்கக் கண்டான். ப்ரஹ்மா தனக்குக் கொடுத்த வரங்களால் மதங்கொண்டு, அவர்களுடைய பலத்தையும் வீர்யத்தையும் புகழ்ந்து, "நீங்கள் ஆயுதபாணிகளாக இங்கிருந்து ஜனஸ்தானத்திற்குச் சீக்ரமாகப் போங்கள். கரதூஷணர்கள் அங்கேயிருந்தது உங்களுக்குத் தெரியுமல்லவா? அவர்களும் அங்கிருந்த ராக்ஷஸ ஸைன்யங்களும் ராமனல் கொல்லப்பட்டார்கள். அவனிடத்தில் எனக்கு எல்லையற்ற கோபம் பொங்குகிறது. பழிக்குப்பழி வாங்க ஸமயம் தேடிக்கொண்டிருக்கிறேன். யுத்தத்தில் அவனைக் கொல்லாமல் எனக்குத் தூக்கம் வராது. கரதூஷணர்களைக் கொன்ற அந்த மஹா பாபியைக் கொன்று, தரித்திரன் புதையலை அடைந்ததைப் போல் ஸந்தோஷிப்பேன். நீங்கள் அங்கே போயிருங்கள். பயப்படவேண்டாம். உங்கள் பலமும் யுக்தியுமே போதும். ராமன் என்ன செய்து வருகிருனென்று அடிக்கடி ஸமாசாரந் தெரிவிக்கவேண்டும். ஜாக்ரதையாக இருங்கள். மோசம் போகவேண்டாம். ராமனைக் கொல்ல எப்பொழுதும் ஸமயம் பார்த்துக்கொண்டிருங்கள். 'கரதூஷணர்கள் நாசமடைந்த விடத்தில் நாங்கள் என்ன செய்வோ'மென்று கவலைப்படவேண்டாம். பல யுத்தங்களில் உங்களுடைய பலத்தையும் தைர்யத்தையும் பராக்ரமத்தையும் பார்த்திருக்கிறேன். ஆகையால் ஜனஸ்தானத்தில் போய் அந்தக் கார்யத்தை முடிக்கக் கூடியவர்களென்று நம்பி உங்களை அனுப்புகிறே"னென்முன். அந்த எட்டு ராக்ஷஸர்களும் அரசனல் தாங்கள் புகழப்பட்டதைக் கேட்டு மகிழ்ந்து தங்கள் மாயையால் ஒருவருக்குந் தெரியாமல் ஜனஸ்தானத்திற்குப் போனர்கள்.

இப்படி ராவணன் ராமனுடைய ஆச்ரமத்திலிருந்து ஜானகியைத திருட்டுத்தனமாக எடுத்துவந்து ஆசையால் புத்தி மயங்கி ராமனைப் பகைத்துக்கொண்ட பிறகும் விசாரமற்று ஸந்தோஷித்தான்.

—:o:—

ஸர்க்கம் 55.

## ராவணன் ஸீதையை ப்ரார்த்தித்தது

அந்த ராக்ஷஸர்களை அனுப்பிவிட்டு ராவணன் ஸகல புருஷார்த்தங்களையும் அடைந்ததுபோல் மகிழ்ந்தான். அல்ப புத்தியுள்ளவனல்லவா? பிறகு ஸீதையிடத்தில் ஆசை மிகுந்து அவளையே நினைத்துக்கொண்டு அவளைப் பார்க்க விரும்பி, அதிவேகமாக அசோகவனத்திற்குப் போனான். அங்கே ராக்ஷஸிகளுக்கு நடுவில் ஸீதை கண்ணீர் தாரைதாரையாகப் பெருக, சோகத்தால் வாடி, ஸமுத்திரத்தில் பெருங்காற்று லடிபட்டு முழுகும் படகைப்போல் உட்கார்ந்திருக்கக் கண்டான். பெண்மான் தன் இனத்தை விட்டுப் பிரிந்து வேட்டைநாய்களால் சூழப்பட்டதைப் போல், ஸீதை அந்த ராக்ஷஸர்களின் வசத்தில் அகப்பட்டுக் குனிந்த தலை நிமிராமல் பூமியைப் பார்த்தபடியே இருப்பதைக் கவனித்தான். "ஆஹா! புத்திமோசம் போனேனே! ஜனஸ்தானத்தில் என் பலத்தையும் பராக்ரமத்தையும் ஐச்வர்யத்தையும் விசேஷமாக வர்ணித்தேன். இப்பொழுது என் செல்வத்தையும் அதிகாரத்தையும் அவள் நேரில் பார்த்தாலும் நிச்சயமாக மலைத்து எனக்கு உட்படுவாளெ"ன்று எண்ணினான். அவளைப் பலவந்தமாக அழைத்துப் போய் ஒப்பில்லாத தன் அரண்மனையையும் அதிலுள்ள ஆச்சர்யங்களையும் காட்டினான். மேடைகளும் உப்பரிகைகளும் மேல்மாடிகளும் விசித்ரமாக அமைக்கப்பட்டிருந்தன. எங்கே பார்த்தாலும் அழகிய ஸ்த்ரீகள் மின்னல்கொடிகளைப்போல் ஸஞ்சரித்துக்கொண் டிருந்தார்கள். அபூர்வமான பக்ஷிகள் அழகான கூடுகளில் மதுரமாகச் சப்தித்துக்கொண்டிருந்தன. தங்கத்தாலும் வெள்ளியாலும் ஸ்படிகத்தாலும் செய்யப்பட்ட தூண்கள் வஜ்ர வைடூர்யங்களால் அலங்கரிக்கப்பட்டு எவ்விடத்திலும் காணப்பட்டன. விசித்ரமாக அமைக்கப்பட்ட தங்க படிக்கட்டுகளில் ராவணன் ஸீதையுடன் ஏறும்பொழுது துந்துபி அடிப்பதுபோல் சப்த முண்டாயிற்று. அழகிய ஜன்னல்கள் தந்தத்தாலும் தங்கத்தாலும் வெள்ளியாலும் அமைக்கப்பட்டுத் தங்க வலைகளால் மறைபட்டிருந்தன. தரைகளில் நவரத்னங்களால் விசித்ர ரூபங்கள் ஏற்படுத்தப்பட்டிருந்தன. ஓடைகளும் நடபாவிகளும் அபூர்வமான புஷ்பங்களால் அலங்கரிக்கப்பட்டுப் பல

வகை மரங்களால் விளங்கின. ஸீதை யாதொன்றையும் கவனிக்காமல் துக்கத்தில் மூழ்கியிருந்தும் ராவணன் தன் அரண்மனையையும் அதிலுள்ள ஐச்வர்யங்களையும் அவளுக்குக் காட்டி, அவைகளில் ஆசை வைத்துத் தன்னை அடைவாளென்று எண்ணினன்.

"மஹா பலசாலிகளும் க்ரூரர்களுமான முப்பத்திரண்டு கோடி ராக்ஷஸர்களுக்கு நான் ப்ரபு. வயஸ்சென்றவர்களையும் சிறுவர்களையும் பெண்டுகளையும் கணக்கிடவில்லை. ஒவ்வொரு வேலைக்கும் ஆயிரம் ராக்ஷஸர்கள் நியமிக்கப்பட்டிருக்கிறார்கள். இந்த ராஜ்யத்தையும் இதிலுள்ள ஸகல கார்யங்களையும் உன்னிடத்தில் ஒப்புவித்தேன். என் உயிரையும் உன்னிடத்தில் ஒப்புவித்தேன். உன் உயிரைக்காட்டிலும் நீ ப்ரியமானவளல்லவா? நான் பல லோகங்களிலிருந்து கொண்டுவந்த எண்ணிறந்த ஸ்த்ரீகளுக்கு நீ அரசியாக விரு. என்னைப் பர்த்தாவாக அடை. வேறு யோசனை என் செய்கிறாய்? உனக்கு ஹிதத்தையே சொல்லும் என் வார்த்தையைத் தட்டாதே. உன்னிடத்தில் ஆசை வைத்த என்மேல் தயவு செய்து என் இஷ்டத்தை நிறைவேற்று. அநேக யோஜனை விஸ்தீர்ணமுள்ள இந்த லங்கையை எண்ணிறந்த ராக்ஷஸர்கள் இரவும் பகலும் கார்த்துவருகிறார்கள். தேவாஸுரர்கள் ஒன்று சேர்ந்தாலும் இதை எதிர்த்து நெருங்கமுடியாது. தேவ யக்ஷ கந்தர்வ பன்னகர்கள், இன்னும் ஸகல லோகங்களிலும் உள்ள ப்ராணிகள் எவரும் என் எதிரில் நிற்கமாட்டார்கள். ராஜ்யத்திலிருந்து அடித்துத் துரத்தப்பட்டுத் தபஸ்விவேஷந்தரித்து, ஆயுஸும் தேஜஸும் அழிந்து பரதையாகத் தபிக்கும் அல்ப மனிதனான ராமனால் உனக்கு என்ன ப்ரயோஜனம்? என்னை அடை. நான் உனக்குத் தகுந்த கணவன். ஜனங்களுக்கு யௌவனம் சீக்ரத்தில் அழியும். ஆகையால் இங்கே என்னுடன் ஆனந்தமாகக் காலங்கழி. இனி ராமனைப் பார்ப்போமென்ற எண்ணத்தை விடு. அவன் கனவிலாவது இங்கே வரத்துணிவானா? மஹா வேகமுள்ள காற்றைக் கயிற்றால் கட்டமுடியுமா; ஜ்வலிக்கும் நெருப்புக் கொழுந்தைப் பிடிக்க முடியுமா? நீ என் காவலிலிருக்கும்பொழுது என்னிடத்திலிருந்து உன்னைக் கொண்டு போகக் கூடியவன் எந்த லோகத்திலுமில்லை. எல்லையற்ற இந்த

கஷ்டத்தை அனுபவித்தான். அவனுடைய புத்ரனுன யயாதி, தான் செய்த புண்யத்தால் ஸ்வர்க்கத்தை அடைந்தான். இந்த்ரன் அவனிடத்தில் அஸூயை கொண்டு 'தங்களுடைய ராஜ்யத்தில் ச்ரேஷ்டமானவன் யாரெ'ன்று கேட்டான். யயாதி உண்மையையே சொல்லுகிறவனுனதால் நானேயென்முன். 'உன்னையே நீ மெச்சிக்கொண்டதால் நீ இங்கே இருக்கத் தகாதெ'ன்று இந்த்ரன் அவனைத் தலைகீழாகத் தள்ளிவிட்டான். நமது குலகுருவான வஸிஷ்ட மஹர்ஷியின் நூறு புத்ரர்கள் ஒரே நிமிஷத்தில் விச்வாமித்ரருடைய கோபாக்னியால் எரிக்கப்பட்டார்கள். மஹாவிஷ்ணுவின் பத்னியும் ஜகத்திற்கு மாதாவுமான பூமாதேவியே அடிக்கடி நடுங்குகிறுளென்று தாங்களே எனக்குச் சொல்லியிருக்கிறீர்கள். ஸகல தர்மங்களுக்கு ஸாக்ஷிகளும், காலப்ரமாணத்தைக் காட்டுகிறபடியால் ஜகத்தை நடத்துகிறவர்களும் ஸகல ஜனங்களுக்கு ஆயுஸையும் ஞானத்தையும் கொடுக்கிறவர்களும் மஹாபலசாலிகளுமான சந்த்ரஸூர்யர்களும் ராஹு கேதுக்களால் பீடிக்கப்படுகிறுர்கள். மாந்தாதா நளன் முதலிய மஹா புருஷர்களும் ஸகல பூதங்களுக்கு அந்தர்யாமியான பரமாத்மாவின் ஸங்கல்பத்தைத் தாண்ட முடியாது. இந்த்ரன் முதலிய தேவர்கள் பாப புண்யங்களைச் செய்கிறுர்களென்றும் ஸுகதுக்கங்களை அனுபவிக்கிறுர்களென்றும் கேட்டிருக்கிறோம். அப்படி யிருக்கத் தாங்கள் வருத்தப்படுவது உசிதமல்ல. ஸீதை பிறரால் எடுத்துப்போகப்பட்டாலும் இறந்தாலும் மஹா வீரனுன தாங்கள் ஸாதாரண மனிதனைப் போல் வருந்தலாமா? விஷயங்களின் உண்மையை அறிந்த தங்களைப்போன்ற மஹானுபாவர்கள் கொடிய கஷ்டங்கள் நேரும்பொழுதும் விவேகத்தை இழக்காமல் நிர்மலமான அந்தக்கரணத்துடன் இருப்பார்கள். சோகத்தால் மயங்காத புத்தியுடன் நமக்கு நேரும் ஸுக துக்கங்களை யோசித்துப் பார்க்க வேண்டும். மஹாபுத்திமான்கள் அப்படிச் செய்து, வரும் ஸுக துக்கங்களையும் அவைகளின் தத்வத்தையும் அறிகிறுர்கள். நாம் முன்ஜன்மங்களில் செய்த கர்மங்களின் ஸ்வரூபம் நமக்குத் தெரியாது. அவைகளின் குணதோஷங்களை நேரில் பார்க்க முடியாது. ஆனல் நாம் அவைகளைச் செய்திருந்தாலொழிய இப்பொழுது அவைகளின் பயனை அனுபவிக்க முடியாது. தாங்கள் இப்பொழுது படும் துக்கம் பூர்வகர்மங்களின் பயனுக இருக்க அதைப்

பற்றி ப்ரலாபிப்பது ந்யாயமா? தாங்களே எனக்கு இப்படி உப தேசிக்க வில்லையா? பிருஹஸ்பதியாகவே ஒருவன் இருந்தாலும் தங்களுக்குப் புத்தி சொல்ல முடியுமா? தங்களுடைய புத்தியின் எல்லையைக் கண்டுபிடிக்க தேவர்களாலும் முடியுமா? ஸீதையைப் பிரிந்த சோகத்தால் தங்களுடைய ஞானம் மயங்கிற்றென்று தெரி வித்தேனேயொழிய வேறல்ல. கந்தர்வ யக்ஷ கின்னரர்கள் முதலிய தேவகணங்கள் ஸாத்விக ஸ்ருஷ்டியானதால் அவர்களைக் கொல்வது ந்யாயமல்ல. பூலோகத்தில் ப்ரஹ்மஞானிகளான ப்ராஹ்மணர் களும் மஹர்ஷிகளும் இருக்கிறபடியால் அதை அழிப்பது தகாது. ஆனல் தாங்கள் ஸகல லோகங்களையும் நினைத்தவுடனேயே நாசஞ் செய்யக் கூடியவர்கள். தாங்கள் இக்ஷ்வாகு வம்சத்தில் அவதரித்த காரணத்தை ஞாபகத்தில் வைத்துக்கொண்டு நமது சத்ருவைக் கொல்வதில் பூர்ணமான முயற்சி செய்யவேண்டும். தங்களுக்கு ஒருவன் அபராதம் செய்திருக்கையில் லோகங்கள் யாவையும் நாசஞ் செய்தால் லாபமென்ன? அந்த மஹா பாபியை எப்படியாவது கண்டுபிடித்துக் கொல்வதே உசித"மென்று வணக்கமாகத் தெரிவித்தார்.

—: o :—

## ஸர்க்கம் 67.

## ராமன் ஜடாயுவைக் கண்டது

ராமன் லக்ஷ்மணனுக்கு மூத்தவர்; எல்லோருக்கும் உப தேசிக்கத் தகுந்தவர்; ஆனாலும் லக்ஷ்மணன் சொன்னது யுக்திக்கு ஒத்தும் மிகுந்த ஸாரத்துடனும் விளங்கிற்று. ராமன் ஸாரத்தை க்ரஹிப்பவர். ஆகையால் அவைகளை ஒப்புக்கொண்டு தனக்குள் பொங்கும் கோபத்தை அடக்கி, கோதண்டத்தின்மேல் சாய்ந்து கொண்டு "லக்ஷ்மண! இப்பொழுது என்ன செய்வோம்? எங்கே போவோம்? எந்த உபாயத்தால் ஸீதையைக் கண்டுபிடிப்போ" மென்றார். லக்ஷ்மணன் "அண்ண! இந்த ஜனஸ்தானத்திலேயே வெகு ஜாக்ரதையாகத் தேடவேண்டும். ராக்ஷஸர்கள் இங்கே அதிகமாக ஸஞ்சரிக்கிறார்கள். மரச் சோலைகளும் கொடிகளும் குகைகளும் பிளவுகளும் பள்ளத்தாக்குகளும் கின்னரர்கள் கந்தர்

வர்கள் வஸிக்குமிடங்களும் இன்னும் ரஹஸ்யமான பலவிடங்களும் இங்கே யிருக்கின்றன. அங்கெல்லாம் நாமிருவரும் ஜாக்ரதையாக தேடுவோம். பெரிய மலைகள் பெருங்காற்றிலும் அசையாததுபோல் தங்களைப்போன்ற மஹாபுத்திசாலிகள் எந்த ஆபத்து நேர்ந்தாலும் கலங்க மாட்டார்க"ளென்று வணக்கமாய்த் தெரிவித்தார்.

பிறகு அவர்கள் அந்த வனம் முழுவதிலும் ஜாக்ரதையாகப் பரிசோதித்துக்கொண்டு போகையில், அந்த யுத்தகளத்திற்குக் கொஞ்சம் தெற்கில் மலைச் சிகரத்தைப்போல் ஒரு பக்ஷி ரக்தம் பெருகப் பூமியில் கிடப்பதைக் கண்டார்கள். உடனே ராமன் "லக்ஷ்மண! இந்த ராக்ஷஸப் பயல் ஸீதையைக் கொன்று தின்றுவிட்டு எழுந்திருக்க முடியாமல் கிடக்கிறான். நம்மைக் கண்டவுடன் கழுகைப்போல் ரூபமெடுத்திருக்கிறான். ஜ்வலிக்கும் என் பாணங்களுக்கு இவனை இப்பொழுதே இரையாக்குகிறே"னென்று வில்லில் கூர்மையான பாணத்தைப் பூட்டிக் கோபத்தால் பூமி முழுவதையும் நடுங்கச் செய்துகொண்டு அந்தப் பக்ஷியின் மேல் பாய்ந்தார். அப்பொழுது அந்தக் கழுகு நுரையுடன் ரத்தத்தைக் கக்கிக்கொண்டு தீனமாக ராமனைப் பார்த்து "நீங்கள் இந்த வனத்தில் மஹா ஔஷதியைப்போல் தேடிக்கொண்டு வருகிறவளையும் என் உயிரையும் ராவணனென்ற துஷ்ட ராக்ஷஸன் கொள்ளைகொண்டு போய்விட்டான். நீயும் லக்ஷ்மணனும் இல்லாத ஸமயத்தில் ராவணன் அவளை எடுத்துப் போனதைப் பார்த்தேன். உடனே நான் அவனை மறித்து அவனுடைய வில்லையும் பாணங்களையும் ரதத்தையும் ஸாரதியையும் நாசஞ்செய்தேன். நான் சற்றுக் களைத்திருக்கும் ஸமயம் பார்த்து அந்தப் பாபி என் இறகுகளையும் கால்களையும் கத்தியால் வெட்டித் தள்ளி ஸீதையை எடுத்துக்கொண்டு ஆகாச மார்க்கமாகப் போனான். இதுவரையில் ராவணனாலேயே கொல்லப்பட்டிருக்கிறேன், நீயும் என்னைக் கொல்ல வேண்டா"மென்று ப்ரார்த்தித்தார்.

ராமன் அதைக்கேட்டு முன்னிருந்த துக்கம் அதிகமாகி, கோதண்டத்தை விட்டெறிந்து லக்ஷ்மணனுடன் ஜடாயுவைக் கட்டிக்கொண்டு பூமியில் விழுந்து புரண்டழுதார். அந்த வழியாக

ஒருவரும் ப்ரயாணஞ் செய்வதில்லை; அதற்கப்புறம் போக வழியு மில்லை; ஒருவனுக்குமேல் போக முடியாது. அவ்விதமான விடத்தில் உதவி செய்பவர்களின்றிக் கோரமாகக் காயம்பட்டு அநாதை யாகக்கிடக்கும் ஜடாயுஸைப் பார்த்து "லக்ஷ்மண! கையில் கிடைத்த ராஜ்யத்தையும் திடீரென்று இழந்தேன்; ராஜ்யத்தில் பிக்ஷையெடுத்துக் கொண்டாவது பிழைக்கக்கூடாதா? அப்படியு மில்லை; காட்டிற்குத் துரத்தப்பட்டேன். அங்கும் எனக்கு வேண்டியவர்கள் கிட்டவிருந்தால் துக்கங்கள் யாவும் ஒருவாறு மறைந்திருக்கும்; அப்படியுமில்லை. ஸீதையையும் பறிகொடுத்தேன். பந்துக்களாவது மித்ரர்களாவது கிட்டவிருந்தால் அவர்களைப் பார்த்துத் துக்கத்தை மறக்கலாம்; அப்படியுமில்லை. ஜடாயுஸையும் கொன்றேன். இப்படி ஒன்றிற்கொன்று அதிகமான கஷ்டங்கள் ஸமுத்ரத்தின் அலைகளைப்போல் ஓயாமல் என்னைத் தாக்குவதைப் பார்த்தால் ஸகல வஸ்துக்களையும் எரிக்கும் அக்னியில் நான் போய் விழுந்தாலும் என் துரதிருஷ்டம் அதையும் எரித்துவிடுமென்று எண்ணுகிறேன். என்னைவிட்டு ஒருநாளும் பிரியாத உன்னையும் பிரித்துவிடுமோ தெரியவில்லை. என் துக்கத்தைத் தணிக்க ஸமுத்ரத்தில் விழுந்தாலும் அதுவும் வற்றிப்போகும். என்னைப் போன்ற பாக்யஹீனன் ஸகல லோகங்களிலும் ஒருவனும் கிடையாது. கவலையென்ற வலையில் என்னைப்போல் கட்டுப்பட்டுத் தபிப்பவர்கள் வேறுண்டோ? இதோ பார்! இந்த ஜடாயுஸ் நமது பிதாவிற்கு உயிர்த்தோழன்; பிதாவைப் போல் நம்மால் பூஜிக்கத் தகுந்தவர்; மிகுந்த வயஸ் சென்றவர்; எப்பொழுதும் நம்மைப் பாதுகாப்பவர்; என்னுடன் சேர்ந்து என் துரதிருஷ்டத்தால் கோரமான மரணத்தை அடைந்திருக்கிரு"ரென்று இப்படிப் பலவிதமாகப் புலம்பிக்கொண்டு ராகவன் ஜடாயுஸைத் தடவிக் கொடுத்தார். ராமனுக்குத் தசரதரிடத்தில் எவ்வளவு ப்ரீதியோ அதைவிட ஜடாயுஸிடத்தில் இன்னும் அதிகம். ஆகையால் அவரைக் கட்டிக் கொண்டு 'என் ப்ராணநாயகியான ஸீதையெங்கே"யென்று கதறி மூர்ச்சையடைந்து பூமியில் விழுந்தார்.

——:o:——

ஸர்க்கம் 68.

## ராமன் ஜடாயுஸுக்கு மோக்ஷங் கொடுத்தது

பிறகு ப்ரக்ஞை தெளிந்து எழுந்து தனக்கு ப்ரிய மித்ரனை லக்ஷ்மணனைப் பார்த்து "குழந்தாய்! இந்தப் பக்ஷி என் பார்யையை ரக்ஷிப்பதற்காக ராவணனுடன் யுத்தஞ் செய்து உயிரை விடப்போகிறார். இவருடைய தேஹத்தில் ப்ராணன் கொஞ்சம் ஆடிக்கொண்டிருக்கிறது. ஆனாலும் குரல் வர வர பலஹீனமாகிறது. மரணாவஸ்தை ஸமீபித்துவிட்டது. ஜடாயுஸே! உங்களுக்குப் பேசச் சக்தியிருந்தால் ஸீதையின் வரலாற்றையும் தங்களுக்கு நேர்ந்த கஷ்டத்தையும் விஸ்தாரமாகச் சொல்ல ப்ரார்த்திக்கின்றேன். ராவணன் ஸீதையை அபஹரிக்கக் காரணமென்ன? நான் அவனுக்கு என்ன அபராதஞ் செய்தேன்? அப்பொழுது ஸீதையின் முகம் எப்படி இருந்தது? அப்பொழுது ஸீதை என்ன சொன்னாள்? அந்த ராக்ஷஸனுடைய தைர்யமும் ரூபமும் செய்கைகளும் எப்படிப்பட்டவை? அவன் இருக்குமிடம் எங்கே" யென்றார். அப்பொழுது ஜடாயுஸ் மிகவும் மெலிந்த குரலுடன் தீனமாக "ராம! அந்த ராக்ஷஸேச்வரன் தன் மாயையால் பெரிய காற்றையும் மேகத்தையும் உண்டாக்கி, ஸீதையை அதில் மறைத்து, ஆகாச மார்க்கமாகக் கொண்டுபோனான். (இதை அந்த விடத்தில் என் சொல்லவில்லையென்பதைக் கவனிக்கவும்.) நான் யுத்தஞ் செய்து சளைத்திருக்கும்பொழுது என் இறக்கைகளை வெட்டிவிட்டு ஸீதையை எடுத்துக்கொண்டு தெற்கே போனான். மரணாவஸ்தையால் எனக்கு ப்ராணவாயுக்கள் நெஞ்சில் வந்தடைகின்றன; கண்கள் சுழலுகின்றன; மரங்கள் தங்கமயமாகவும் விளாமிச்ச வேரைப்போன்ற தலைமயிர்களையுடையவைகளாகவும் தோன்றுகின்றன. விந்தமென்ற முஹூர்த்தத்தில் ராவணன் ஸீதையை எடுத்துப் போனான். அதன் மஹிமையால் நஷ்டமான பொருள் மறுபடியும் உடையவனுக்குச் சீக்ரமாகக் கிடைக்கும். இது ராவணனுக்குத் தெரியவில்லை. உன் பார்யையான ஜானகியை எடுத்துப் போய் அந்த ராக்ஷஸன் தூண்டிமுள்ளை விழுங்கின மீனைப்போல் நிச்சயமாக இறப்பான். ஸீதைக்காக வருந்தாதே. ராவணனைக் கொன்று ஸீதையுடன் வெகுகாலம் ஸுகமாக இருப்பா"யென்று

தெளிவாகப் பேசிக்கொண்டிருந்த ஜடாயுஸின் வாயிலிருந்து ரக்தமும் மாம்ஸமும் விழுந்தன. மரணம் ஸமீபித்ததால் இன்னும் எதையோ சொல்ல வேண்டுமென்று விரும்பின ஜடாயுஸ் "விச்ரவஸின் புத்ரன், குபேரனுடைய தம்பி"யென்று சொல்லிக்கொண்டே ப்ராணனை விட்டார். 'சொல்லும் சொல்லு'மென்று ராமன் கைகூப்பிப் பலதடவை ப்ரார்த்தித்தும் அந்தப் பக்ஷியின் ப்ராணன்கள் தேஹத்தை விட்டுக் கிளம்பிப் போயின. என்ன கஷ்டம்! கால்களைப் பரப்பிக்கொண்டு தலையைத் தரையில் போட்டு ஜடாயுஸ் மரணமடைந்தார். தலைகீழாக விழுந்ததால் கண்கள் சிவந்து மலைச் சிகரத்தைப்போல் கிடக்கும் ஜடாயுஸைப் பார்த்து ராமன் "லக்ஷ்மண! கோரமான ராக்ஷஸர்கள் வஸிக்கும் இந்தத் தண்டகாரண்யத்தில் இவர் அநேக ஆயிர வர்ஷங்களாகப் பயமில்லாமல் ஸுகமாக வஸித்து வந்தார். இங்கேயே ராக்ஷஸனால் மரணமடைந்தார். இவர் வெகுகாலம் பிழைத்திருந்து இப்பொழுது இறக்கும்படி நேர்ந்தது. ஐயோ! காலகதியை யாரால் தடுக்க முடியும்? பார், லக்ஷ்மண! ராவணன் ஸீதையை எடுத்துப்போகும் பொழுது அவளை மீட்பதற்காக இந்தப் பக்ஷி அந்தத் துஷ்டனுடன் தன் உயிருள்ளவரையில் யுத்தஞ் செய்தார். எனக்கு இவர் செய்த உபகாரத்திற்கு எல்லையுண்டோ? எனக்குக் கிடைக்கவேண்டிய ராஜ்யத்தை என் பிதாவின் உத்தரவால் கைவிட்டேன். இவரோ தான் நெடுங்காலம் ஆண்டுவந்த ராஜ்யத்தைத் தானாகவே விட்டுப் போனார். என் கோஸல ராஜ்யம் இவருடைய ராஜ்யத்திற்கு ஈடல்ல. என் அதிகாரத்திற்குப் பங்காளிகள் பலருண்டு. இவர் போட்டியில்லாமல் ராஜ்யத்தை ஆண்டவர். பக்ஷிகளுக்கெல்லாம் அரசனாகப் பல தலைமுறையாகக் கிடைத்த ராஜ்யத்தை ஆண்டு வந்து எனக்காக ப்ராணனை விட்டார். (ஜடாயுஸும் ஸம்பாதியும் அருணனுடைய பிள்ளைகள். அவனும் கருடனும் காச்யபரின் புத்திரர்கள். தண்டகாரண்யத்தில் காச்யபராவது கருடனாவது அருணனாவது ஆண்டதாகத் தெரியவில்லை. அப்படியிருக்க பல தலைமுறைகளாக வந்த ராஜ்யத்தை ஜடாயுஸ் பக்ஷிராஜனாக ஆண்டுவந்தா ரென்பதற்குக் காரணம் தெரியவில்லை.) என் பிதா இறந்தபிறகு இவரை அடைந்து எல்லா துக்கங்களையும் மறந்து ஸுகத்தை அனுபவிக்கலாமென்று எண்ணினேன். இவரும் என்னைக் கைவிட்டுப் போனார். ஸகல ப்ராணிகளிலும் ஸாதுக்

களும் தர்மாத்மாக்களும் உபகாரிகளும் இருக்கிறார்கள். ஸீதையை இழந்ததாலுண்டான துக்கமும் இதற்கு ஈடல்ல. நமது பிதா நமக்கு எப்படிப் பூஜிக்கத் தகுந்தவரோ, மர்யாதை செய்யத் தகுந்தவரோ, இந்தப் பக்ஷிராஜனும் அப்படியே. ஆகையால் அவருக்குச் செய்யவேண்டிய ஸகல ப்ரேதக்ரியைகளை இவருக்கும் செய்யவேண்டும். சீக்ரத்தில் கட்டைகளை அடுக்கு. எனக்கு உயிரைக் கொடுத்த இந்த ஜடாயுவை அக்னியைக் கடைந்தெடுத்துத் தஹனஞ் செய்ய விரும்புகிறே"னென்றார்.

லக்ஷ்மணனும் அப்படியே கட்டைகளை அடுக்க, ராமன் ஜடாயுவைப்பார்த்து, "மஹாபலவானான பக்ஷிராஜ! யாகயக்ஞங்களை எப்பொழுதும் செய்யும் கிருஹஸ்தர்களும், பஞ்சாக்னி நடுவில் தபஸ் செய்யும் வானப்ரஸ்தர்களும், நிவிருத்தி மார்க்கத்திலிருந்து திரும்பாத ஸந்யாஸிகளும், ஸம்ஸார போகங்களை விட்ட நைஷ்டிக ப்ரஹ்மசாரிகளும், அடையும் லோகங்களை, என்னால் ஸம்ஸ்காரஞ் செய்யப்பட்ட மஹிமையால் அடையக்கடவீர். என் அனுமதியால் ஸர்வ ச்ரேஷ்டமான விஷ்ணுலோகங்களையும் அடையக் கடவீ"ரென்று, அவருடைய தேஹத்தைச் சிதையில் ஏற்றி அக்னியை மூட்டி, தன் பந்துக்களை ஸம்ஸ்காரஞ் செய்வதுபோல், மந்த்ரங்களுடன் தஹனஞ் செய்து, இறந்தவர்கள் ஸ்வர்க்கத்தை அடைவதற்காகப் பித்ருதேவதைகளைக் குறித்து ஜபிக்கவேண்டிய யாம்யஸூக்தம் முதலிய மந்த்ரங்களை ஜபித்தார். பிறகு வெகு துக்கத்துடன் ராம லக்ஷ்மணர்கள் காட்டிற்குள் போய், பெரிய மான்களை அடித்துக் கொண்டுவந்து, கோதாவரியில் ஸ்நானஞ் செய்து, அந்தப் பக்ஷிராஜனுக்கு ஜல தர்ப்பணஞ்செய்தார்கள். பிறகு தர்ப்பைகளைப் பரப்பி மாம்ஸத்தைப் பிண்டங்களாகப் பிடித்து இளம்புல் தரையில் விதிப்படி வைத்தார்கள். அந்தப் பக்ஷிராஜன் ஸீதையைக் காப்பாற்ற ராவணனுடன் யுத்தஞ்செய்து உயிரைக்கொடுத்தார். மஹர்ஷிகளுக்கு ஸமமான ராமனால் ஸம்ஸ்காரம் செய்யப்பட்டு அந்த க்ஷணத்திலேயே தான் செய்த புண்யங்களுக்குப் பலனாக ஸர்வோத்தமமான கதியை அடைந்தார். இப்படி ஜடாயுஸுக்கு 'ஸகல ப்ரேதக்ரியைகளையும் விசேஷ ச்ரத்தையுடன் தன் பிதாவிற்குச் செய்ததைப்போல் செய்து முடித்து, "ஸீதையை அடைவா" யென்ற அவருடைய வார்த்தை

யில் பூர்ண நம்பிக்கை வைத்து, அவனைத்தேடிக் கண்டுபிடிப்பதில் ஸகல ப்ரயத்தனமும் செய்ய நிச்சயித்து, ராமலக்ஷ்மணர்கள் மஹா விஷ்ணுவையும் இந்த்ரனையும்போல் அந்த வனத்தில் ப்ரவேசித்தார்கள்.

(இங்கே ஒரு விஷயத்தைக் கவனிக்க வேண்டும் 'ஸீதையை ராவணன் எடுத்துப் போகக் காரணமென்ன? அவனுக்கு என்ன கெடுதிசெய்தேன்? அந்த ராக்ஷஸனுடைய வரலாறும் இருப்பிடமு மென்ன?'வென்று ராமன் ஜடாயுஸைக் கேட்கிறார். அவனுடைய இருப்பிடத்தை அந்தப் பக்ஷி சொல்லாததால் மறுபடியும் தேடிக்கொண்டு போனார்களென்றும், பிறகு ஸுக்ரீவன் முதலிய வானரர்களின் உதவியால் அந்த இடத்தைக் கண்டுபிடித்தார்களென்றும் கதை சொல்லப்படுகிறது. இப்படியே ஸுக்ரீவனும் ராவணனிருக்குமிடத்தை அறியேனென்று சொல்லுகிறான். விச்வாமித்ரர் தன் யாகத்தை ரக்ஷிக்க ராமனை யாசித்தபொழுது அதை அழிக்கும் மாரீச ஸுபாஹுவைப்பற்றிச் சொன்னார். அவர்களுக்கு ராவணன் பக்கபலமாக வருகிறானென்றவுடன் தசரதர் அவனைப்பற்றின வரலாற்றைப் பூர்ணமாக அறிந்தவரானதால் 'அவனுடன் நான் யுத்தஞ் செய்யமாட்டே'னென்றார். ஆகையால் ராவணனைப்பற்றின விஷயங்கள் யாவும் ராமனுக்குத் தெரியாமலிருக்க ந்யாயமில்லை. அப்பொழுது தசரதர் சொல்லாவிட்டாலும் ஸுபாஹு மாரீசர்களை ஜயித்ததைக் கேட்ட பிறகாவது அவர் ராமனுக்குச் சொல்லியிருக்க வேண்டும்.

(2) யாகத்தைக் கெடுக்க வந்த ராக்ஷஸர்களையும் ராவணனையும் பற்றின விஷயங்களை ராமன் விச்வாமித்ரரைக் கேட்டிருப்பார். அவர் சொல்லியுமிருப்பார்.

(3) இக்ஷ்வாகு வம்சத்தில் ஒருவனான அனரண்யன் ராவணனால் கொல்லப்பட்டதும், அவன் இறக்கும்பொழுது 'என் வம்சத்தில் பிறக்கும் ராமன் உன்னைக் கொல்வா'னென்று சபித்ததும், அந்த வம்சத்தரசர்களுக்கும் மந்த்ரிகளுக்கும் உபாத்யாயர்களுக்கும் தெரிந்திருக்கவேண்டும். ஆகையால் ராமனுக்கும் தெரியும்.

(4) வேதம் ஸ்ம்ருதி இதிஹாஸ புராணங்கள் ராஜவம்ச சரித்ரங்கள் பூலோக கோளவர்ணனை முதலியவைகளை ராஜகுமாரர்கள்

அவச்யம கற்றிருக்கவேண்டும். அப்பொழுது ஸகல லோக கண்டகனை ராவணனைப்பற்றித் தெரியாமலிருக்க ந்யாயமில்லை.

(5) சூர்ப்பநகை ராம லக்ஷ்மணர்களிடத்தில் ராவணனுடைய வரலாற்றைச் சொன்னள்.

(6) அவளை அங்கஹீனஞ் செய்து கர தூஷணர்களைக் கொன்றது முதல் ராக்ஷஸர்கள் தனக்குக் கெடுதி செய்ய ஸமயம் தேடிக் கொண்டிருக்கிறார்களென்று ராமனே பலகடவை சொல்லியிருக்கிறார். ஸீதையை அவர்களைத் தவிர வேறொருவனும் எடுத்துப் போகத் துணியமாட்டானென்று ஸுலபமாக அறியலாம். தங்கையைக் கெடுத்தவனைத் தண்டிப்பதற்குத் தமையன் வருவானென்று தெரியாதா? கர தூஷணனைப்போல் அவனும் யுத்தத்திற்கு வருவானென்று எதிர்பார்ப்பது ந்யாயமே.

(7) தன் சத்ருக்களின் பலாபலன்களையும் வரலாறுகளையும் பூர்ணமாக அறியவேண்டியது அரசர்களுடைய தர்மம்.

(8) மேலும் தண்டகாரண்யத்து ரிஷிகளிடத்திலிருந்து ராவணாதி ராக்ஷஸர்களின் விருத்தாந்தம் யாவற்றையும் கேட்டு அறியாமலிருக்கமாட்டார்கள்.

(9) மேலும் ராவணாதி ராக்ஷஸர்களால் தங்களுக்கு நேரும் கெடுதிகளைப்பற்றித் தேவர்கள் மஹாவிஷ்ணுவிடத்தில் முறையிடவில்லையா? அவருடைய அவதாரமே ராமனல்லவா? பூமியில் மனுஷ்ய தேஹத்தை எடுத்ததால் அவருடைய அகண்டமான ஞானம் அழிந்ததா?)

—:0:—

ஸர்க்கம் 69.

## கபந்தன்

ஸீதையைத் தேடிக்கொண்டே தென்மேற்கு முகமாய்ப் போகையில், ஜனஸஞ்சாரமில்லாமல், மரம் செடி கொடி புதர்கள் அடர்ந்து, பார்க்கப் பயங்கரமாய் நடப்பதற்குக் கஷ்டமான ஒரு வழி தோன்றிற்று. அந்த ராஜகுமாரர்கள் புலி கரடி ஸிம்ஹம் முதலிய துஷ்ட மிருகங்களால் நிறைந்த அந்தத்தண்டகாரண்யத்தை அதிவேகமாகத் தாண்டி, ஜனஸ்தானத்திலிருந்து ஒரு காதவழியிலுள்ள க்ரௌஞ்சாரண்யத்தில் புகுந்தார்கள். அது பலவர்ணமுள்ள நீருண்ட மேகங்களைப்போல் தூரத்திலிருந்து காணப்பட்டது. எங்கே பார்த்தாலும் மலர்ந்த புஷ்பங்களால் அந்த வனம் ஸந்தோஷம் தாங்காமல் சிரிப்பதுபோலிருந்தது. பல பக்ஷிகளும் மிருகங்களும் கூட்டங் கூட்டமாகப் பயமில்லாமல் ஸஞ்சரித்தன. ராமலக்ஷ்மணர்கள் அங்கே மரத்தடிகளில் இளைப்பாறுவதற்குத் தங்கித் தங்கி ஸீதையை வெகு ஜாக்ரதையாகத் தேடிக்கொண்டு போனார்கள். அங்கிருந்து கிழக்கே காதவழிதூரம் போய் அந்த க்ரௌஞ்சாரண்யத்தையும் தாண்டி, அதற்கும் மதங்காச்ரமத்திற்கும் நடுவில் ஒரு பெரிய காட்டைக்கண்டார்கள். உயரமுள்ள மரங்களாலும் துஷ்ட மிருகங்களாலும் பக்ஷிகளாலும் நிறைந்த ப்ரயாணஞ் செய்ய மிகவும் கஷ்டமாயிருந்த அந்தக் காட்டின் வழியாகப் போகையில் பாதாளம் வரையில் ஆழமுள்ள ஒரு பெரிய குகை காணப்பட்டது. அதில் எப்பொழுதும் இருட்டே. ஸமீபத்தில் ராமலக்ஷ்மணர்கள் கோரரூபத்தையுடைய ஒரு ராக்ஷஸியைப் பார்த்தார்கள். அவள் மலையைப்போன்ற தேஹத்தையும் பருத்த வயிற்றையும் கூர்மையான பற்களையும் கடினமான தோலையுமுடையவள். ஸகல ஜந்துக்களும பார்த்து நடுங்கக்கூடிய விகார ரூபத்தையுடையவள். தலைமயிரை விரித்துக்கொண்டு பயங்கரமான வாயைத் திறந்துகொண்டு, அந்த வனத்திலுள்ள துஷ்டமிருகங்களை வெகு ஸுலபமாகக் கொன்று தின்றுவந்தாள். அவள் ராம லக்ஷ்மணர்களைப் பார்த்துக் கோரமாகக் கர்ஜித்துக்கொண்டு ஓடிவந்து, ராமனுக்கு முன்னே போன லக்ஷ்மணனைப் பிடித்துத் தழுவி "வா, நாமிருவரும் இந்தக்காட்டில் ஆனந்தமாகக் காலங்கழிப்போம். என் பெயர் அயோமுகி. நான் உனக்குக்

கிடைத்தது உன் அதிருஷ்டத்தாலென்று அறி. எனக்கு உன்னிடத்தில் மிகுந்த ப்ரீதியுண்டாயிருக்கிறது. மலைச்சிகரங்களிலும் ஆற்றுமணல் திட்டுகளிலும் நாம் உயிரோடிருக்கும் வரையில் வேடிக்கையாக ஸஞ்சரிப்போமெ"ன்றுள். அதைக் கேட்டு லக்ஷ்மணன் கடுங் கோபங்கொண்டு, கத்தியை உருவி அவளுடைய காதுகளையும் மூக்கையும் ஸ்தனங்களையும் அறுத்தார். உடனே அவள் கோரமாகக் கதறிக்கொண்டு வந்தவழியாக ஓடிப் போனுள்.

பிறகு ராமலக்ஷ்மணர்கள் அந்த இருண்ட காட்டில் போகும் பொழுது, மஹாபலசாலியும் தெளிவான மனஸையும் சுத்தமான தேஹத்தையும் நல்ல நடத்தையையும் உடைய லக்ஷ்மணன் ராமனைப் பார்த்து மஹா பக்தியுடன் கைகூப்பி நமஸ்கரித்து, "அண்ணு! என் இடது தோள் அடிக்கடி துடிக்கிறது. மனஸ் நடுங்குகிறது. ஸமீபத்தில் நமக்கு ஏதோ கெடுதி நேருமென்பதைக் காட்டும் இன்னும் பல அபசகுனங்களும் தோன்றுகின்றன. ஆகையால் தாங்கள் வெகுஜாக்ரதையாகப் போகவேண்டும். மஞ்சுளமென்ற பக்ஷி மிகவும் கடுமையாகக் கத்துவதால் நாம் சத்ருக்களை அதி சீக்ரத்தில் ஜயிப்போமென்று தெரிவிக்கிற"தென்றுர்.

இப்படி இருவரும் பேசிக்கொண்டு அந்தக் காட்டில் தேடுகையில், அந்த வனத்தை யாரோ அதிவேகமாக முறிப்பதைப் போன்ற ஒரு பெருஞ் சப்தமுண்டாயிற்று; ப்ரளய காலவாயுவைப்போல் ஒரு பெருங்காற்றுக் கிளம்பிற்று. அந்தச் சப்தத்தால் பூமியும் ஆகாசமும் கிடுகிடுத்தன. அது எங்கிருந்து வந்ததென்று ராம லக்ஷ்மணர்கள் கவனித்துப் பார்க்கையில், நெடுந்தூரத்திலுள்ள ஒரு புதரில் மலையைப்போன்ற ஒரு ராக்ஷஸன் நிற்கக் கண்டார்கள். அவனுடைய பருத்த வயிறும் கோரமான ரூபமுமே முதலில் காணப்பட்டன. பிறகு கிட்டப் போய்ப் பார்க்கையில் அவனுக்குத் தலையில்லை. வயிற்றில் வாயையுடையவன். கூர்மையான அடர்ந்த மயிரையுடையவன். கறுத்த மேகத்தைப்போன்ற தேஹத்தையுடையவன். மேகங்களின் கர்ஜனையைப்போன்ற குரலையுடையவன். மஞ்சள் வர்ணமுள்ள ஒரு விசாலமான கண் அக்னிஜ்வாலையைப் போல் அவனுடைய மார்

யில் எரிந்துகொண்டிருந்தது. நீண்டு கூர்மையான பற்களுடன் அடிக்கடி உதடுகளை நக்கிக்கொண்டு, எப்பொழுதும் கரடி சிங்கம் மான் யானை புலி பக்ஷிகள் முதலியவைகளைத் தின்றுகொண்டே யிருந்தான். இவனுடைய கைகள் ஒரு யோஜனை நீளமுள்ளவை. அவைகளை நீட்டி நடுவில் அகப்பட்ட மிருகங்களையும் பக்ஷிகளையும் சேர்த்து அணைத்து, தன் வயிற்றிலுள்ள வாயில் தள்ளிக் கொண்டேயிருந்தான்.

இப்படித் தங்களுடைய வழியை மறைத்துக்கொண்டிருந்த அந்த ராக்ஷஸனை ஒரு க்ரோச தூரத்திலேயே ராம லக்ஷ்மணர்கள் கண்டார்கள். அப்பொழுது அந்தத் தலையில்லாத முண்டமான கபந்தன், தன் கைகளின் நடுவில் அகப்பட்ட மிருகங்களுடன் ராமலக்ஷ்மணர்களையும் சேர்த்துப் பிடித்து இழுத்தான். கத்தி வில் முதலிய ஆயுதங்களைத் தரித்து உக்ரமான தேஜஸுடன் மஹா பலவான்களான ராமலக்ஷ்மணர்களும் அவனுடைய பலத்திற்குட் பட்டார்கள். ராமன் மூத்தவர்; சூரர், மஹா தைர்யமுள்ளவர்; ஆகையால் கொஞ்சங்கூடப் பயப்படவில்லை. லக்ஷ்மணன் அவ் வளவு பக்வமான புத்தியையும் தைர்யமுமில்லாதவரானதால் அதிக வருத்தமடைந்தார். (ஸர்வ பரிபூரணமான மஹாவிஷ்ணுவின் அம் சங்களான ராம லக்ஷ்மண பரத சத்ருக்னர்களில் தாரதம்யம் எப் படி உண்டாகும்? அரை, கால், அரைக்கால், வீசமென்று அம் சத்தை நிறுத்து அளந்து காட்டுவது ஸாத்யமா? இதன் உண்மை யான ரஹஸ்யமென்ன?). ஸகல ப்ராணிகளுக்கும் ஆதாரமான ரகுநாதனை கபந்தனுடைய வசத்தில் அகப்பட்டதைப் பார்த்து அவருக்கு மிகவும் அதைர்யமுண்டாயிற்று. அப்பொழுது மிகுந்த வருத்தத்துடன் ராமனைப் பார்த்து, "அண்ணா! நான் இந்த ராக்ஷஸனுடைய கையில் அகப்பட்டு விட்டேன். என்னை இவ னிடத்தில் விட்டுத் தாங்கள் தப்பித்துக்கொள்ளுங்கள். என்னை இவனுக்குப் பூத பலியாகக் கொடுத்துத் தாங்கள் தப்பி ஓடுங்கள். சீக்ரத்தில் ஸீதையைக் கண்டுபிடிப்பீர்களென்று எண்ணுகிறேன். வம்ச பரம்பரையாக வந்துகொண்டிருக்கும் ராஜ்யத்தை அடைந்து தாங்கள் ஸந்தோஷமாக இருக்கும் ஸமயத்தில் என்னையும் அடிக் கடி நினைத்துக்கொள்ளும்படி ப்ரார்த்திக்கிறே" னென்றார். ராமன் "குழந்தாய்! பயப்படாதே. நீ வீரனல்லவா? உன்னைப் போன்ற

வர்கள் இவ்விதமான கஷ்டங்கள் நேர்ந்தும் மனம் தளர்வார்களா"வென்று அவரைத் தேர்த்திக் கொண்டிருந்தார். அப்பொழுது அந்தக் கொடிய ராக்ஷஸன் ராமலக்ஷ்மணர்களைப் பார்த்து "நீங்கள் யார்? கொழுத்த காளைகளைப்போன்ற தோள்களுடன் ஆயுதபாணிகளாக இந்தக் கோரமான தேசத்தில் எனக்கு ஆஹாரமாகும்படி எங்கே வந்து சேர்ந்தீர்கள்? இங்கே உங்களுக்கு என்ன வேலை? மிகுந்த பசியுடன் இங்கே காத்துக்கொண்டிருக்கும் என் வாயில் விழுந்தபிறகு, உங்களுடைய உயிரில் ஆசையை விடுங்க"ளென்றான். ராமன் வருத்தத்தால் முகம் வாடியிருக்கும் லக்ஷ்மணனைப் பார்த்து "ராஜ்யத்தை இழந்தது, காட்டிற்கு அனுப்பப்பட்டது, ஸீதையைப் பறிகொடுத்தது, அவளைக் காணாமல் தபிப்பது இவ்வளவு துக்கங்களும் போதாதா? அவைகளைக் காட்டிலும் இது பெரிய துக்கமாக இருக்கிறது. உயிருக்கே மோசம் வருமென்று எண்ணுகிறேன். நம்மைப் போன்றவர்களே துன்பங்களால் புத்தி மயங்கியிருக்கிறோமல்லவா? காலத்தின் மஹிமை எல்லையற்றது. அதை வெல்ல ஒருவராலும் முடியாது. ஸகல ப்ராணிகளிடத்திலும் அது செய்யக்கூடாத கார்யம் ஒன்றுமில்லை. சூரர்களும் பலவான்களும் அஸ்த்ர வித்யையிலும் யுத்தத்திலும் நிபுணர்களும் காலத்தின் வசத்தில் அகப்பட்டு, ஆற்று ஜலத்தால் கரைக்கப்பட்ட மணல் பாலங்களைப்போல் அழிகிறார்க"ளென்று வருத்தமடைந்தார்.

மஹா ப்ரதாபசாலியும் மஹா கீர்த்திமானும் வீண்போகாத பராக்ரமமுடையவருமான ராமன், தன் வார்த்தைகளைக் கேட்டு லக்ஷ்மணன் தைர்யமடையாததைப் பார்த்து, தனக்கு ஸ்வபாவமான தைர்யத்தையும் புத்தியையும் யுக்தியையும் ஸ்திரப்படுத்திக் கொண்டார்.

——: o :——

## ஸர்க்கம் 70.

## கபந்த வதம்

அப்பொழுது ராமலக்ஷ்மணர்கள் தன் கைக்குள் அகப்பட்டுப் பயத்தால் தபிப்பவர்களைப்போல் நிற்கக்கண்டு கபந்தன் "நான் பசியால் வாடி தபிப்பதைப் பார்த்து தைவமே உங்களை எனக்கு

ஆஹாரமாக அனுப்பியிருக்க, பித்துப் பிடித்தவர்களைப்போல் ஏன் என்னைப் பார்த்துக்கொண்டு நிற்கிறீர்கள். உங்களைக் கவனித்தால் ராஜபுத்ரர்களைபோல் தோன்றுகிறதே"யென்று கர்ஜித்தான். அதைக் கேட்டு லக்ஷ்மணன் வருத்தமடைந்து ராமனைப் பார்த்து ஸமயோசிமாகவும் ஹிதமாகவும் "அண்ணா! இந்த ராக்ஷஸன் நம்மிருவரையும் விழுங்குவதற்குமுன் கத்திகளால் இவனுடைய புஜங்களை வெட்டித் தள்ளுவோம். கோர ரூபத்தையும் மலைபோன்ற சரீரத்தையுமுடைய இவன் தன் புஜங்களின் பலத்தால் கொழுப்படைந்து, ஸகல ப்ராணிகளையும் ஜயித்து ஹிம்ஸித்துக் கொண்டிருக்கிறான். முடிவில் நம்மையும் கொல்லப் பார்க்கிறான். அச்வமேதம் முதலிய யாகங்களில் பலிக்காகக் கொண்டுவரப்பட்ட பசுக்களில் முக்யமில்லாதவைகளை அக்னியைச் சுற்றுவித்து விட்டு விடுவதுபோல், இருந்த இடத்தைவிட்டு அசையமுடியாமல் தன்னைக் காப்பாற்றச் சக்தியில்லாத இவனைக் கொல்வது ந்யாயமல்ல. ஆகையால் இவனுடைய புஜங்களை மாத்ரம் வெட்டித் தள்ளுவோ"மென்றார். (அவனைக் கொல்வதே நலம். அவனுக்கு ஆஹாரத்தை ஸம்பாதிக்க முக்யமான கருவியாயிருக்கும் புஜங்களை வெட்டி அவன் பசியால் நெடுங்காலம் வதைப்பட்டுச் சாகும்படி செய்வது வெகு கொடியது. ஜீவகாருண்யமுள்ள க்ஷத்ரியர்கள் செய்யத் தகாது. முன்பு சூர்ப்பநகையையும் பின்பு அயோமுகியையும் கொல்லாமல் சித்ரவதை செய்துவிட்ட லக்ஷ்மணன் இப்படிச் சொல்வது ஆச்சர்யமல்ல.)

இப்படி இவர்கள் பேசிக்கொண்டிருப்பதைக் கேட்டு அந்த ராக்ஷஸன் கோபங்கொண்டு பயங்கரமாக வாயைத் திறந்து அவர்களை விழுங்க ஆரம்பித்தான். உடனே ராம லக்ஷ்மணர்கள் கத்திகளை உருவி அவனுடைய புஜங்களை அடியோடு அறுத்துத் தள்ளினார்கள். ராமன் வலது கையும் லக்ஷ்மணன் இடது கையையும் அறுத்தவுடன், ஆகாசம் பூமி திக்குகள் நடுங்கும்படி அவன் மஹாமேகங்களைப்போல் கர்ஜித்துக்கொண்டு பூமியில் விழுந்தான். தனக்கு ப்ராணாதாரமான கைகள் அறுபட்டுச் சக்தியற்று ரக்த வெள்ளத்தால் நனைந்து பயத்தால் நடுங்கி மிகவும் தீனமாக "நீங்கள் யா"ரென்றான். லக்ஷ்மணன் "இவர் இக்ஷ்வாகு குலத்தில் பிறந்த ராஜபுத்ரன்; ராமனென்று ப்ரஸித்தி பெற்றவர். நான்

அவருக்குத் தம்பி ; என் பெயர் லக்ஷ்மணன். நாங்கள் ஜன ஸஞ் சாரமில்லாத இந்தக் காட்டில் ஒண்டியாக வஸித்துக்கொண்டிருக் கும்பொழுது, தேவதைகளைப்போல் பராக்ரமமுடைய இந்த ரகு நாதனுடைய பார்யையை எவனே ஒரு ராக்ஷஸன் எடுத்துக் கொண்டு போய்விட்டான். அவளைத் தேடிக்கொண்டு இங்கே வந்தோம். நீ யார்? கபந்தத்தைப்போல் மார்பில் வாயுடன் இங்கே ஏன் திரிகிருய்? கணுக்கால் முறிந்து பூமியில் ஏன் விழுந்து புறளுகிருய்'' என்ருர். இந்த்ரன் முன்பு தனக்குச் சொன்ன வார்த்தைகள் கபந்தனுடைய ஞாபகத்திற்கு வந்தன. அவனுக்கு மிகுந்த ஸந்தோஷமுண்டாகி, "புருஷோத்தமர்களே! தங்களுக்கு நமஸ்காரம். க்ஷேமமாக வந்தீர்களாக? தங்களைப் பார்த்து நான் தன்யனுனேன். விலங்குகளைப்போல் என்னைத் துன்பப்படுத்திக் கொண்டிருந்த இந்தக் கைகள் தங்களால் வெட்டப்பட்டது எனக்குப் பெரிய அனுக்ரஹம். இந்த விகார மான ரூபம் எனக்குக் கிடைத்த காரணத்தைத் தெரிவிக்கிறேன், கேளுங்கள்".

—:o.—

## ஸர்க்கம் 71.

## கபந்தனுடைய பூர்வ ஜன்மம்

முன்னொரு காலத்தில் சந்த்ரனையும் ஸூர்யனையும் இந்த்ரனை யும் போல அழகும் பராக்ரமமும் பொருந்தின ரூபம் எனக் கிருந்தது. இது மூன்று லோகங்களிலும் ப்ரஸித்தமான விஷயம். ஆனல் அதை மாற்றிப் பயங்கரமான ரூபத்தை எடுத்து ரிஷிகளையும் தபஸ்விகளையும் பயமுறுத்திக் கொண்டிருந்தேன். ஒரு நாள் ஸ்தூல சிரஸென்ற மஹர்ஷி காட்டில் ஆஹாரத்தைத் தேடிக் கொண்டிருக்கையில் நான் திடீரென்று போய் அவரைப் பய முறுத்தி, அவருடைய கையிலிருந்த பொருள்களைப் பிடுங்கிக் கொண்டேன். அவர் கோபங்கொண்டு "நீ இப்பொழுது தரித் திருக்கும் கோர ரூபமே எப்பொழுதும் நிலைபெறட்டும். இந்தக் கொடிய ரூபத்தைப் பார்த்து ப்ராணிகள் யாவும் உன்னை நிந்திக் கட்டு"மென்ருர். உடனே நான் பயந்து அவரை மிகவும் வணக்க மாக ப்ரார்த்தித்து "ஸ்வாமி! என் அபராதத்தை மன்னியுங்கள்.

என்னிடத்தில் கிருபை செய்து இந்தச் சாபத்திற்கு ஒரு முடிவை ஏற்படுத்தவேண்டு"மென்று ப்ரார்த்தித்தேன். அதற்கு அவர் "ரகுநாதன் எப்பொழுது உன் புஜங்களை வெட்டி ஜனஸஞ்சார மில்லாத காட்டில் உன்னைக் கொளுத்துவாரோ அப்பொழுது உனக்குச் சாபம் தீர்ந்து, பூர்வ ரூபமும் அளவற்ற க்ஷேமமும் கிடைக்கு"மென்று அருளினர். ஸகல ஐச்வர்யங்களும் பொருந் தின நான் தனுவென்பவனுடைய புத்ரன். பிறகு நான் கடுந்தப ஸால் ப்ரஹ்மாவை ஸந்தோஷப்படுத்தி நீண்ட ஆயுளையும் அதிக பலத்தையும் பெற்றேன். 'இந்த்ரன் என்னை என்ன செய்ய முடியு'மென்று எனக்கு அடங்காத கர்வமுண்டாயிற்று என் குலத்திற்குச் சத்ருவான தேவராஜனை ஜயிக்க நினைத்து அவரை யுத்தத்திற்கழைத்தேன். ஆயிரம் முனைகளுள்ள வஜ்ராயுதத்தை அவர் என்மேல் ப்ரயோகிக்க, அது என் தலையை மார்பிலும் கால் களை வயிற்றிலும் அழுத்திவிட்டது. "என் ப்ராணனைக் காப்பாற்ற வேண்டு"மென்று அவரைக் கெஞ்சிக் கேட்டேன். அவர் என் னிடத்தில் இரக்கம் வைத்து "ப்ரஹ்மாவின் வரம் பொய்யாகக் கூடாது. ஆகையால் நீ தப்பின"யென்று என்னைக் கொல்லாமல் விட்டார். 'ஸ்வாமி! வஜ்ராயுதத்தால் அடிபட்டுக் கழுத்தும் கால் களும் ஒடிந்து, ஆஹாரமுமின்றி, வெகுகாலம் எப்படிப் பிழைத் திருப்பே'னென்று ப்ரார்த்தித்தேன். அப்பொழுது இந்த்ரன் எனக்கு வயிற்றில் வாயையும் கூர்மையான பல்லுகளையும் ஒரு யோஜனை நீளமுள்ள கைகளையும் ஏற்படுத்தி, "ராமலக்ஷ்மணர்கள் எப்பொழுது உன் புஜங்களை வெட்டித் தள்ளுவார்களோ அப் பொழுது ஸ்வர்க்கத்திற்கு வருவா"யென்றார்.

அது முதல் இந்தக் காட்டிலுள்ள எல்லா மிருகங்களையும் என் கைகளால் இழுத்து நசுக்கித் தின்றுகொண்டிருக்கிறேன். எந்தப் பிராணி அகப்பட்டாலும் விடுவதில்லை. மஹர்ஷியின் வார்த்தையில் எனக்குள்ள நம்பிக்கையால் ராமன் என்னிடத்தில் எப்படியாவது அகப்படுவாரென்ற எண்ணத்துடன் இந்த விகார மான தேஹத்தை எப்பொழுது விடுவேனோவென்று காத்துக் கொண்டிருக்கிறேன். "உன்னைக் கொல்ல வேறு எவராலும் முடியா"தென்று அந்த மஹர்ஷி சொல்லியிருக்கிறபடியால், தாங்களே ராமனென்பதில் ஸந்தேஹமில்லை. ஜானகியைக் கண்டு

பிடிக்க ஒரு உபாயம் சொல்லுகிறேன். அதற்குத் தகுந்த மித்ர னைக் காட்டுகிறேன். ஆனால் என்னை நீங்கள் கொளுத்தினலொழிய அது என்னல் முடியா"தென்றான்.

ராமன் அவனைப்பார்த்து "நானும் என் தம்பியும் ஜனஸ் தானத்தில் வஸித்துக்கொண்டிருந்தோம். ஒரு நாள் வெளியில் போயிருக்கும்பொழுது ராவணனென்ற ராக்ஷஸன் என் பார்யையை அபஹரித்தான். அவனுடைய பெயர் மாத்ரம் எங்க ளுக்குத் தெரியுமேயொழிய அவனுடைய ரூபமாவது இருப்பிடமா வது பராக்ரமமாவது தெரியாது. சோகத்தால் பீடிக்கப்பட்டு அநாதைகளாக இப்படித் திரியும் ஜனங்களுக்கு பரோபகாரஞ் செய்வது உன்னைப் போன்றவர்களுக்குத் தகும். பெரிய குழியை வெட்டி, யானைகளால் இந்தக் காட்டில் முறித்துத் தள்ளப்பட்ட உலர்ந்த கட்டைகளை அதில் அடுக்கி, உன்னை எரிக்கிறோம். பிறகு நீ உனக்குத் தெரிந்தவரையில் ஸீதையை யார் அபஹரித்தான், எவ்விடத்தில் வைத்திருக்கிறனென்று சொல்ல வேண்டு"மென்றார்.

அப்பொழுது தனு வெகுசாதுர்யமாக "இந்தத் தேஹம் எரிந்து முன் தேஹம் கிடைத்தவுடன் ஸீதையின் வரலாற்றை அறிந்தவனைக் கண்டுபிடித்துச் சொல்லுகிறேன். ஆனால் அதை நேரில் அறியக்கூடிய திவ்யஞானம் எனக்கில்லை. இந்த ஞானமும் சாபத்தால் வந்த இந்தக் தேஹம் அழிந்த பிறகே உண்டாகும். இப் பொழுது சாபத்தால் என் ஞானம் மறைந்திருக்கிறது. நான் செய்த பாபத்தால் லோகத்தார் நிந்திக்கும் இந்த விகார ரூபம் எனக்குக் கிடைத்தது. ஸூர்யன் அஸ்தமிக்குமுன்பு என் தேஹத்தைக் குழியில் தள்ளிக் கொளுத்த வேண்டும். அந்த ராக்ஷஸனை அறியக்கூடியவனைப் பிறகு தெரிந்து சொல்லுகிறேன். அந்த ஸாதுவுடன் நீங்கள் ஸ்நேஹஞ்செய்ய வேண்டும். அந்த மஹாபராக்ரமசாலி தங்களுக்குப் பூர்ணமாக உதவி செய்வான். அவனுக்கு மூன்று லோகங்களிலும் தெரியாத விஷயம் கிடை யாது. முன்பு ஒரு ஸமயத்தில் ஏதோ காரணத்தால் அவன் ஸகல லோகங்களையும் சுற்றித் திரிந்திருக்கிற"னென்றான்.

—:o:—

ஸர்க்கம் 72

## கபந்த சாபவிமோசனம்

பிறகு ராமலக்ஷ்மணர்கள் ஒரு பெரிய குழியை வெட்டி, பெரிய கட்டைகளை அடுக்கி, அவைகளின்மேல் கபந்தனுடைய சரீரத்தைத் தள்ளினார்கள். லக்ஷ்மணன் கொள்ளிக்கட்டைகளால் நான்கு புறத்திலும் தீ மூட்டினார். கொழுப்பாலும் தசையாலும் மாம்ஸத்தாலும் நிறைந்த அந்தத் தேஹம் நெய்யால் செய்யப் பட்ட மலையைப்போல் மெள்ள மெள்ள எரிந்தது. அப்பொழுது புகையில்லாத அக்னியைப்போல் அந்தச் சிதையிலிருந்து கபந்தன் எழுந்து, திவ்ய வஸ்த்ராபரணங்களாலும் மாலைகளாலும் அலங் கரிக்கப்பட்டு, அன்னங்களால் இழுக்கப்பட்ட விமானத்திலேறி, தன் தேஜஸால் எல்லா திக்குகளும் ப்ரகாசிக்க, ஆகாசத்திலிருந்தே "ராம! ஸீதையைக் கண்டுபிடிக்கும் உபாயத்தைச் சொல்லு கிறேன். ஸந்தி விக்ரஹம் யானம் ஆஸனம் த்வைதீபாவம் ஸமா ச்ரயமென்று ஆறு யுக்திகள் லோகத்தில் வழங்குகின்றன. அவை களை நன்றாக அறிந்து, தகுந்த ஸமயங்களில் உபயோகிப்பதால் அரசர்களுக்கு ஜயமும் க்ஷேமமும் கிடைக்கின்றன. கஷ்ட தசையை அடைந்தவன் தன்னைப்போல் கஷ்டப்படும் ஒருவனுடன் சேர்ந்தே கார்யத்தை முடித்துக்கொள்ள வேண்டும். உங்களுக்கு நேர்ந்த கஷ்டங்களால் நீங்கள் இப்பொழுது தாழ்ந்த நிலைமையை அடைந்தவர்களென்று எளிதில் தெரிந்துகொள்ளலாம். ஆகையால் தகுந்த மித்ரனுடைய உதவியை நீங்கள் ஸம்பாதிக்கவேண்டும். நான் எவ்வளவு யோசித்துப் பார்த்தும், உங்களைப்போல் கஷ்டப் பட்டு உங்களுடைய ஒத்தாசையை விரும்பும் மித்ரனை நீங்கள் சேர்த்துக்கொள்ளாவிட்டால் உங்கள் கார்யம் கைகூடாதென்று தோன்றுகிறது. பம்பையென்ற ஏரிக்கு ஸமீபத்திலுள்ள ரிச்ய மூகபர்வதத்தில் ஸுக்ரீவனென்று ஒரு வானரராஜனிருக்கிறான். இந்த்ரனுடைய புத்ரனான வாலியென்ற அவனுடைய அண்ணன் அவனிடத்தில் கோபங்கொண்டு அவனை ராஜ்யத்திலிருந்து துரத்தி விட்டான். இப்பொழுது அவன் தன்னிடத்தில் மிகுந்த பக்தி யுள்ள நான்கு வானர வீரர்களுடன் தனியாக வஸித்துக்கொண் டிருக்கிறான். அவன் உங்களைப்போல் உத்தம குணங்கள் பொருந் தினவன், நிகரற்ற தேஜஸும் வீர்யமும் காந்தியும் வாய்ந்தவன்;

ஸத்யம் தவருதவன், ஸாதுக்களால் பழக்கப்பட்டவன், மஹாதைர்யசாலி, மஹாபுத்திமான், ஸமர்த்தன், மென்மேலும் தோன்றும் யுக்தியையுடையவன். எல்லையற்ற பல பராக்ரமமுடையவன், உங்களைப்போல் மிகுந்த கஷ்டங்களை அனுபவித்தவன். அவனுடைய அண்ணன் அவனிடத்திலிருந்து ராஜ்யத்தைப் பிடுங்கிக்கொண்டு அடித்துத் துரத்திவிட்டான். ஸீதையை தேடிக்கொண்டு வருவதில் உங்களுக்கு ஸகல உதவியையும் செய்யக்கூடியவன் இவனே. இதைப்பற்றிக் கொஞ்சங்கூடக் கவலைப்பட வேண்டாம். கர்மகதியின்படி நடக்கவேண்டிய கார்யங்கள் நடந்தே தீரும்; அவைகளை மாற்ற முடியாது. காலத்தை ஜயித்தவர்களுண்டோ?

இப்பொழுதே இங்கிருந்து போய் அந்த ஸுக்ரீவனைக் கண்டு பிடித்து, ஒருவர்க்கொருவர் த்ரோஹமின்றி உதவி செய்யும் பொருட்டு அக்னியை ஸாக்ஷியாக வைத்துக்கொண்டு ஸ்நேஹஞ் செய்யுங்கள். இந்தக் குரங்கு நமக்கு என்ன உதவி செய்யுமென்று அவனை அலக்ஷ்யஞ் செய்யவேண்டாம். அவன் ஸகல வானரர்களுக்கும் அதிபதி, நன்றியுள்ளவன், மஹாவீரன், நினைத்த ரூபங்களை எடுக்கக்கூடியவன், உங்களுடைய ஒத்தாசையை வேண்டினவன், நீங்களும் அவனுக்கு ஆகவேண்டியவைகளை முடிக்கக்கூடியவர்கள். அப்படிச் செய்யாவிட்டாலும் உங்கள் கார்யத்தை முடித்துக் கொடுப்பான். அவன் ரிக்ஷராஜஸின் புத்ரன்; ஸூர்யனுக்குப் பிறந்தவன். இப்பொழுது வாலிக்குப் பயந்து பம்பைக் கரையில் மறைந்திருக்கிறான். நீங்கள் அவனைக் கண்டுபிடித்து அக்னியையும் ஆயுதங்களையும் ஸாக்ஷியாக வைத்துக்கொண்டு என்றுமழியாத ஸ்நேஹத்தைச் செய்யுங்கள். இந்த லோகத்தில் ராக்ஷஸர்கள் வஸிக்கும் ஸகல இடங்களையும் அவன் அறிவான். ஸூர்யனுடைய ப்ரகாசம் எட்டும் வரையிலுள்ள ப்ரதேசங்களில், மலைகளையும் ஆறுகளையும் குஹைகளையும் ஏரிகளையும் வனங்களையும் ஸமுத்ரங்களையும் த்வீபங்களையும் தன்னைச் சேர்ந்த வானரர்களால் தேடி, எப்படியாவது ஸீதையிருக்குமிடத்தைக் கண்டுபிடிக்க, பெரிய மலைகளைப்போன்ற சரீரங்களுள்ள வானர வீரர்களை எல்லா திக்குகளிலும் அனுப்புவான். தங்களைவிட்டுப் பிரிந்து துக்கத்தால் தபிக்கும் ஸீதை

ராவணனுடைய ராஜதானியான லங்கையிலிருந்தாலும் மேருமலைச் சிகரத்திலிருந்தாலும் பாதாளத்திலிருந்தாலும் இன்னும் எவ்விடத்திலிருந்தாலும் அவனைத் தேடிக் கண்டுபிடித்து ராக்ஷஸர்களை நாசஞ் செய்து, ஸீதையைக் கொண்டுவந்து தங்களிடத்தில் ஒப்புவிப்பா" னென்றான்.

—:o:—

## ஸர்க்கம் 73.

## கபந்த மோக்ஷம்

இப்படிக் கபந்தன் ஸீதையை அடையும் உபாயத்தை ராமனுக்குத் தெரிவித்து, "இதோ மேற்கே போகிற வழி ரிச்யமுகபர்வதத்திற்கு உங்களைக் கொண்டுபோய்விடும். நாவல் முரளஞ்செடி பலா கினி ஆல் தும்பை அரசுமலைக் கோங்கு மா தவம் நாககேஸரம் மஞ்சாடி புங்கை கறுப்பு அசோகம் கடம்பு அலரி அசோகம் சிவப்புச் சந்தனம் வேம்பு முதலிய அநேக விருக்ஷங்கள் பழங்களால் நிறைந்திருப்பதைப் பாரும். அவைகளிலிருக்கும் பழங்களைப் பறித்தாவது அடித்தாவது தின்றுகொண்டு ப்ரயாணஞ் செய்யவேண்டும். அதைத் தாண்டிப் போனல் நந்தனமென்ற ஸ்வர்க்க லோகத்துத் தோட்டத்தைப்போலும், உத்தரகுரு தேசத்திலுள்ள வனங்களைப்போலும் அழகிய ஒரு காடு தோன்றும். சைத்ரரதமென்ற தோட்டத்தைப்போல் அங்கே எப்பொழுதும் எல்லா ருதுக்களிலும் உண்டாகும் புஷ்பங்களும் பழங்களும் வளரும். மரங்களிலிருந்து தேன் வெள்ளமாக ஓடும். மரங்கள் பழங்களால் வணங்கி விசாலமான கிளைகளுடன் மேகங்களையும் மலைகளையும்போல் விளங்கும். அவைகளிலுள்ள அமிருதத்தைப் போன்ற பழங்களை அடித்தாவது ஏறிப் பறித்தாவது லக்ஷ்மணன் தங்களுக்குக் கொடுப்பார். அங்கிருந்து காடுகளையும் மலைகளையும் பல தேசங்களையும் தாண்டிப் பம்பைக் கரைக்கு வருவீர்கள்.

கால்களில் குத்தும்படியான சிறிய கல்லுகள் அங்கேயில்லை; கரைகள் இடிந்திராது; இறங்கும் துறைகள் அதிக ஆழமில்லை; பாசி படர்ந்திராது; பொடி மணல் படிந்திருக்கும்; தாமரை செங்குவளை வெண் குவளை முதலிய புஷ்பங்கள் அழகாக மலர்ந்

திருக்கும்; அன்னங்கள் க்ரௌஞ்சங்கள் நீர்க்காக்கைகள் தவனிகளு் மதுரமாகக் கத்தும்; மனிதர்களால் தங்களுக்குக் கெடுதி நேருமென்று அவையறியாததால் உங்களைக் கண்டு பயப் படாது. நெய்க்கட்டிகளைப்போன்ற அந்த கொழுத்த பக்ஷிகளை யும், செங்கயல் அயிரை முதலிய பலவித மான்களையும் லக்ஷ்மணன் பாணங்களால் அடித்து, தோலையும் இறகுகளையும் நீக்கி, நெருப் பில் வாட்டிப் பக்வஞ் செய்து தங்களுக்குக் கொடுப்பார். தாங்கள் அதைப் புஜித்துத் தாமரை இலையில் கொண்டுவந்து கொடுக்கப்பட்ட சுத்தமான ஜலத்தைக் குடியுங்கள். அது தாமரைகளின் வாஸனையால் கூடிக் குளிர்ந்து வெள்ளியைப் போலும் ஸ்படிகத்தைப்போலும் தெளிந்து, தேஹத்திற்கு மிகுந்த ஆரோக்யத்தைக் கொடுக்கும். அங்குள்ள மலைக் குஹைகளி லிருந்து பல பெரும் பன்றிகள் விசித்ரமான ரூபங்களுடன் விருஷ பங்களைப்போல் கத்திக்கொண்டு அந்த ஏரியில் ஜலம் குடிக்க வரும். ஸாயங்காலத்தில் அங்கே உலாவும்பொழுது புஷ்பங் களால் நிறைந்த மரங்களையும் மலர்ந்த தாமரை கருநெய்தல் குவளை ஆம்பல் முதலிய புஷ்பங்களால் அலங்கரிக்கப்பட்டிருக்கும் பம்பையின் குளிர்ந்த ஜலத்தையும் பார்த்து, தங்களுடைய துக் கத்தை மறப்பீர்கள். அந்த வனம் மிகவும் விஸ்தாரமானதாலும் புஷ்பங்கள் அதிகமானதாலும் மதங்கரிஷியின் சிஷ்யர்கள் சபிப் பார்களென்ற பயத்தாலும் அவைகளை ஒருவரும் பறிப்பதில்லை; அவை வாடுவதில்லை; உதிர்வதுமில்லை. அந்த மஹர்ஷிகள் அங்கே தபஸ்செய்துகொண்டிருக்கையில் ஆஹாரம் தேட அடிக்கடி அந்த வனத்தில் ஸஞ்சரிப்பார்கள். பழங்களையும் கிழங்குகளையும் புஷ்பங்களையும் விறகுகளையும் பெருஞ் சுமைகளாக, தங்கள் குருவின் ஆச்ரமத்திற்குக் கொண்டுவரும்பொழுது அவர்களுடைய தேஹத்திலிருந்து விழுந்த வியர்வைத் துளிகள் காற்றால் மரங் களின்மேல் அடிக்கப்பட்டு புஷ்பமாலைகளாக மாறின. அந்த ரிஷிகளுடைய தபோமஹிமையால் அவை அழிவதில்லை.

சபரியென்ற ஒரு பெண் ஸந்யாஸி வெகுகாலமாக அவர் களுக்குப் பணிவிடை செய்துவருகிருள். அவள் மிகவும் வயஸ் சென்றவள். தேவர்களுக்கு ஸமமாகவும் ஸகல ப்ராணிகளாலும் பூஜிக்கப்பட்டவராகவுமிருக்கும் தங்களைத் தர்சித்தபிறகே

தேஹத்தை விடவேண்டுமென்று காத்துக்கொண்டிருக்கிருள். பம்பைக்கு மேற்குக் கரையில் அந்த ரிஷிகளின் ஆச்ரமும் ஒரு ரஹஸ்யமான இடத்திலிருக்கிறது. அந்த வனத்திலும் ரிச்யமூக பர்வதத்திலும் பல யானைகளுண்டு. ஆனல் மதங்கரிஷியின் கட்டளையால் அவை அந்த ஆச்ரமத்திற்கு ஸமீபத்தில் வருவதில்லை. நந்தனமென்ற இந்த்ரனுடைய தோட்டத்தைப்போல் அழகிய அந்த வனத்தில் வெகு ஸந்தோஷத்துடன் எல்லா துக்கங்களையும் மறந்து வஸிப்பீர்கள்.

ரிச்யமூகபர்வதம் பம்பைக்குக் கீழ்க்கரையிலிருக்கிறது. முன் காலத்தில் ப்ரஹ்மா அதற்கு ஒரு மஹிமையை ஏற்படுத்தினர். அதன் உச்சியில் ஒருவன் படுத்துத் தூங்கினல் கனவில் எந்த ஐச்வர்யத்தைக் காண்கிருனே அதை விழித்துக்கொண்டவுடன் அடைகிருர். துஷ்டர்களும் பாபிகளும் அதில் ஏறத்துணிவதில்லை. ஏறினல் தூங்கும்பொழுது ராக்ஷஸர்கள் அவர்களைத் தூக்கிக் கொண்டு போய்க் கொன்றுவிடுகிருர்கள். புஷ்பங்களால் மறைந்த அந்த மலையிலும் அதைச் சுற்றின காடுகளிலும் யானைக் குட்டிகள் அதிகமானதால் அதில் ஏறுவது ஸாத்யமல்ல. அவை பம்பைக் கரையில் விளையாடும்பொழுது வீறிடும் பெரிய சப்தம் வெகுதூரம் கேட்கப்படும். யானைகள் ஒன்ருேடொன்று சண்டை யிட்டு ரக்தம் பெருகக் கறுத்த மேகங்களைப்போல் அங்குமிங்கும் ஓடிக் கொண்டிருக்கும். அவை பம்பையின் குளிர்ந்த ஜலத்தைக் குடித்து ஸந்தோஷமாக அடுத்த காடுகளில் கூட்டங் கூட்டமாகத் திரிகின்றன. அங்கே கரடிகளையும் சிறுத்தைகளையும் செந்நாய்களை யும் மான்களையும் இன்னும் விசித்திரமான பல மிருகங்களையும் கண்டு ஸந்தோஷிப்பீர்கள்.

அந்த மலையில் ஒரு பெரிய குஹையுண்டு. அது கற்பாறை யால் மூடப்பட்டிருக்கிறது. அதற்குக் கிழக்கில் குளிர்ந்த ஜலத் தால் நிறைந்த ஒரு பெரிய மடு உண்டு. அங்கே பழம் கிழங்கு முதலிய பொருள்கள் வேண்டியவரையில் கிடைக்கும். பல வகைப் பக்ஷிகளாலும் மிருகங்களாலும் நிறைந்திருக்கும். ஸுக்ரீ வன் நான்கு வானர வீரர்களுடன் அங்கே வஸித்துக்கொண்டிருக் கிருன். ஒரு வேளை அந்த மலையின் உச்சியிலுமிருப்பா"னென்று மேல் நடக்க வேண்டிய காரியங்களை ராம லக்ஷ்மணர்களுக்கு

உபதேசித்து, அவர்களிடத்தில் உத்திரவு பெற்றுக்கொள்ளக் காத்திருந்தான். அவர்கள் அவனுக்கு ஸமீபத்தில் போய் வெகு ப்ரீதியுடன் "நீ உத்தம லோகங்களை அடையக் கடவாய். போய் வா"வென்று அனுமதிகொடுத்தார்கள். அவன் "நீங்கள் உத்தேசித்த கார்யம் கைகூடும். போய் வாருங்க"ளென்று விமானத்திலேறிப் போனான்.

இப்படிக் கபந்தன் ஸூர்யரூபத்தை அடைந்து ஸூர்யனைப் போல் ஜ்வலிக்கும் தேஹத்துடன் "ராம! ஸுக்ரீவனுடைய ஸ்நேஹத்தை ஸம்பாதித்துக்கொள்"ளென்று அவருக்கு உபாயத்தைச் சொல்லி ஸ்வர்க்கத்திற்குப் போனான்.

——:o:——

## ஸர்க்கம் 74.

## சபரி மோக்ஷம்

கபந்தன் காட்டின் வழியாக ராமலக்ஷ்மணர்கள் மேற்கு முகமாக ப்ரயாணஞ் செய்து, மதுரமான பழங்கள் நிறைந்த பல மரங்களைப் பார்த்துக்கொண்டே போனார்கள். அன்று ராத்திரியில் அந்த மலையில் தங்கி மறுநாள் பம்பையின் மேற்குக் கரையிலுள்ள சபரியின் ஆச்ரமத்திற்குப் போனார்கள். வயஸ்சென்ற சபரி அவர்கள் வருவதைக் கண்டு எழுந்து கைக்கூப்பி ராமலக்ஷ்மணர்களை ப்ரதக்ஷிணஞ் செய்து நமஸ்கரித்து, அர்க்யம் பாத்யம் ஆசமனீயம் முதலியவைகளால் விதிப்படிப் பூஜித்தாள். அப்பொழுது ராமன் மஹாதபஸ்வியான சபரியைப் பார்த்து "அம்மா! உன் தபஸ் விக்னமில்லாமல் வளர்கிறதா? கோபத்தை ஜயித்தாயா? ஆஹார நியமத்தை அனுஷ்டிக்கிருயா? வ்ரதங்களை விதிப்படி நடத்தி வருகிருயா? சாந்தமும் ஸந்தோஷமும் மனதில் நிறைந்திருக்கின்றனவா? நீ செய்த குருசுச்ரூஷை பயன் பெற்றதா" வென்று க்ஷேமம் விசாரித்தார்கள்.

அதைக் கேட்டுச் சபரி எழுந்து கைகூப்பி வணக்கமாக "ஸ்வாமி! இன்று தங்கள் தர்சனம் கிடைத்தபடியால் என் தபஸ் ஸித்தியடைந்தது. நான் செய்துவந்த தபஸும் குருசுச்ரூஷையும் இன்றுதான் பயன்பெற்றன. ஸகல தேவர்களுக்கும் நாதனை

தங்களைத் தரிசித்தபிறகு நான் பரமபதத்தை அடைவேனென்பதில் ஸந்தேஹமுண்டா? யாதொரு காரணமுமில்லாமல் பெருகும் தங்களுடைய க்ருபா கடாக்ஷ வெள்ளத்தால் நான் இதுவரையில் செய்த பாபங்களிலிருந்து விடுபட்டேன். பக்தர்களுக்கு நேரும் எல்லா இடையூறுகளையும் நாசஞ் செய்பவரே! என் ப்ராரப்த கர்மத்தால் இனி நேரும் பாபங்களிலிருந்தும் விடுபட்டேன். ஆசார்ய கிருபையை முன்னிட்ட தங்களுடைய அனுக்ரஹத்தால் நித்யமான வைகுண்டத்தை அடைவேன். ஆனல் 'உன் ஆச்சார்யர்களுடன் நீயும் ஏன் போகவில்லை'யென்றால் தாங்கள் சித்திரகூடத்திலிருக்கும்பொழுது ஆசார்யர்கள் இங்கிருந்து திவ்ய விமானங்களில் ஏறிப் பரமபதத்திற்குப் போனார்கள். மூன்று காலங்களையும் அறிந்த அந்த மஹாத்மாக்கள், யோகம் முதலிய ஸாதனங்களால் பகவானை அடைய எனக்கு அதிகாரமில்லையென்றும் ஆசார்யனுடைய கிருபையால் எனக்குப் பகவானுடைய கிருபை கிடைக்க வேண்டுமென்றும் அறிந்து, என்னைப்பார்த்து "ராமன் இந்தப் புண்யாச்ரமத்திற்கு வருவார். அவரையும் லக்ஷ்மணனையும் நீ மஹாபக்தியுடன் உபசரிக்க வேண்டும். அவரைத் தர்சித்த மஹிமையால் அழிவற்ற பரமபதத்தை அடைவா"யென்று அனுக்ரஹித்தார்கள். தாங்கள் இந்த வனத்தில் ப்ரவேசித்துச் சித்ரகூடத்தில் வந்தது முதல் இங்கே கிடைக்கும் பலவித ஆஹாரப் பதார்த்தங்களைத் தங்களுக்காக ஸம்பாதித்து வைத்திருக்கிறேன். நான் வெகு ஜாக்ரதையாக இவைகளைப் பரீக்ஷித்துப் பார்த்து மதுரமான வஸ்துக்களென்று கண்டிருக்கிறேன். (இது ஸம்ப்ரதாய அர்த்தம்;) தாங்கள் இதை அங்கீகரிக்கும்படி ப்ரார்த்திக்கிறே"னென்று தெரிவித்துக்கொண்டாள்.

ஜாதியில் தாழ்ந்தவளானலும் ஆசார்யனுடைய கிருபையால் ப்ரஹ்மஞானியான அந்தச் சபரி பகவானுக்கு மிகவும் அந்தரங்கமானவள். ஆகையால் ராமன் "அம்மா! தனுவென்பவன் மஹாத்மாக்களான உன் ஆசார்யர்களின் மஹிமையை விசேஷமாக எனக்கு எடுத்துச் சொல்லியிருக்கிறான். அதை எனக்குக் காட்ட இஷ்டமிருந்தால் நேரில் பார்க்க விரும்புகிறே"னென்றார்.

அதைக்கேட்டுச் சபரி அதிக ஆனந்தமடைந்து, ராமலக்ஷ்மணர்களுக்கு அந்த வனத்திலுள்ள விசேஷங்களைக் காட்டி "மிரு

கங்களாலும் பக்ஷிகளாலும் நிறைந்து மேகக்கூட்டங்களைப்போல் விளங்கும் இந்தப் பெரிய மதங்கவனத்தைப் பாருங்கள்; இவ்விடத்தில் மஹாஞானிகளான என் குருக்கள் மந்த்ரபலத்தால் வருவித்த கங்கை முதலிய புண்ய தீர்த்தங்களைப் பாருங்கள். விஷ்ணுவிற்காக மேற்கு முகமாக ஏற்படுத்தப்பட்ட பூஜாஸ்தானங்களைப் பாருங்கள். என் ஆசார்யர்கள் வயஸாலும் உபவாஸங்களாலும் மெலிந்து கை நடுங்க ஒவ்வொரு நாளும் புஷ்பங்களால் அர்ச்சித்து வந்தார்கள். அவர்களுடைய தபோமஹிமையால் இந்தப் பூஜாஸ்தலங்கள் இப்பொழுதும் மஹாகாந்தியுடன் ஸகல திக்குகளையும் ப்ரகாசிக்கச் செய்கின்றன. வ்ரதங்களாலும் உபவாஸங்களாலும் நடக்கச் சக்தியில்லாமல், நினைத்த மாத்திரத்திலேயே, ஏழு ஸமுத்ரங்களையும் இங்கே வருவித்து ஸ்நானஞ் செய்து வந்தார்கள். இந்த மரங்களில் அவர்கள் காயவைத்த மரவுரிகள் அவர்களுடைய தேஹத்தில் பட்ட மஹிமையால் இன்னும் உலரவில்லை. அவர்கள் மஹாபக்தியுடன் தேவதைகளுக்கு ஸமர்ப்பித்த மாலைகள் இப்பொழுதும் வாடவில்லை. இந்த வனத்திலுள்ள ஆச்சர்யங்களைத் தங்களுக்குக் காட்டி எனக்குத் தெரிந்தவரையில் சொன்னேன். இப்பொழுது தங்களுடைய உத்தரவால் இந்தத் தேஹத்தைவிட விரும்புகிறேன். நான் இவ்வளவு காலமாகப் பக்தியுடன் பணிவிடை செய்துவந்த அந்த மஹாத்மாக்களுடைய ஸமீபத்தில் போய் அவர்களுக்குக் கைங்கர்யஞ்செய்ய விரும்புகிறே"னென்று ப்ரார்த்தித்தாள்.

இப்படித் தன் ஆசார்யர்களிடத்தில் மஹாப்ரேமையுடன் அவர்களுடைய மஹிமையை வர்ணித்த சபரியால் ராமலக்ஷ்மணர்கள் மிகவும் ஸந்தோஷமடைந்து "இன்று இந்த அத்புதங்களைப் பார்க்க நமக்குக் கிடைத்த"தென்றார்கள். பிறகு ராமன் "அம்மா! நீ எனக்கென்று வெகுநாளாகச் சேர்த்துவைத்த இந்தப் பதார்த்தங்களால் மிகுந்த ஸந்தோஷமடைந்தேன். உனக்குக் குருக்களிடத்திலுள்ள பக்தியையும் நீ அவர்களுக்குச் செய்த பணிவிடையையும் பார்த்து, என்னை ஸகல உபசாரங்களாலும் பூஜித்ததுபோல் திருப்தியடைந்தேன். உனக்கு இஷ்டமான லோகங்களை அடைவா"யென்றார்.

உடனே சபரி அக்னியை மூட்டி அதில் தன் ஜீர்ணமான தேஹத்தைப் போட்டு, அதிலிருந்து மஹாப்ரகாசமுள்ள திவ்ய தேஹத்துடன் கிளம்பினுள். திவ்யாபரணங்களாலும் மாலைகளாலும் சந்தனத்தாலும் வஸ்த்ரங்களாலும் அலங்கரிக்கப்பட்டு, மின்னல் கொடிபோல் எங்கும் விளங்கச் செய்து, தன் ஆசார்யர்களான மஹர்ஷிகள் அடைந்த அழிவில்லாத புண்யலோகத்தை (பரமபதத்தை)த் தானும் ஆத்மயோகத்தால் அடைந்தாள்.

—:o:—

ஸர்க்கம் 75.

## ராம லக்ஷ்மணர்கள் பம்பைக் கரைக்கு வந்தது

தன் மஹிமையால் சபரி வைகுண்டத்தை அடைந்த பிறகு ராம லக்ஷ்மணர்கள், அந்த மஹாத்மாக்களின் விருத்தாந்தத்தை நினைத்துக்கொண்டு சற்று நேரம் அங்கே இருந்தார்கள். பிறகு ராமன் தன் கைங்கர்யத்திலேயே நாடின மனஸையுடைய லக்ஷ்மணனைப் பார்த்துக் "குழந்தாய்! இந்தப் புண்யமான ஆச்ரமத்தையும் இதிலுள்ள ஆச்சர்யங்களையும் பார்க்கும்படி இன்று நமக்குக் கிடைத்தது. இங்கே வஸிக்கும் மான்களும் புலிகளும் பக்ஷிகளும் ஒன்றிற்கொன்று ஹிம்ஸை செய்யாமல் ஸுகமாக வாழ்கின்றன. இந்த ஏழு ஸமுத்ரங்களிலும் ஸ்நானஞ்செய்து பிதிருக்களுக்கு விதிப்படி தர்ப்பணஞ் செய்தோம். நம்மைப் பிடித்திருந்த அசுபங்கள் தொலைந்தன. க்ஷேமம் பிறந்ததென்ற நம்பிக்கையால் என் மனதில் மிகவும் ஸந்தோஷமுண்டாயிருக்கிறது. நமக்கு ஸமீபத்தில் மங்களமுண்டாகும். புறப்படு, பம்பைக்குப் போவோம். ரிச்யமூகப்பர்வதம் அதோ தெரிகிறது பார். அங்கே ஸூர்ய புத்ரனை ஸுக்ரீவன் வாலியிடத்தில் பயந்து நான்கு வானர ச்ரேஷ்டர்களுடன் வஸித்துக்கொண்டிருக்கிறுன். அந்தத் தர்மாத்மாவைப் பார்க்க ஆவல்கொண்டிருக்கிறேன். ஸீதையைத் தேடிக் கண்டு பிடித்துக்கொண்டு வரும் விஷயம் அவனைப் பொறுத்திருக்கிற"தென்றுர். ராமன் துக்கங்களை மறந்து தைர்யமடைந்ததைப் பார்த்து லக்ஷ்மணனும் ஸந்தோஷித்துச் "சீக்ரமாகப் போவோம். நானும் அவனைப் பார்க்கவேண்டுமென்று பரபரப்புடனிருக்கிறே"னென்றுர்.

பிறகு அவர்கள் அந்த ஆச்ரமத்திலிருந்து புறப்பட்டு, வழியில் மதங்கஸரஸென்ற புண்யதீர்த்தத்தில் ஸ்நானம் செய்து, காட்டு மார்க்கமாய்ப் பம்பைக் கரைக்குப் போனர்கள். அங்கே அநேக ரிஷிகள் ஆச்ரமங்களில் வஸித்துக்கொண்டிருந்தார்கள். அது நான்கு புறங்களிலும் மரங்களாலும் கொடிகளாலும் சூழப்பட்டிருந்தது. தாமரைகளாலும் செங்கழுநீர்களாலும் சிலவிடங்களில் சிவப்பாகவும் ஆம்பல்களால் சிலவிடங்களில் வெளுப்பாகவும் நெய்தல்களால் சிலவிடங்களில் கறுத்தும் அநேக வர்ணங்களுள்ள கம்பளம் விரித்ததுபோல் தூரத்தில் காணப்பட்டது. அதைச் சூழ்ந்த காடுகளில் மா மஞ்சாடி மாதுளை தவம் மருதை அலரி ஸுரப்புன்னை மல்லிகை குறுக்கத்தி ஆல் கொச்சில் அசோகம் ஏழிலைப்பாலை தாழை தினிசி முதலிய அநேக மரங்கள் புஷ்பங்களாலும் பழங்களாலும் நிறைந்து, ஆடையாபரணங்களால் அலங்கரிக்கப்பட்ட ஸ்த்ரீகளைப்போல் தோன்றின. மயில்களும் சிட்டுக்குருவிகளும் கிளிகளும் மரங்கொத்திகளும் இன்னும் பல பக்ஷிகளும் மதுரமாகக் கூவிக்கொண்டிருந்தன. அந்த வனத்திலுள்ள விசித்ரங்களைப் பார்த்துக்கொண்டு ராமலக்ஷ்மணர்கள் அதிக ஜாக்ரதையுடன் பம்பையென்ற ஏரிக்கரைக்கு வந்தார்கள்.

நிர்மலமான அந்தக் குளிர்ந்த ஜலத்தையும் அதன் கரையில் பொடி மணல் மிருதுவாகப் படிந்திருப்பதையும் பக்ஷிகள் ஸந்தோஷமாகக் கூவுவதையும் மலர்ந்து பரிமளம் வீசும் புஷ்பங்களையும் பழங்களாலும் மலர்களாலும் எங்கும் நிறைந்த பல மரங்களுள்ள காடுகளையும் அவைகளில் வண்டுகள் தேனைக் குடித்து மதங்கொண்டு மதுரமாகப் பாடுவதையும் அடிக்கடிப் பார்த்து, ராமனுக்கு ஸீதையின் ஞாபகம் வந்தது. அவளைவிட்டுப் பிரிந்த துக்கம் பொங்கிற்று. அப்பொழுது லக்ஷ்மணனைப் பார்த்துக் "குழந்தாய்! கபந்தன் சொன்னபடி ரிச்யமூக பர்வதம், புஷ்பங்களால் நிறைந்த மரங்களுடன், பொன் வெள்ளி முதலிய தாதுக்களால் ப்ரகாசித்துக்கொண்டு இதோ தெரிகிறது பார். ரிக்ஷ ரஜஸின் புத்ரனுன ஸுக்ரீவனென்ற மஹாத்மா இங்கே வஸிக்கிருனென்று கேள்விப்பட்டோமல்லவா? ஆகையால் நீ அவனிடத்திற்குப் போ"வென்ருர். மறுபடியும் "லக்ஷ்மண! ராஜ்யத்தையுமிழந்து தீனனுக அந்தத் துக்கத்தையெல்லாம் ஸீதையிடத்தில்

வைத்த ப்ரீதியால் மறந்திருந்தேன். இப்பொழுது அவளில்லாமல் எப்படிப் பிழைத்திருப்பே”னென்று ப்ரலாபித்து, சோகத்தாலும் அவளைவிட்டுப் பிரிந்த தாபத்தாலும் பீடிக்கப்பட்டு அந்த ஏரியில் ஸ்நானஞ் செய்ய இறங்கினர்.

இப்படி ராமலக்ஷ்மணர்கள் அநேக வனங்களையும் நதிகளையும் மலைகளையும் பாலைவனங்களையும் தாண்டி, பல கஷ்டங்களை அனுபவித்து, நானாவிதமான மரங்களாலும் மிருகங்களாலும் பக்ஷிகளாலும் விளங்கும் பம்பையென்னும் ஏரியைக் கண்டார்கள்.

ஆரண்ய காண்டம் முற்றிற்று

——: o :——

ஸீதா லக்ஷ்மண பரத சத்ருக்ன ஹனுமத் ஸமேத
ஸ்ரீராமசந்த்ர பரப்ரஹ்மணே நம:

சுபமஸ்து.